# கல்கி

## பொருளடக்கம்



"கல்கி" யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.






| மலர் 19 | தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற | விகாரி ஆடி 31உ |
| --- | --- | --- |
| இதழ் 3 | தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | |


# வெற்றியும் எச்சரிக்கையும்

ஆட்சி மொழி விஷயத்தில் இதுகாறும் செய்து வந்த கிளர்ச்சி ஒரு சிறு வெற்றியைத் தேடித் தந்திருக்கிறது. அதை முன்னிட்டுத் தென்னாட்டவர் அனைவரும் மகிழ்ச்சி யடையலாம். ஆனால் இது போதாது; இன்னும் செய்ய வேண்டியது எவ்வளவோ இருக்கிறது என்பதை மனத்தில் கொண்டு நமது கிளர்ச்சியைத் தொடர்ந்து நடத்தித்தான் ஆகவேண்டும்.

தில்லி மக்கள் சபையில் பிரதமர் நேரு ஆங்கிலம் காலவரம்பின்றி ஹிந்தியுடன் ஆட்சி மொழியாகத் தொடர்ந்திருக்கும் என்றும் ஹிந்தி ஆட்சி மொழியாவது ஹிந்தி பேசப்படாத மொழியினரின் விருப்பத்தைப் பொறுத்திருக்கும் என்றும் வியக்தமாகக் கூறியிருக்கிறார். இது அவருடைய சொந்த அபிப்பிராயம். இன்னும் சட்டமாக்கப்பட வில்லை. காங்கிரஸ் கட்சியில் நேருஜிக்கு இருக்கும் பூரண செல்வாக்கின் காரணமாக இம் முறையில் சட்டமாக்கப்படலாம்.

ஆனால் நாம் ஒரு எச்சரிக்கை செய்ய விரும்புகிறோம். ஹிந்தியுடன் ஆங்கிலமும் ஆட்சிமொழியாக இருக்கும் என்று நேருஜி சொல்லியிருப்பது பெருந்த குழப்பத்தை விளைவிக்கும். ஹிந்தியின் செல்வாக்கை நாளுக்கு நாள் அதிகப்படுத்தவே, ஹிந்தி வெறியர்கள் பார்ப்பார்கள். பல முறைகளைக் கையாண்டு ஆங்கிலத்தைப் புறக்கணிக்கப் பார்ப்பார்கள். ஹிந்தியை எல்லா மாகாணங்களிலும் நிர்வாக முறையிலும் சலுகைகள் காட்டியும் திணிக்கப் பார்ப்பார்கள்.

இந்த இரட்டை மொழி ஏற்பாடு ஆளும் அதிகாரிகள் மக்களிடையே பாரபட்சம் காட்டக் கூடிய ஒரு மனோபாவத்தை வளர்க்க உபயோகப்படும். ஆகவே நேருஜி ஆங்கிலமும் தொடர்ந்து காலவரம்பின்றி ஆட்சி மொழியாக இருக்கும் என்று கூறியிருப்பது தென்னகத்து ஆட்சிமொழிக் கிளர்ச்சி பெற்ற வெற்றியாயினும் முடிவில் அது பெரும் குழப்பத்தை விளைவிக்கக் கூடியதாகத்தான் இருக்கும். அதனால்தான் அரசியல் நிர்ணயச் சட்டத்தில் மொழிப் பிரச்னை பற்றியுள்ள விதிகளை நடைமுறைக்குக் கொண்டு வராமல் மக்கள் சபையில் சட்டபூர்வமாக நிறுத்தப்பட வேண்டும் என்று வற்புறுத்துகிறோம். ஐம்பது ஆண்டுகளுக்குப் பின் யோசித்துத் தீர்மானிக்க வேண்டிய விஷயங்களை இப்போது எடுத்துக் கொள்ள வேண்டியதில்லை. அரசியல் நிர்ணயச் சட்டத்திலும் அவற்றைப்பற்றி விதிகள் இருக்க வேண்டியதில்லை.

இந்தியாவின் விஞ்ஞான அறிவு வளர்ச்சிக்கு ஆங்கிலம் மிக அவசியம் என்று நேருஜி வற்புறுத்தியிருக்கிறார். "நூதன விஞ்ஞான அறிவுக்கு ஆங்கிலம் ஒரு ஜன்னல் ஆகும்" என்று ராஜாஜி சொன்ன சொற்களையே வைத்துக் குறிப்பிட்டிருக்கிறார்.

விஞ்ஞான அறிவு வளர்ச்சிக்கு மேல் நாட்டு மொழியறிவு அவசியம். ஆங்கிலம் பல நூற்றாண்டுகள் நம் நாட்டில் வாழ்ந்து இந்திய மக்களுக்கு மிக நெருங்கிய மேல் நாட்டு மொழியாகிவிட்டது. ஆகவே ஆங்கிலத்தை இந்தியர்கள் வெகு எளிதில் படிக்கலாம்.

ஆங்கிலம் அவசியம் வேண்டும் என்கிறார் நேருஜி. இவை இந்திய மேதாவிகள் சொல்லி வந்த கருத்துக்கள். இவற்றை நேருஜி ஏற்று வரவேற்றதைப் பற்றி மகிழ்கிறோம்.

ஜனநாயகத்தில், பெருவாரியாகவுள்ள ஆளும் கட்சியினர், சிறுபான்மையினரின் உணர்ச்சிகளை மதித்து நடக்க வேண்டும் என்றும் ஹிந்தி ஆட்சி மொழியாவது, ஹிந்தி பேசாத மக்களின் விருப்பத்தைப் பொறுத் திருக்க வேண்டும் என்றும் ராஜாஜி சொல்லி யதை நேருஜி சொல்லி விட்டார். இதுவும் மகிழ்ச்சியளிக்கக் கூடிய விஷயம்.

இன்னொரு விஷயத்தையும் குறிப்பிட்டிருக் கிறார். விஞ்ஞானச் சொற்களை ஹிந்தியில் மொழி பெயர்த்து வருகிறார்கள். அந்த மொழிபெயர்ப்புச் சொற்களை நேருஜி ''பயங்கரங்கள்'' என்கிறார். எந்த விஞ்ஞானச் சொல்லையும் மொழிபெயர்த்துவிட முடியாது. சில சொற்களைத்தான் மொழிபெயர்க்க முடி யும். மொழிபெயர்க்க முடியாத சொற்களை அப்படியே ஆங்கிலச் சொல்லாக உபயோகித் துக் கொள்வதுதான் பல மொழியினர் அடங் கிய இந்திய மக்களுக்கு நலம் தரும். இப்போது விஞ்ஞானச் சொற்களைத் தமிழ்ப்படுத்தும் பெருமுயற்சியைச் சென்னை சர்க்கார் மேற் கொண்டிருக்கிறார்கள். அவர்கள், ஹிந்தி மொழி விஞ்ஞானச் சொற்களைப் பற்றி நேருஜி குறிப்பிட்ட வார்த்தைகளை நினைவில் வைத்துக் கொள்வது நலம்!

பாமர மக்களுக்கு எளிதில் விளங்கக்கூடிய சொற்களைப் பயன்படுத்தினால்தான் பய னுண்டு. மேல் படிப்புக்கு உலகம் முழுதும் ஒப்புக்கொள்ளும் கலைச் சொற்களை வைத்துக் கொள்வதுதான் நலம் தரும். சாதாரண பிரசாரத்துக்கு எளிதில் விளங்கும் தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்திக்கொண்டு போகலாம்.

கடைசியாக ஒரு வார்த்தை. மொழியால், ஜாதிகளால், ராஜ்யப் பிரிவினைகளால் இன் னும் எத்தனையோ சிறு சிறு காரணங்களால் பிளவுபட்ட இந்த தேசம் எங்கிருந்தோ வந்த ஆங்கிலத்தினால் ஒன்றுபட்டிருக்கிறது. ஆங்கிலம் எங்கிருந்தோ வந்தாலும் நாட்டை இணைத்து வைத்திருக்கும் பெரும் பண்பைக் கருதி அதை ஆட்சி மொழியாகச் செய்ய வேண்டும்.

ஆட்சிமொழிக் கிளர்ச்சியில், நேருஜி பாதி வழி வந்து விட்டார். அந்தக் கிளர்ச்சியை இன்னும் சற்றுத் தொடர்ந்து நடத்தினால் அநீதி முற்றிலும் தீர்ந்து நியாயம் ஏற்படும். ஆகவே, நேருஜியின் பார்லிமெண்ட் பேச்சைப் படித்து வெற்றி பெற்று விட்டோம் என்று நிம்மதியாக இருப்பதற்கில்லை!

# நேருஜியும் சுதந்திரக் கட்சியும்

சுதந்திரக் கட்சிக்கு நாளுக்கு நாள் பலம் பெருகி வருவது ஜவாஹர்லால் நேரு அவர்களுக்குப் பிடிக்கவில்லை. சுதந்திரக் கட்சி ஆரம்பமானதை வரவேற்பதாக முத லில் சொன்னார் நேருஜி. அப்போது சுதந்திரக் கட்சி இவ்வளவு பலம் பெறும் என்று நினைக்க வில்லை போலும். பம்பாயி லும், அகமதாபாத்திலும் லட்சக்கணக்கான மக்கள் சுதந்திரக் கட்சிக் கூட்டத்துக்கு வருவ தைப் பார்த்து, நாம் போட்ட கணக்கு தவறா கப் போய்விட்டதே என்று இப்போது நினைக் கிறார்போல் தெரிகிறது. புது தில்லியில் பத்திரிகை நிருபர்கள் கூட்டத்தில் தமது நிலை யிழந்து தாறுமாறாகப் பேசி யிருக்கிறார். ஒரு பெரிய தேசத்தின் பிரதமர், தமது கொள்கைகளின் கண்டனங்களைச் சற்றும் சகிக்கக் கூடியவராக இல்லை. எந்த விஷயத் தின்மேல் கண்டனங்கள் தெரிவிக்கப்படுகின் றனவோ, அந்த விஷயங்களைப் பற்றித் தக்க பதில் சொல்வதை விடுத்து, சுதந்திரக் கட்சிக்கு ஆதரவளிப்பவர்களுக்கு வேறு நோக் கங்கள் கற்பித்துப் பேசுவது ஜவாஹர்லால் போன்ற தலைவர்களுக்கு அழகல்ல.

சுதந்திரக் கட்சிக் கொள்கைகளை ஆதரித்துப் பல பத்திரிகைகள் எழுதி வருகின்றன. இப்படி எழுதுவதற்குக் காரணம் பணம் என்று குறிப் பிட்டு, லஞ்சத்துக்கு எழுதிய தலையங்கங்கள் என்று பொருள் படும்படியாகப் பேசியிருக் கிறார். இதைப் போன்ற பொய்யும் ரசைக் குறைவும் வேறு கிடையாது.

பிரதமர் நேருஜியை ஆதரித்து இத்தனை வருஷங்கள் பத்திரிகைகளில் தலையங்கங்கள் எழுதி வந்தார்களே, அதற்கெல்லாம் லஞ்சம் காரணமா? பத்திரிகைகளும் பொது மக்களும் சுதந்திரக் கட்சிக்கு ஆதரவு அளித்து வருவது நேருஜிக்குக் கோபத்தை மூட்டி வருகிறது.

மற்றொரு விஷயம். சுதந்திரக் கட்சியினர் கடவுளைக் கூட்டாளியாகச் சேர்த்துக் கொள் கின்றனர் என்று பரிகாசம் செய்கிறார். காந்தி மகான் இருபத்து நாலுமணி நேரமும் கடவுளை முக்கிய கூட்டாளியாக வைத்துக் கொண்டே எந்தக் காரியமும் செய்தார். மகத்தான அரசியல் பிரச்னையாயினும் சரி, சாதாரணமான தக்ளி நூற்கும் விஷயமா யினும் சரி, கடவுள் கூடவே இருக்கிறார் என்று கருதித்தான் காரியங்கள் செய்தார். அப் படியே கருதிக் காரியம் செய்யும்படி முப்பது கோடி பாரத மக்களையும் கேட்டுக் கொண் டார். அதில் மகத்தான சக்தியிருக்கிறது என்பதை ராஜாஜி உணர்வதாலேயே மீண்டும் மீண்டும் அதை வற்புறுத்துகிறார்.

இன்றையக் காங்கிரஸ் நேருஜியின் தலைமை யில் காந்தி மகான் வகுத்த பாதையை விட்டு ரொம்ப ரொம்ப விலகிப் போய் விட்டது என்பதற்கு இதைவிட வேறு அத்தாட்சி என்ன வேண்டும்?

மொத்தத்தில் சுதந்திரக் கட்சிக்கு ஆதரவு பெருகி வருவது நேருஜிக்கு ஆத்திரத்தைப் பெருக்கி வருகிறது.

# சுதந்திரத் திருநாள்—சிந்தனைகள்





















# காங்கிரஸின் ஆதாரமற்ற வேண்டுகோள்

சுதந்திரக் கட்சியின் தலைவர் திரு என்.ஜி. ரங்கா அவர்களைத் தமது மக்கள் சபை அங்கத்தினர் பதவியை ராஜிநாமா செய்யும்படி காங்கிரஸ் கட்சி கேட்டிருக்கிறது.

ஒரு அங்கத்தினர் ஒரு குறித்த கட்சியின் சார்பில் தேர்ந்தெடுக்கப்பட்டால், அடுத்த தேர்தல் வரும் வரை அதே கட்சியில் இருக்க வேண்டும் என்றில்லை. கட்சியின் போக்கைப் பார்த்து, அந்தக் கட்சியின் சட்டசபை அங்கத்தினர்களுக்குப் பிடிக்கவில்லையென்றால் அந்தக் கட்சியிலிருந்து அவர்கள் விலகிவிடலாம். அதனால் சட்டசபை அங்கத்தினர் பதவியையோ, மக்கள்சபை அங்கத்தினர் பதவியையோ ராஜினமா செய்யவேண்டும் என்பதில்லை.

ஜனநாயக நாடுகளில் இவ்விதமான கொள்கை எங்கேயும் அமுலில் இல்லை. சட்டசபை அங்கத்தினர்கள் கட்சி விட்டுக் கட்சி மாறி யிருக்கின்றனர். அதனால் சட்டசபை ஸ்தானத்தை விட்டதில்லை. நமது அரசியல் நிர்ணயச் சட்டமும் இந்தச் சம்பிரதாயத்தை ஏற்றுக் கொண்டிருக்கிறது.

தேர்தல் டிக்கெட்டை உத்தேசித்தோ அல்லது, தொகுதியிலுள்ள மக்களின் அபிப்பிராய பேதங்களை உத்தேசித்தோ அங்கத்தினர்களை ராஜினமா செய்யும்படி நிர்ப்பந்திக்கும் சட்டம், அரசியல் நிர்ணயச் சட்டத்தில் சேர்க்கப்படவில்லை. சிலர் அப்படிச் சேர்க்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு வருகின்றனர். அது ஒப்புக் கொள்ளப்படவில்லை.

# யாழ்ப்பாணத்துக்கு வைத்தியக் கல்லூரி

—கொழும்பு, ஆகஸ்டு 6வ.

கொழும்பில் இருக்கும் வைத்தியக் கல்லூரியில் போதிய மாணவர்களுக்கு இடம் இல்லாதபடியால் இன்னெரு வைத்தியக் கல்லூரியை ஆரம்பிப்பதென்று அரசாங்கம் தீர்மானித்திருக்கிறது. இந்த வைத்தியக் கல்லூரியை யாழ்ப்பாணத்தில் ஏற்படுத்துமாறு சுகாதார மந்திரியைப் பேட்டி கண்டு வற்புறுத்துவதென்று தமிழ்ப் பல்கலை இயக்கப் பொதுச் சபை தீர்மானித்திருக்கிறது. கல்வி விஷயத்தில் யாழ்ப்பாணம் புறக்கணிக்கப்படுவதாக ஏற்பட்டுள்ள இரு சிங்கள பௌத்தப் பல்கலைக் கழகங்களும் கொழும்பில் இருக்கின்றன. தமிழ் மக்கள் நிறுவியிருக்கும் புதிய தமிழ்ப் பல்கலைக் கழகத்தையும் கிழக்கு மாகாணத்திலுள்ள திருகோணமலையில் ஏற்படுத்தவிருக்கிறார்கள். தமிழர்களுக்குக் கொழும்பிலுள்ள தொழில் நுட்பக் கல்லூரியில் இடம் இல்லாதபடியால் யாழ்ப்பாணத்தில் ஒரு உயர்தர தொழில் நுட்பக் கல்லூரியை நிறுவிக் கொடுக்க வேண்டுமென்று தமிழர்கள் ஏகமனதாகக் கோரினர்கள். இதற்கு முதலில் தலையசைத்த கல்வி மந்திரி கடைசி நேரத்தில் கை விரித்து விட்டார். இதுவும் யாழ்ப்பாணத் தமிழ் மக்களுக்கு மிகுந்த ஏமாற்றத்தைக் கொடுத்திருக்கிறது. இந்த நிலைமையில் இரண்டாவதாக நிறுவ உத்தேசித்திருக்கும் வைத்தியக் கல்லூரியையேனும் யாழ்ப்பாணத்தில் ஏற்படுத்தவேண்டுமென்றும் அதற்குத் தேவையான வசதி யாழ்ப்பாணத்தில் இருப்பதாயும் தமிழ் மக்கள் சுட்டிக் காட்டியிருக்கிறார்கள்.

## லஞ்ச விசாரணை

மந்திரிகள்மீதும் அரசாங்கக் கட்சி பார்லிமெண்ட் அங்கத்தினர்கள் மீதும் சுமத்தப்படும் லஞ்சப் புகார்களுக்கு ஒரு அளவேயில்லாமற் போய்விட்டது. குறிப்பாக, தபால் தகவல் இலாகா மந்திரிமீது பார்லிமெண்டிலேயே பகிரங்கமாக லஞ்சப் புகார்கள் செய்யப்பட்டன. அந்த லஞ்சப் புகார்களைப் பற்றி விசாரணை செய்ய ஒரு விசேஷக் கமிஷனை நியமிக்க வேண்டுமென்று எல்லா எதிர்க் கட்சிகளும் ஏகமனதாக அரசாங்கத்தை வற்புறுத்தி வருகின்றன.

## வர்த்தக மந்திரியின் கூற்று

இலங்கை வர்த்தக மந்திரி திரு ஆர். ஜி. சேனநாயகா இவ்வாரம் பக்கலை என்னுமிடத்தில் பேசியபொழுது இலங்கையிலுள்ள இந்திய வம்சாவளியினர்களைப் பற்றிச் சில குறிப்புகள் சொல்லியிருப்பது கவனிக்கத் தகுந்தது. இங்குள்ள இந்தியவம்சாவளியினர்களில் எவ்வளவு பேர்கள் இலங்கைப் பிரஜைகளாக ஏற்றுக் கொள்ளப் படுகிறார்களென்பதை அறிந்த பிறகே எவ்வளவு பேர் இலங்கைப் பிரஜைகளென்பதையும் எவ்வளவு பேர் அந்நியர்களென்பதையும் தீர்மானிக்க வேண்டுமென்பதையும் அதன் பிறகே அந்நியர்களை நாடு கடத்துவதைப் பற்றி யோசிக்க வேண்டுமென்றும் கூறினர். அதாவது இலங்கைப் பிரஜைகளாக அனுமதிக்கப் படாதவர்களெல்லாம் இந்தியப் பிரஜைகள்தான் என்று இலங்கை அரசாங்கம் எப்பொழுதும் சொல்லி வரும் கொள்கையை விட்டுக் கொடுக்கவில்லையென்பதும் இவர்களை இந்தியாவுக்கு எப்படியும் நாடு கடத்தி விடலாம் என்று இலங்கை கனவு காண்பதும் தெளிவாகிறது. ஆனால் இந்திய அரசாங்கம் தனது கொள்கையைச் சென்ற வாரம் மீண்டும் தெளிவாக்கியிருக்கிறது. ஒருவர் இலங்கைப் பிரஜையாக ஏற்றுக் கொள்ளப்படவில்லையென்ற ஒரே காரணத்துக்காக அவர் இந்தியப் பிரஜையாகி விடமாட்டார். இலங்கையிலிருக்கும் இந்திய வம்சாவளியினர் தாமாக இந்தியப் பிரஜாவுரிமையைக் கோரி வலுவில் மனுக் கொடுக்க வேண்டும். அவருக்கு இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தின்படி இந்தியப் பிரஜையாகும் யோக்கியதாம்சங்களும் இருக்க வேண்டும். அப்படிப்பட்டவர்களை மட்டுமே இந்தியா ஏற்றுக் கொள்ள முடியுமென்பதைப் பிரதம மந்திரி நேரு சென்ற வாரம் மறுபடியும் ஆணித்தரமாக அறிவித்திருக்கிறார். —ரஜனி

கல்கி

# மாவட்டச் சிறுகதைப்போட்டி

முதற் பரிசு ரூ. 200 இரண்டாவது பரிசு ரூ. 100

*

★ ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு மாவட்டத்தை இலக்காகக் கொண்டு இந்தச் சிறுகதைப் போட்டி நடத்தப்படும். ஒவ்வொரு மாதமும் தேர்ந்தெடுக்கப்படும் கதைகளில் இரண்டு கதைகளுக்குப் பரிசு வழங்கப்படும்.

★ தமிழ்நாட்டின் மாவட்டங்களான கன்யாகுமரி, திருநெல்வேலி, மதுரை, ராமநாதபுரம், திருச்சி, தஞ்சை, தென் ஆற்காடு, செங்கற்பட்டு, வட ஆற்காடு, சென்னை, சேலம், கோயமுத்தூர், நீலகிரி ஆகிய பதின்மூன்று மாவட்டங்கள் இந்தப் போட்டியில் இடம் பெறும்.

★ எல்லா மாவட்டங்களைப் பற்றிய கதைப் போட்டிகளிலும், எல்லாத் தமிழ் எழுத்தாளர்களும் கலந்து கொள்ளலாம்.

★ கதைகள் பண்பட்ட தமிழ் நடையில் அந்தந்த மாவட்டத்தைப் பின்புலமாகக் கொண்டு, முழுவதும் அந்தப் பிரதேச மணம் கமழ்வதாக இருப்பதோடு சொந்தக் கற்பனையாகவும் இருக்க வேண்டும்.

## நான்காவது போட்டி

## வடஆற்காடு மாவட்டம்

### விதிகள்

1. கதைகள் வடஆற்காடு மாவட்டத்தின் சூழ்நிலை எல்லாவகையிலும் அமையுமாறு எழுதப்பட வேண்டும். வடஆற்காடு மாவட்டத்தைச் சேர்ந்த மனர்கள், பழக்க வழக்கம், தொழில் வாழ்வு போன்றவற்றைச் சித்திரிக்கும் கதைகளே இப்போட்டியில் இடம் பெறும்.

2. கதைகள் 'கல்கி' இதழின் ஐந்து பக்கங்களுக்குக் குறையாமல் ஏழு பக்கங்களுக்கு மேற்போகாமல் இருக்க வேண்டும்.

3. ஒரு எழுத்தாளரே ஒன்றுக்கு மேற்பட்டும் கதைகள் அனுப்பலாம்.

4. பரிசுக் கதைகளைத் தேர்ந்தெடுக்கும் விஷயத்தில் "கல்கி" ஆசிரியரின் தீர்ப்பே முடிவானது.

5. பரிசு பெறாத கதைகளில் பிரசுரிக்கத் தகுதியுடையவை, உரிய சன்மானம் அளித்துப் பிரசுரத்துக்கு ஏற்றுக் கொள்ளப்படும்.

6. பிரசுரத்துக்கு ஏற்றுக் கொள்ளப்படாத கதைகளைத் திரும்பப் பெற, கதைகளோடு உரிய தபால் பில்லைகள் இணைக்க வேண்டும்.

7. கதைகள் சம்பந்தமாக எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்வதற்கில்லை.

8. வடஆற்காடு மாவட்டப் போட்டிக்கான கதைகள் செப்டம்பர் 30-ந் தேதிக்குள் 'கல்கி' காரியாலயத்துக்கு வந்துசேர வேண்டும்.

9. போட்டி முடிவு அக்டோபர் மாத இறுதிக்குள் அறிவிக்கப்படும்.

10. கதைகளின் உறைகளிலும், தலைப்புக்களிலும் "கல்கி வடஆற்காடு மாவட்டச் சிறுகதைப் போட்டி" என்று குறிப்பிட வேண்டும்.

குறிப்பு:—வடஆற்காடு மாவட்டத்தின் சிறுகதைப் போட்டி முடிவு வெளியாகும் இதழிலேயே அடுத்த மாவட்டச் சிறுகதைப் போட்டிக்குரிய விவரங்கள் அறிவிக்கப்படும்.

ஆசிரியர், கல்கி

## மஹா ஸம்புரோக்ஷணம்

தக்ஷிண துவாரகை என்று பிரசித்தி பெற்ற மன்னார்குடி ஸ்ரீ ராஜகோபாலன், ஸ்ரீ செங்கமலத் தாயார் விமானங்கள் ஜீரணோத்தாரணமாகி மஹா ஸம்ப்ரோக்ஷணம் நாளது ஆவணி மீ 22உ ஆரம்பமாகி 24உ (9-9-59)ல் நடக்கிறபடியால் ஆஸ்திகர்கள் அனுப்பும் பொருளுதவியை மேற்படி தேவஸ்தான நிர்வாக அதிகாரிக்கு அனுப்பும்படியாகக் கோரப்படுகிறது.

திருப்பணிக் கமிட்டியார்

# சுதந்திரக் கட்சியும் மக்கள் எழுச்சியும்

எஸ்.வி.எஸ்.

"பொழுது புலர்ந்தது யாம் செய்த தவத்தால்
புன்மை யிருட்கணம் போயின யாவும்!"

—கவியரசர் பாரதியார்.

இருளோ என்று இருக்கும் வானத்தில் விடியற்காலை வேளை கிழக்கு, செம்மண் வாரி இறைத்தாற் போல் செக்கச் செவேர் என்று காணப்படும். இதை நம்மவர்கள் அருணோதயம் என்பார்கள்.

பிறகு இந்தச் செவ்வானம் மெள்ள மெள்ள மாறிக் கிழக்கு வெண்ணிறம் கொள்ள ஆரம்பிக்கும். வெண்ணிறம் கொஞ்சம் கொஞ்சமாக அதிகரித்து, கிழக்கே தகதக என்று வெள்ளித் தட்டுபோல் மின்னிக்கொண்டு சூரியனை வானவீதியில் பவனி புறப்பட்டு விடுவான்!

சுதந்திரக் கட்சியின் அருணோதயப் படலம் முடிந்தது. பூரண சூரியோதயம் ஆகிவிட்டது. சூரியன் வான வெளியில் பவனி வரத் தொடங்கிவிட்டான். தேவர்களும் முனிவர்களும் மக்களும் வேதகீதங்கள் பாடி சூரியனை வரவேற்றாற்போல் சுதந்திரக்கட்சியை மங்கள கீதம் பாடி, பாரத மக்கள் குதூகலமாகப் பெரு உற்சாகத்தோடு வரவேற்றார்கள். பம்பாயில் நடைபெற்ற அகில இந்திய சுதந்திரக் கட்சியின் மகாநாடு அவ்வாறு இருந்தது.

## தேவர்கள் வருகை

"சுதந்திரக் கட்சியை வரவேற்க மக்கள் வேண்டுமானால் வந்திருந்தார்கள் என்று சொல்லலாம். தேவர்கள் வந்திருந்தார்கள் என்று சொல்ல முடியுமா?" என்று யாரோ கேட்பது காதில் விழுகிறது.

நிச்சயமாக தேவர்கள் வந்திருந்தார்கள். தேவர்களைவிட மேலான தெய்வ புருஷர்களாக விளங்கியவர்கள் வந்திருந்தார்கள். மகாநாட்டு மேடையில் எழுந்தருளி மகாநாட்டு நடவடிக்கைகளை மேற்பார்த்து ஆசி கூறினார்கள். "யார்? யார் அவர்கள்?" என்று கேட்கிறீர்களா? சொல்லி விடுகிறேன்: லோகமான்ய பாலகங்காதர திலகர், வல்லபாய் பட்டேல், மகாத்மா காந்தியடிகள் ஆகியோர்தான்!

ஆகஸ்ட் மாதம் பாரத நாட்டுச் சரித்திரத்திலே முக்கியமான இடம் பெற்ற மாதமாகும்.

திலகர் பெருமான் 1920ல் ஆகஸ்ட் 1ல அமரரானார். அன்றையதினத்திலிருந்தே பாரத நாட்டுச் சுதந்திரப் போராட்டத் தலைமைப் பதவியைக் காந்திமகான் ஏற்றார். சுதந்திரப் போராட்டம் நடத்த ஒரு கோடி ரூபாய் வேண்டும் என்று காந்தி மகான் 'திலகர் சுயராஜ்ய நிதி' ஆரம்பித்து, சொற்ப காலத்தில் ஒரு கோடிக்கு மேல் வசூல் செய்தார். அப்படி காந்திமகான் திலகர் பெயரில் ஆரம்பித்து, நடத்திய இயக்கம் வெற்றி பெற்று, 1947 ஆகஸ்ட் மாதம் சுதந்திர பாரதம் தோன்றியது. இப்பொழுது அந்தச் சுதந்திர பாரதம் பலாத்கார, ஏதேச்சாதிகார அதிகார வர்க்கத்துக்கு அடிமையாகி விடக்கூடிய பேராபத்து ஏற்பட்டிருக்கிறது. அதைத் தடுத்து நிறுத்த, இந்த வருஷம் அதே ஆகஸ்டு மாதத்தில் புது இயக்கமே ஆரம்பமாகியிருக்கிறது! இந்தச் சுதந்திர இயக்கமும் வெற்றி பெறும் என்ற நம்பிக்கைதான் மக்கள் உள்ளத்தில் எழுந்திருக்கிறது என்பது பம்பாய் மகாநாட்டுக் கூட்டத்துக்கு வந்திருந்த பிரதிநிதிகளைப் பார்த்தபோது தெரிந்தது.

## பிரதிநிதிகள் வருகை

பாரத தேசத்தின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் பிரதிநிதிகள் வந்திருந்தார்கள். சுமார் எண்ணூறு பிரதிநிதிகள் வந்திருந்தார்கள். ஆந்திராவிலிருந்து ஒரு தனி ரயில் ஏற்பாடு செய்து கொண்டு இருநூறு பிரதிநிதிகள் வருவதாக இருந்தார்கள். ஆந்திரப் பிரதேசத்தில் நதிகளில் வெள்ளப் பெருக்கெடுத்து, ரயில் மார்க்கங்கள் சீர்கெட்டுக் கிடந்ததால் கடைசி நிமிஷத்தில் விசேஷ ரயில் வசதி ரத்து செய்யப்பட்டது. எனினும் சுமார் நூறு பிரதிநிதிகள் வந்திருந்தார்கள்.

இதில் நாம் உற்று நோக்க வேண்டியது ஒன்று உண்டு. ஆந்திரப் பிரதேசம் விவசாயமே பிரதானமாகக் கொண்டுள்ள ராஜ்யம். கிருஷ்ணா கோதாவரி நதிகளின் நீர்வளத்தால் நன்செய் வளம் கொழிக்கும் நாடு. அந்நாட்டிலிருந்து ஒரு விசேஷ ரயில் வண்டி நிறையக் கூடிய பிரதிநிதிகள் சுதந்திரக் கட்சி மகாநாட்டுக்கு வரத் திட்டமிட்டிருந்தார்கள் என்றால் ஆந்திர நாட்டில் விவசாயிகளிடையே சுதந்திரக் கட்சிக்கு ஆதரவு எவ்வளவு இருக்கிறது



ஸ்ரீமதி எம். எஸ். எஸ்.ஸின் பிரார்த்தனைக் கீதத்துடன் மகாநாடு துவங்குகிறது

என்பதை ஊகித்துக் கொள்ளலாம். ஆந்திர விவசாயிகள் கூட்டு விவசாயத்தைஎவ்வளவு தீவிரமாக எதிர்க்கிறார்கள் என்பதையும் ஊகிக்கலாம்.

அரசியல் என்பது தெய்வ பக்திக்குப் புறம்பான விஷயம் என்று மேல்நாட்டில் சிலர் சொல்லுவார்கள். நமது பிரதம மந்திரி நேருஜியும் கூட இந்த அபிப்ராயம் கொண்டவர்தான். ஆனால் காந்தி மகான் தெய்வத்தின் துணையின்றி உலகில் எந்தக் காரியமும் நடப்பதில்லை என்று உறுதியாக நம்பினார். கிழக்கே சூரியன் உதிக்கத் தவறினாலும், நான் தவறுமல் காலையும் மாலையும் காந்தி மகான் பிரார்த்தனைகள் நடத்தி வந்தார். அவர் வழியை நிலைநாட்டத் தோன்றியுள்ள சுதந்திரக் கட்சியால் பிரார்த்தனையை மறக்க முடியுமா? அதிலும் அந்தச் சமயம் பார்த்து ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி பம்பாய் அகில இந்திய சுதந்திரக் கட்சி மகாநாட்டுக்கு வர நேரிட்டால் மகாநாட்டை ஏற்பாடு செய்தவர்கள் சும்மா இருப்பார்களா? சுதந்திரக் கட்சியினர் ஸ்ரீமதி எம். எஸ். தான் பிரார்த்தனை கீதம் பாட வேண்டும் என்று வற்புறுத்தினார்கள். ஸ்ரீமதி எம். எஸ்.ஸின் பிரார்த்தனை கீதத்துடன் சுதந்திரக் கட்சியின் மகாநாடு ஆரம்பமாயிற்று.

காந்தி மகானுக்கு மிகப் பிடித்தமான பக்த மீராவின் கீதத்தை ஸ்ரீமதி எம்.எஸ். பாடினார். அதில் ஒரு அடி "திரௌபதியின் மானசம் ரட்சணத்துக்காகத் துகிலை வளர்த்தருளினாயே கண்ணா! உன் அருளை என்னென்பேன்!" என்ற பொருளைக் கொண்டது.

பாரதநாட்டு விவசாய மக்கள் பிறர் கையை நோக்காமல், பிறர் தயவை நாடாமல் சுதந்திரமாக வேலை செய்து தன்மானத்தோடு வாழும் மக்கள். இன்று அவர்களின் உடைமைகளைப் பறித்து, கூட்டுப் பண்ணைகளில் அடிமைகளாக்கப் பார்ப்பது, ஏறத்தாழத் திரௌபதியை மானபங்கப்படுத்தப் பார்த்த மாதிரிதான். இந்த நிலையில் அவர்கள் தன்மானத்தைக் காக்கச் சுதந்திரக் கட்சி தோன்றியிருப்பதும் கண்ணன் தோன்றியமாதிரியே இருக்கிறதல்லவா என்ற உணர்ச்சி ஒவ்வொருவர் உள்ளத்திலும் அந்த மீரா பாடலின் அடிகளைக் கேட்டபோது எழுந்தது.



வரவேற்புக் குழுத் தலைவர் மஸானி

## மஸானியின் வரவேற்பு

சமீபத்தில் ஜவாஹர்லால் நேரு, 'சுதந்திரக் கட்சித் தலைவர்கள் கொஞ்சம் மேல் நாட்டுக்குப் போய்விட்டு வந்தார்களானால் தேவலை. அப்போது அவர்களுக்கு முற்போக்கான நாடுகள் எப்படிப் போய்க் கொண்டிருக்கின்றன என்பது புரியும்' என்றார். சுதந்திரக் கட்சியில் இருப்பவர்களுள், உலகம் சுற்றுமலை உலக மக்களின் உள்ளத்தை அறியக்கூடிய ஆற்றல் படைத்தவர்கள் உண்டு. அது ஒருபுறம் இருக்கட்டும். முன்னேற்றமடைந்த நாடுகளைச் சுற்றிப் பார்த்தவர்கள் சுதந்திரக்கட்சியில் உண்டு. நேருஜிசொல்லிக்கொள்ளும் முற்போக்கு நாடுகளில் மக்கள் என்ன பாடுபடுகிறார்கள் என்பதைப் பார்த்து விட்டு வந்து, தமது பழைய கருத்துக்கள் பத்தாம் பசலிக் கொள்கைகள் என்பதை உணர்ந்து, கைவிட்டிருக்கிறார்கள். அப்படிப்பட்டவர்களில் ஒருவர்தான் திரு எம். ஆர். மஸானி. மக்கள் சபை அங்கத்தினர்.

இவர் சோஷலிஸ்டாக இருந்தவர். நேருஜியுடன் சோஷலிஸக் கொள்கைகளைக் காங்கிரஸில் புகுத்த நினைத்தவர். சோஷலிஸ நாடுகளில் பலாத்காரம் தலைவிரித்தாடுவதையும், பாமர மக்கள் அடிமைகளாக நசுக்கப் படுவதையும், அப்படி நசுக்கியும் உணவு உற்பத்தி பெருகாததால், விவசாயிகளுக்குத் தனி உடைமை அளித்து வருவதையும் பார்த்து வந்தவர். இப்போது காங்கிரஸ் அதே ருஷ்ய முறைகளைக் கடைப்பிடித்து வருவதை மக்கள் சபையில் கண்டித்து வந்தார். எதிர்க்கட்சி அமைக்க வேண்டும் என்று எண்ணம் கொண்டிருந்தார். தலைவர் ராஜாஜியின் ஆசியும் ஒத்துழைப்பும்கிடைக்கும் என்று தெரிந்தவுடன் சுதந்திரக்கட்சிஏற்படுத்த மிக ஊக்கமாக வேலை செய்தார். இன்றும்வேலை செய்து வருகிறார். பம்பரம்போல் சுழன்றுசுழன்று வேலை செய்கிறார். அவருடைய முயற்சியின் காரணமாகவே, பம்பாயில் குறுகிய காலத்தில் இவ்வளவு பெரிய மகாநாடு கூட்ட முடிந்தது.

மஸானியின் வரவேற்புரை ஒரு அருமையான பிரசங்கம். பல விஷயங்களை அதில் மிகத் தெளிவாகக் குறிப்பிட்டார். பல ருசிகரமான விஷயங்களையும் வெளியிட்டார்.




தலைவர் திரு என். ஜி. ரங்கா

## கம்யூனிஸமும் ..

கட்சிகளின் லட்சியங்களை விட வோட்டுக்களிலேயே கவனம் செலுத்துபவர்களுக்கு இப்போது ஒரு ஐயம் தோன்றியுள்ளது. அகில இந்திய ரீதியில் காங்கிரஸை விட்டால் கம்யூனிஸ்ட் கட்சிதான் இருக்கிறது. இப்போது சுதந்திரக் கட்சி என்ற மூன்றாவது கட்சி தோன்றினால், காங்கிரஸின் வோட்டுக்களைப் பிரித்து, கம்யூனிஸ்டுகளைப் பலமாக்கி விடாதா என்பதுதான் அவர்கள் சந்தேகம்.

இதற்கு மஸானி ஒரு உதாரணம் காட்டி விளக்குகிறார்:

"சுதந்திரக் கட்சி காங்கிரஸுக்குச் சேரக்கூடிய வோட்டுக்களைப் பறித்தால், கூடவே கம்யூனிஸ்டுகளுக்கு விழக்கூடிய வோட்டுக்களையும் பறிக்கும். இவ்விஷயத்தில் எனக்குச் சொந்த முறையில் ஏற்பட்ட அனுபவத்தைச் சொல்லுகிறேன். பம்பாயிலுள்ள என் நண்பர் ஒருவர், என்னைவிடப் பல ஆண்டுகள் வயதில் மூத்தவர். அவர் சுமார் ஒரு வருஷத்துக்கு முன்பு, " அடுத்த தேர்தலில் என் வோட்டை கம்யூனிஸ்டுகளுக்குத்தான் போடப் போகிறேன். இது ஒன்றுதான் லஞ்ச ஊழல் மலிந்த தேரு சர்க்காரை நீக்க வழி" என்று சொல்லிக் கொண்டிருந்தார். இதைவிட விபரீதமான காரியம் வேறில்லை என்று எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன். காங்கிரஸைவிட கெடுதலானதல்லவா கம்யூனிஸ்ட் ஆட்சி என்று சொல்லிப் பார்த்தேன். கேட்க முடியாது என்றார்.

"சென்ற மாதம் சுதந்திரக் கட்சியின் காரியாலயத்துக்குக் கிடைத்த முதல் நிதி உதவி யாருடையது என்று நினைக்கிறீர்கள்? அந்த மனிதருடையதுதான். நூறு ரூபாயுடன் அவர் அனுப்பியிருந்த கடிதத்தில் ' நம் நாட்டுக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது என்ற நம்பிக்கை எனக்கு இப்போது ஏற்பட்டிருக்கிறது !' என்று எழுதியிருந்தார்."



ஸ்ரீ கனஸியாம சிங் குப்தா

## ஆப்ரகாம் லிங்கன்

நீக்ரோக்களை அடிமைகளாக நடத்துவதை எதிர்த்துப் போராடிய அமெரிக்க ஜனாதிபதி ஆப்ரகாம் லிங்கன் உலக மகான்களில் ஒருவர். அவருடைய கருத்துக்கள் செறிந்த சில வரிகளை மேற்கோளாகக் காட்டித் தமது வரவேற்புரையை முடித்தார் திரு மஸானி. அந்த மேற்கோள் வரிகள்:

"சிக்கன வாழ்க்கையைப் பழிப்பதன் மூலம் சுபிட்ச வாழ்க்கையை நிலைநாட்ட முடியாது.

பலசாலிகளைப் பலவீனப் படுத்துவதன் மூலம் பலவீனர்களைப் பலசாலிகளாக்கி விட முடியாது.

பணக்காரர்களை அழிப்பதன் மூலம், ஏழைகளுக்கு உதவ முடியாது.

கடன் வாங்கிய பணத்தின் மூலம் நிரந்தரமான சுபிட்சத்தை நிலைநாட்ட முடியாது.

சம்பாதிப்பதை விட அதிகமாகச் செலவழித்து விட்டு, கஷ்டங்களிலிருந்து விடுபட முடியாது.

மனிதனின் உற்சாகத்தையும் சுதந்திரத்தையும் பறித்து விட்டு, அவனைக் குணவானாகவும் தைரியசாலியாகவும் செய்ய முடியாது.

மக்கள் தாங்களாகவே செய்துகொள்ளக் கூடிய காரியங்களைச் சர்க்கார் செய்வதன் மூலம் நிரந்தரமான உதவி ஏதும் செய்ய முடியாது."

நூறு ஆண்டுகளுக்கு முன் ஆப்ரகாம் லிங்கன் கூறிய மொழிகள் இன்றைக்கும் எவ்வளவு உண்மையாக இருக்கின்றன! சுதந்திரக் கட்சிக்கு இதைவிடச் சிறந்த ஆசி வேறு இருக்க முடியுமா?

## ஆந்திரர்களின் ஆசி

ஆந்திர நாட்டிலுள்ள முக்கியமான எதிர்க் கட்சி ஜனநாயக சோஷலிஸக் கட்சி. அதன் தலைவர் ஸ்ரீ பி. வி. ராஜு. அக் கட்சியினர் பூரணமாகச் சுதந்திரக் கட்சியில் இன்னும் சேரவில்லை என்றாலும், அவர்கள் கொள்கைக்கும் சுதந்திரக் கட்சியின் கொள்கைகளுக்கும் மாறுபாடு கிடையாது. அவர்கள் உடனடியாகச் சேரவில்லை என்றாலும் சுதந்திரக் கட்சியின் வளர்ச்சியில் மிகுந்த அக்கறை கொண்டுள்ளனர். தங்களது நல்லெண்ணத்தைக் காண்பித்துக் கொண்டு ஸ்ரீ பி. வி. ராஜு ஒரு செய்தியனுப்பியிருந்தார். அதுமட்டுமன்றி, அக் கட்சியின் பிரதிநிதிகள் மகாநாட்டிலும் தீர்மானங்கள் சர்ச்சையிலும் கலந்து கொண்டனர். ஸ்ரீ பொம்மி கண்டி சத்யநாராயணா என்பவர் தமது கட்சி, சுதந்திரக் கட்சியை மனப்பூர்வமாக வரவேற்கிறது என்று அறிவித்தார். சுதந்திரக் கட்சியுடன் இணைந்தாற் போல் வேலை செய்யவும் தயாராக இருப்பதாகத் தெரிவித்தார். இவையெல்லாம் எதைக் காட்டுகின்றன? ஆந்திர தேசத்தில் சரியான பலம் சுதந்திரக் கட்சிக்கு ஏற்பட்டு வருகிறது என்பதையே அல்லவா? அதேபோல் மத்தியப் பிரதேசத்தைச் சேர்ந்த ஸ்ரீ கனஸியாம சிங் குப்தா சுதந்திரக் கட்சியை வரவேற்



பொம்மிகண்டி சத்யநாராயணா





திலகர் திருநாளாகிய ஆகஸ்ட் 1-ந் தேதியிலும் மறுநாளும் பம்பாயில் சுதந்திரக் கட்சி மகாநாடு சிறப்பாக நடைபெற்றது.

பின்னர் ராஜாஜியும் தலைவர் திரு என். ஜி. ரங்காவும் அகமதாபாத்துக்கு விஜயம் செய்து மாபெரும் பொதுக் கூட்டத்திலும் மற்றக் கூட்டங்களிலும் கலந்து கொண்டார்கள்.

1. அகமதாபாத் சர்வகலாசாலையில் ராஜாஜி மாணவர்கள் கூட்டத்தில் பேசுகிறார். 2. கல்லூரியின் திறந்த வெளி மைதானத்தில் மாணவர்களும் மாணவிகளுமாகச் சுமார் ஐயாயிரம் பேர் ராஜாஜியின் பேச்சைக் கவனமாகக் கேட்கின்றனர். 3. மாணவர்கள் கல்லூரிக் கட்டடங்களின் மாடிக் கைப்பிடிச் சுவர்கள் மேல் எல்லாம் ஆபத்தான நிலையில் அமர்ந்து ராஜாஜியின் பிரசங்கத்தைக் கேட்கின்றனர். 4. அகமதாபாத் தென்னிய சங்கத்தினர் அகமதாபாத் மேயர் தலைமையில் ஒரு வரவேற்பு நல்கினர். 5. அகமதாபாத் ரோட்டரி சங்கத்தில் பேசுகிறார். 6. பொதுக்கூட்டத்துக்கு வந்த மக்களில் ஒரு பகுதி. 7. காந்தி மகான் வாழ்ந்த சபர்மதி ஆசிரமத்தில் ராஜாஜி காந்திஜியின் நினைவுக் கூடத்தைப் பார்வையிடுகிறார். 8. அகமதாபாத்தில் லால் தர்வாஜா மைதானத்தில் அமைக்கப்பட்ட விசேஷப் பந்தலில் திரு தாது பாய் அமீன், ஸ்ரீ பாய் லால் பட்டேல், ராஜாஜி ஸ்ரீ ரங்கா முதலியோர் அமர்ந்திருப்பதைப் பார்க்கலாம். 9. பொதுக் கூட்டத்தின் மற்றொரு பகுதி. 10. கூட்டத்தின் கோடியில் இருப்பவர்களுக்கும் தெரியவேண்டு மென்பதற்காகப் பொதுக் கூட்ட மேடையின்மீது நாற்காலியில் அமர்ந்து ராஜாஜி பேசுகிறார். 11, 12. குஜராத்தி இளப் அங்கத்தினர்கள் ராஜாஜியின் பேச்சைக் கேட்கிறார்கள்.








கிறார். ஸ்ரீ குப்தா மத்தியப் பிரதேச சட்டசபையில் சபாநாயகராக இருந்தவர். காங்கிரஸ்காரர்களின் பெரு மதிப்புக்குப் பாத்திரமானவர். காந்தீயவாதி. அவர் சுதந்திரக் கட்சியை வரவேற்கிறார் என்றால், இன்றையக் காங்கிரஸிடம் மக்கள் எவ்வளவு வெறுப்பு கொண்டிருக்க வேண்டும் என்பதை ஊகிக்கலாம்!



திரு கே. எம். முன்ஷி

## இது ஒரு இயக்கமே

ராஜாஜி மகாநாட்டைத் துவக்கி வைத்துப் பேசினார். அவர் பேசியபோது, அவர் கூறிய சொற்கள் அங்கு கூடியிருந்த மக்கள் உள்ளத்தில் ஆணி அறைந்தாற்போல் பதிந்தன. அவ்வளவு உணர்ச்சி நிரம்பிய சொற்பொழிவாக இருந்தது.

"நாற்பதாண்டுகளுக்கு முன்பு நான் நாற்பது வயதானவனாக இருந்தேன். அப்போது எனக்கு வக்கீல் தொழிலில் இருபது வருஷ அனுபவமும், காங்கிரஸிலும் சுயராஜ்யக் கட்சியிலும், ஹோம்ரூல் இயக்கத்திலும் சேர்ந்து பணியாற்றியதன் மூலம் அரசியல் துறையில் பன்னிரண்டு ஆண்டு அனுபவமும் பெற்றிருந்தேன். அந்த நிலையில் நான் ஒத்துழையாமை இயக்கத்தில் சேர்ந்தேன். மகாத்மா காந்தியின் தலைமையின் கீழ் அவருடன் நெருங்கிய தொடர்பு கொண்டு ஒத்துழையாமை இயக்கத்தில் பணி புரிந்தேன். அன்றிருந்த வயதைவிட இரண்டு பங்கு அதிக வயதான இந்த நிலையில் ஒரு கிளர்ச்சியை ஆரம்பித்திருக்கிறேன். இந்த மகத்தான தேசத்தை ஆளும் பொறுப்பிலுள்ள இந்திய தேசிய காங்கிரஸ் செய்யும் காரியங்கள் மிக மிக ஆபத்தானவை என்பதைத் தீவிரமாக நான் நம்புவதால் இந்தக் கிளர்ச்சியை ஆரம்பித்திருக்கிறேன்! இதை ஒரு கிளர்ச்சியாக நான் கருதவில்லை. இதைச் சுதந்திர இயக்கமாகவே நான் நம்புகிறேன்."

இப்படி ஆரம்பித்து ராஜாஜி பேசி வந்தபோது கேட்டவர்கள் மெய்சிலிர்த்தனர். தேசத்துக்கு ஏற்படவிருக்கும் பேராபத்தை உணர்ந்தனர். அவரது உணர்ச்சி நிரம்பிய பேச்சு அங்கு குழுமியிருந்தவர்களை விறுகொள்ளச் செய்தது என்பதில் சந்தேகமில்லை.

## தலைவர் ரங்கா

விவசாயக் குடும்பத்தில் பிறந்து வளர்ந்து விவசாயிகளுக்காகவே தமது வாழ்வை அர்ப்பணித்தவர் திரு ரங்கா. அவர் சுதந்திரக் கட்சிக்குத் தலைவராக நியமிக்கப்பட்டிருப்பது பலவிதத்திலும் பொருத்தம். அவர் தமது விரிவான தலைமையுரையில் சுதந்திர இயக்கங்கள் பிற நாடுகளில் எப்படியெல்லாம் நடைபெற்றிருக்கின்றன, அரசாங்கங்கள் எப்படி மக்களை அடிமைப்படுத்துகின்றன என்று விவரித்தார். நமது திட்டக் கமிஷன் போடும் திட்டங்கள் எல்லாம் சோவியத் ருஷ்யாவின் திட்டங்களைக் காப்பி அடித்தாற்போல் இருக்கின்றனவே தவிர, காந்தீயத் திட்டமாக, பாரதநாட்டுப் பண்பாட்டுக்கு உகந்த திட்டமாக இல்லையென்பதை ஆரம்பத்திலேயே, முதல் திட்டம் வெளியானபோதே மக்கள் சபையில் வெளியிட்டதைக் குறிப்பிட்டார். பொது மக்கள் விழிப்படைந்து கம்யூனிஸ முத்திரையுள்ள திட்டங்களை எதிர்த்துக் கிளர்ச்சி நடத்த முன் வருவதைக் கண்டு மகிழ்வதாகச் சொன்னார்.

திரு ரங்கா செயல் திறமையும் இனிய பண்பும் மிக்கவர். பாரத தேசத்தில் எங்கெல்லாம் விவசாய மக்கள் உள்ளனரோ அங்கெல்லாம் அவர் செல்வாக்கு பெற்றிருக்கிறார். அவரது தலைமையின் கீழ் சுதந்திரக் கட்சி மிக பலமான கட்சியாக அமையும் என்ற நம்பிக்கை அனைவருக்கும் ஏற்பட்டது.

மகாநாட்டின் மேடையில் சுதந்திரக் கட்சியைச் சேர்ந்த எல்லாப் பிரமுகர்களும் அமர்ந்திருந்தனர். அவர்களைத் தவிர கட்சியினிடம் தீவிர அனுதாபமும் அக்கறையும் கொண்ட அறிஞர்கள் பலரும் அமர்ந்திருந்தார்கள். எனினும் தேசத்தின் பல பகுதிகளிலிருந்து வந்த பிரதிநிதிகளின் உள்ளத்தில் ஒரு கேள்வி எழுந்துகொண்டேயிருந்தது. 'ஸ்ரீ கே. எம். முன்ஷி அவர்களை எங்கே காணவில்லை?' என்று ஒருவருக்கொருவர் கேட்டுக் கொண்டனர். ஒரு பத்திரிகை, அவர் வந்திருந்து சபையோரின் கவனத்தைக் கவர்வதைவிட வராமலே அதிககவனத்தைக் கவர்ந்தார் என்று எழுதியிருந்தது!

ஆனால் பிரதிநிதிகளின் ஐயங்களையெல்லாம் பிற்பகல் கூட்டத்தில் அடியோடு நீக்கி விட்டார் ஸ்ரீ கே. எம். முன்ஷி.

பிற்பகலில் நடந்த பிரதிநிதிகளின் கூட்டத்தில் சுதந்திரக் கட்சியின் கொள்கைகளை முதன்முதலில் பிரேரேபித்துப் பேசியவர் கே. எம். முன்ஷி. பேசியதோடு இல்லாமல் தாம் சுதந்திரக் கட்சியில் பூரணமாகச் சேர்ந்து விட்டதாகவும் பலத்த கரகோஷத்திடையே

திரு ஹுக்கும் சிங் எம். எல். ஏ.

அறிவித்தார். அதுமட்டு மன்றி மறுநாள் நடை பெற்ற பகிரங்க மகா நாட்டில் காங்கிரஸின் நாகபுரித் தீர்மானத்தை வன்மையாகக் கண்டித் துப் பேசினார். கூட்டுப் பண்ணை அமுலுக்கு வந் தால் நாட்டில் உணவு உற்பத்தி நாசமாகும் என்றார். மத்திய சர்க் காரில் உணவு மந்திரி யாக இருந்ததால் புள் ளிக் கணக்கோடு பேசி னார். அவர் முடித்தபோது, பலத்த 'பம்பாய் மழை' பெய்து முடித்தாற்போலிருந்தது.



ஸர்தார் உத்தம் சிங் நாகோகி எம். பி.

## பஞ்சாபின் கர்ஜனை

இரண்டாவது நாள், அதாவது ஆகஸ்ட் இரண்டாம் தேதி மகாநாட்டில் பேசியவர் களில் முக்கியமாகக் குறிப்பிடப்பட வேண்டி யவர் ஸ்ரீ உத்தம் சிங் நாகோகி அவர்கள். பஞ்சாபில் கிராமப்புறத்து விவசாயிகள் சேர்ந்து, **தேஹாதி ஜனதா** கட்சி என்று ஒரு கட்சி ஏற்படுத்திக் கொண்டு பணி புரிந்து வருகிறார்கள். தேஹாதி ஜனதா என்றாலே கிராம மக்கள் என்று பொருள். பஞ்சாப் கிராம மக்கள் சிறிது காலமாகவே சர்க்காரின் விவசாயக் கொள்கைகளை எதிர்த்து வந்திருக் கின்றனர். இப்போது நாகபுரித் தீர்மானமும் கூட்டுப் பண்ணை விஷயமும் அவர்கள் உணர்ச் சிகளைக் கிளறி விட்டிருக்கின்றன. அந்தக் கட்சி யின் தலைவர்தான் திரு உத்தம் சிங் நாகோகி; மக்கள் சபை அங்கத்தினர். அவர் ஹிந்தியில் பேசியபோது, "பஞ்சாப் உழவன் தனது ரத்தத்தையாகிலும் சிந்தத் தயாராக இருப் பானே தவிர, இந்தக் கூட்டுப்பண்ணை விஷயத் துக்கு ஒருநாளும் இணங்க மாட்டான். தன் நிலத்தைச் சர்க்காருக்குக் கொடுக்க மாட் டான்!" என்று பலத்த குரலில் பேசினார்; இல்லை கர்ஜித்தார்! பஞ்சாப் மக்கள் அலை வரும் ராஜாஜியின் கட்டளைக்குக் காத்திருக் கின்றனர் என்பதாகத் தெரி வித்தார்.

பஞ்சாப் தேஹாதி ஜனதா கட்சிவிரைவில் சுதந்திரக்கட்சி யுடன் இணைவதாக அறிவித் தால் ஆச்சரியப்படுவதற்கில்லை

சுதந்திரக் கட்சியின் பொரு ளாளரும், முன்னாள் கவர்ன ரும், பம்பாய் நகரப் பிரமுக மான திரு எச்.பி.மோடி இலே சான நகைச்சுவை கலந்த சொற்பொழிவாற்றினார்.

"இன்றைய சர்க்கார், வியா பாரத் துறையில் இருப்பவர் களை வெறுக்கிறது. ஆனால் அவர்களுடைய பணப்பை (பர்ஸ்) மட்டும் அதற்குத் தேவையாக இருக்கிறது.

"வியாபார சமூகத்தினரை லாபமே நோக்கமாகக் கொண் டிருப்பதாகத் தூற்று கிறது காங்கிரஸ். ஆனால் இவர்களுக்கு மட்டும் லாப நோக்கமில்லையா, என்ன? எப்படியாகி லும் பதவியிலிருந்தால் போதும் என்றநோக்கத் தோடு எதையும் செய் யத் துணிகிறார்களே. இவர்களுக்குத் துராசை இல்லை என்று எப்படிச் சொல்ல முடியும்?"

ராஜஸ்தானத்தில் ஜெயஸல்மிர் என்று ஒரு குட்டி ராஜ்யம் இருந்தது. அந்த ராஜ்யம் ராஜஸ்தான் மாகாணத்தில் சேர்ந்துவிட்டது. ஆனால் அந்த ராஜ்யத்தின் முன்னாள் அரச குலத்தைச் சேர்ந்த ஹுக்கும் சிங் ஒரு இளைஞர். முற்போக்கு கருத்துக் கொண்ட வர். பாமர மக்களின் நண்பராக விளங்கு கிறார். ராஜஸ்தான சட்டசபையில் அங்கத் தினராக இருக்கிறார். சுதந்திரக் கட்சிக்கு ராஜஸ்தானத்தில் பலத்த ஆதரவு இருக்கிறது என்கிறார் ஹுக்கும்சிங்.

மற்றும் சென்னையிலிருந்துவந்த பேராசிரியர் ரத்தினசாமி, எஸ். எஸ். மாரிசாமி, வி. பி. மேனன் முதலியோரும் பேசினர்.

பீஹார் ராஜ்யத்தில் சட்டசபையிலுள்ள ஆளும் கட்சிக்கு எதிர்க் கட்சியாக விளங்குவது "ஜனதா பார்ட்டி" என்ற மக்கள் கட்சி. இதற்குத் தலைவர், ராம்கர் மகாராஜா. சட்ட சபையில் 35 ஸ்தானங்களுக்கு மேல் இந்தக் கட்சி பெற்றிருக்கிறது. அவரும் சுதந்திரக் கட்சியின் கொள்கைகளை வரவேற் றார். விரைவில் தமது கட்சி சுதந்திரக் கட்சி யுடன் இணைந்து விடக்கூடும் என்றார்.

மகாநாடு ஆரம்பமாவதற்கு முதல்நாள், சென்னை சட்டசபையில் முக்கியமான பலத்த எதிர்க் கட்சியாக விளங்கும் இந்திய ஜனநாயக காங்கிரஸ் சுதந்திரக் கட்சியுடன் இணைந்து விட்டது என்ற செய்தி வெளியாகியிருந்தது. இது தேசமெங்கும் பலத்த பரபரப்பை யுண் டாக்கி யிருக்கிறது என்பது மகாநாட்டில் தெரிந்தது. மகா நாட்டுக்கு வந்த பல கட்சி யினர் நாமும் அந்த மாதிரி முடிவு செய்தால் என்ன என்று துடித்தனர். தங்கள் சகாக்க ளுடன் கலந்து ஆலோசித்துக் கொண்டு சீக்கிரம் முடிவு தெரி விப்பதாகக் கூறினர்.


பேராசிரியர் ரத்தினசாமி

நமது பிரதமர் நேருஜியின் உத்தரப் பிரதேசத்தைச் சேர்ந்த கிராம ராஜ்ய பரிஷத் தலைவர் ஸ்ரீமான் பாலிவால் தாம் பெரு மகிழ்ச்சியோடு சுதந்திரக் கட்சியில் சேர்ந்து விட்டதாக மகாநாட்டிலேயே அறிவித்தார். உத்தரப் பிர தேசத்தில் காங்கிரஸ் ஆட்டம் கண்டிருப்பது நாடறிந்த விஷயம்.

## ஜனநாயகத்துக்கே புது வழி

மகாநாட்டின் முடிவுரையாக ராஜாஜி பேசியபோது, ஒரு அருமையான புத்தம் புதிய கருத்தை வெளியிட்டார்.

"சுதந்திரக் கட்சி தனது அங்கத்தினர்களுக்குப் பூரண சுதந்திரம் அளிக்கிறது. ஒவ்வொரு மாகாணத்துக்கும் தனித்தனிப் பிரச்னை எழலாம். இதைக் கட்சியின் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வந்து அங்கத்தினர்களின் சுதந்திரத்தைக் குறைக்கப் போவதில்லை. உதாரணமாக, சம்யுக்த மகாராஷ்டிரப் பிரச்னையைப் பற்றித் தங்கள் தங்கள் மனச்சாட்சிக்கு ஒப்ப அபிப்பிராயம் கொள்ளவும் அதன்படி நடக்கவும் சுதந்திரக் கட்சி அங்கத்தினர்களுக்குப் பூரண சுதந்திரம் உண்டு. கட்சியின் அடிப்படையான கொள்கைகள் தவிர இதர விஷயங்களில் அங்கத்தினர்களின் மனச்சாட்சியே அவரவர்களுக்கு வழிகாட்டி.

"இந்தப் புது வழியை அகில உலகப் பிரச்னைகளில் கடைப்பிடித்தால் உலகத்தில் எவ்வளவோ சாந்தியும் சமாதானமும் நிலவும். கட்சிக் கட்டுப்பாடு என்ற தளையில்லாத கட்சி சுதந்திரக் கட்சி ஒன்றுதான். ஜனநாயக உலகுக்கே நாம் இதன் மூலம் ஒரு புது வழியைக் காட்டுகிறோம்" என்று கூறினார்.

இப்படி தீர்க்க திருஷ்டியுடன் வகுத்த ஒரு புது வழியை உலகத்துக்கு அளித்த பெருமை இந்தியாவைச் சாரும். இந்தப் புது வழியைக் கண்டுபிடித்தவர் நமது தலைவர் ராஜாஜி என்பது தமிழர்கள் பெருமைப்பட வேண்டிய விஷயமாகும்!

## புது உற்சாகம்

இப்படி இரண்டுநாட்கள் பம்பாயில் நடைபெற்ற மகாநாடு பாரத மக்கள் உள்ளத்தில் எத்தகைய கிளர்ச்சியை யுண்டாக்கி யிருக்கிறது என்பது அகமதாபாத்தில் நிதர்சனமாகக் காண முடிந்தது.

பம்பாயில் நடந்த மகாநாடு ஏற்கனவே அகமதாபாத்திலே நடத்த வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டிருந்தது. தேசத்தின் பல பகுதிகளிலிருந்தும் வரும் மக்களின் சௌகரியத்தை எண்ணி, பிறகு பம்பாயே மகாநாடு நடத்துவதற்குத் தகுதியான இடம் என்று தீர்மானிக்கப்பட்டது. தங்கள் ஊரில் மகாநாடு நடத்தப் போவதாக அறிவித்துவிட்டு, பின்னால் மாற்றினால் மக்கள் பெருத்த ஏமாற்றத்துக்கு உள்ளாவார்கள் என்று குஜராத்திய மக்கள் தலைவர்களான ஸ்ரீ பாயி லால் பட்டேல், ஸ்ரீ தாது பாய் அமீன் முதலியவர்கள் அபிப்பிராயப்பட்டார்கள். அகமதாபாத் மக்களின் ஏமாற்றத்தைத் தவிர்க்க வேண்டி, பம்பாயில் மகாநாடு முடிந்த மறு நாளே ராஜாஜியும் தலைவர் ரங்காவும் அகமதாபாத்துக்குச் சென்று வருவது என்று முடிவு செய்யப்பட்டது. அந்த முடிவின்படி ஆகஸ்ட் 3-ம் தேதி இரவு அகமதாபாத்துக்கு ரயிலில் புறப்பட்டோம்.

## அகமதாபாத் வரவேற்பு

ரயில் அகமதாபாத் அடைந்தபோது ரயிலடியில் ஒரே கூட்டம். சுமார் நாலாயிரம் மக்கள் 'ஜே ஜே' என்று குழுமி நின்றனர். "ராஜாஜிக்கு ஜே!" "சுதந்திரக் கட்சிக்கு ஜே!" என்ற கோஷங்கள் எங்கும் ஒலித்தன. ராஜாஜி ரயிலை விட்டு இறங்கினாரோ இல்லையோ, அவரை நடக்க விட்டார்களா என்பதே சந்தேகமாக இருந்தது. சற்று நேரம் பொறுத்துப் பார்த்தால் பிளாட்பாரத்தில் ஒரு உயரமான மேடை அமைத்து, அதன்மீது அவரை உட்கார வைத்து புஷ்ப மாலைகளாகப் பொழிந்தார்கள். இந்தக் கண்கொள்ளாக் காட்சியைக் கண்டு வருணனும் ஆனந்த மிகுதியால் பன்னீர்த் துளிகளைத் தெளித்தான்!

## ஜன சமுத்திரம்

அகமதாபாத்தில் லால் தர்வாஜா என்ற இடத்தில்தான் பெரும் மைதானம் இருக்கிறது. அங்குதான் சாதாரணமாக எந்த அரசியல் பொதுக் கூட்டமும் நடப்பது வழக்கம். அந்த மைதானத்தில் 4-ம் தேதி மாலை ஐந்து மணிக்கு ராஜாஜி பேசுவார் என்று அறிவிக்கப்பட்டிருந்தது. அன்று நாலு மணிக்கே மைதானம் நிறைந்து விட்டது. கண்ணுக் கெட்டிய தூரம்வரை மக்கள் தலைகள்தான். எந்தப் பக்கம் திரும்பினாலும் மக்கள். இந்தக் காட்சியைப் பார்த்த அகமதாபாத் மக்கள் "இந்தமாதிரி பொதுக் கூட்டம் திரண்டு பலப் பல ஆண்டுகள் ஆகிவிட்டன. சுதந்திரப் போராட்ட காலத்துக்குப்பின் முதன் முதலாக இப்பொழுதுதான் இத்தகைய கூட்டம் அகமதாபாத்தில் கூடியதைப் பார்த்தோம்" என்று பேசிக்கொண்டார்கள்.

அந்தக் கூட்டத்தில் ராஜாஜி சரியாக முக்கால் மணி நேரம் பேசினார். பேசிய ஒவ்வொரு வரியும் உடனுக்குடனே குஜராத்தி மொழியில் மொழி பெயர்க்கப்பட்டது. ராஜாஜி கடைசி வரி பேசி முடிக்கும்வரை அந்த லட்சத்துக்கு மேல் குழுமியிருந்த கூட்டத்தில் ஒருவராவது அப்புறம் இப்புறம் நகரவில்லை!

"நான் பணக்காரர்களைப் பார்க்கிறேன் என்றால், அவர்களை உங்களுக்காகவே பார்க்கிறேன். பாரத நாட்டு ஏழை எளிய மக்களுக்காகவே பார்க்கிறேன். ஏழைகளுக்குத் தொண்டு செய்யப் பணக்காரர்களிடம் பணம் கேட்கிறேன்! அவர்களுக்கும் எனக்கும் வேறு எவ்வித தொடர்புமில்லை" என்றார் ராஜாஜி.

இன்னொரு விஷயத்தையும் குறிப்பிட்டார். "இவ்வளவு பெருங் கூட்டத்தை — உங்களையெல்லாம் திரட்டியது யார்? நானோ என் கட்சியைச் சேர்ந்தவர்களோ அல்ல. சர்க்கார்தான். சர்க்காரின் தவறான காரியங்களும், கொள்கைகளுமே எனது கட்சிக்குப் பிரசார இயந்திரங்களாகும்" என்றார்.

அகமதாபாத் ஆலைகள் நிரம்பிய நகரம். ஆலைத் தொழிலாளர்கள் வாழும் நகரம். அந்தக் கூட்டத்துக்கு ஏராளமான தொழிலாளர்கள் வந்திருந்தார்கள். நடுத்தர மக்கள் வந்திருந்தார்கள். அவர்கள் அனைவரும் சுதந்திரக் கட்சியின் லட்சியங்களில்தான் தங்களின் நல்வாழ்வு நிலைபெற்று நிற்க இடமுண்டு என்பதை உணர்ந்து கொண்டார்கள். ■

(அடுத்த இதழில் முடியும்)

ஸர்தார் லால்ஸிங் பிறப்பாலும், தொழிலாலும், அனுபவத்தாலும் ஒரு விவசாயி. வாழ்நாள் முழுவதும் விவசாயத்திலேயே ஈடுபட்டவர். உலகத்தின் பல பாகங்களையும் சுற்றிப் பார்த்து அயல் நாட்டு முறைகளை நேரில் கண்டறிந்தவர். முன்னாள் பார்லிமெண்டு அங்கத்தினர். மத்திய சர்க்காருக்கு விவசாயத்துறை ஆலோசகராகவும் பஞ்சாப் ராஜ்யத்தின் பிரதம விவசாய அதிகாரியாகவும் திட்டக் கமிஷனின் நீர்ப்பாசன உட்பிரிவின் அங்கத்தினராகவும் பதவி வகித்தவர். அகில இந்திய விவசாயிகள் சம்மேளனத்தின் தலைவர். விவசாயி என்ற முறையில் அவர் கூறியுள்ள கருத்துக்கள் ஆழ்ந்து சிந்திக்க வேண்டியவை. ஆசிரியர்]

# உச்சவரம்பு வேண்டாம்

ஸர்தார் லால் ஸிங்

சில மாதங்களுக்கு முன்பு டில்லியில் நடந்த விவசாயிகள் மகாநாட்டுக்கு மத்திய சர்க்கார் மந்திரி ஒருவர் விஜயம் செய்திருந்தார். அவருடைய அறிவுத் திறனைப் பற்றி எள்ளளவும் சந்தேகமில்லை. விவசாயிகளுக்கும் அவரிடம் மிகுந்த மரியாதை உண்டு. அந்தச் சந்தர்ப்பத்தில், ''தண்ணீர், காற்று, சூரிய வெளிச்சம், வெப்பம் முதலிய இன்றியமையாத பொருள்களெல்லாம் இயற்கையன்னையின் கருணையால் இலவசமாக மனித வர்க்கத்துக்குக் கிடைத்திருப்பது போல், நிலமும் இயற்கையின் ஈகையால் கிடைத்தது. ஆகையால் காற்றையும் தண்ணீரையும் தேவையான அளவுக்கு மட்டும் உபயோகப் படுத்திக் கொள்ளுவதே போல் நிலத்தையும் வரம்புக்கு மீறிச் சொந்தமாக்கிக் கொள்ளாமல், நிலமில்லாதவர்களுக்கும் கிடைக்கும்படி வகை செய்ய வேண்டும். அப்படிச் செய்யாவிடில் அநீதியென்றே கருதப்படும்'' என்று பொருள்படும்படி அவர் பேசினார்.

இதைக் கேட்டு நான் திடுக்கிட்டுப் போனேன். வாதம் புதிதல்ல. இதை ஒரு அமைச்சர் சொன்னதுதான் விந்தையாயிருந்தது. காற்றும், தண்ணீரும், நிலமும் எல்லாம் ஒன்றுதான் என்பதைக் கற்பனை செய்து பார்த்தாலும் ஒப்புக் கொள்ளுவது கடினம். உயிர் வாழ்வதற்குக் காற்றும் தண்ணீரும் போல் நிலம் இன்றியமையாதது அல்ல. பஞ்சாப் ராஜ்யத்தில் சில சமயம் அரசாங்கத்தினிடமிருந்தும் கூட மார்க்கெட் மதிப்புப்படி முழுத் தொகைக்குத்தானே இப்போது நிலம் வைத்திருப்பவர்கள் வாங்கினார்கள். இயற்கை அளித்தது என்று இலவசமாக ஒருவரும் நிலத்தைக் கொடுத்துவிடவில்லையே? கரம்பாகக் கிடந்த பூமியைப் பண்படுத்த ஆயுட்காலம் முழுதும் உழைத்துப் பெரும் பணம் செலவு செய்த பிறகுதானே அது பயிரிடும் நிலைக்கு வருகிறது? வெட்டவெளியாக இயற்கையன்னை அளித்தபடியே கோடிக்கணக்கான ஏக்கர் பூமி கேட்பாரில்லாமல் பரந்து கிடக்கின்றனவே. நிலச் சீர்திருத்தக்காரர்களும் நிலப்பசியால் வாடி வதங்குகிறவர்களும் இவற்றையெல்லாம் எடுத்துக் கொள்ளுவது தானே? அதன் மீது ஒருவருக்கும் கவனம் செல்ல வில்லை. கணக்கில்லாது பணம் செலவு செய்து கஷ்டப்பட்டுப் பண்படுத்தி வைத்திருக்கும் தற்போதுள்ள நிலச் சொந்தக்காரனிடமிருந்துதான் நிலத்தைச் சுரண்டத் தோன்றுகிறது. இதிலிருந்து நிலச் சீர்திருத்தக்காரர்களைக் கவருவது நிலம் அல்ல; நிலத்தில் முதலீடு செய்யப்பட்டுள்ள சொத்தும் அதை அபிவிருத்தி செய்யச் செலவழித்த மூலதனமும் என்பது தெளிவாகத் தெரியும். தான் உழைக்காமல் பிறர் உழைப்பைக் கொண்டு பயன் அடைய வேண்டுமென்பதே நோக்கம். விவசாயிகள் சுதந்திரத்துடன் அவர்கள் தொழில் புரிவதைச் சர்க்கார் விரும்ப வில்லையானால் ஒவ்வொரு விவசாயிக்கும் நிரந்தரமான சிறு உத்தியோகம்—பியூன், காவற்காரன் இது போன்ற வேலையானாலும் போதும்,- கொடுக்க அரசாங்கம் முன் வரட்டும். லக்ஷக்கணக்கான குடிகள் விவசாயத்தை விட்டு விடுவார்கள் என்று நான் தைரியமாகச் சொல்லுவேன். விவசாயம் லாபகரமான தொழில் அல்ல. மக்களுடைய பசி நிலப் பசி அல்ல—வயிற்றுப்பசி, உணவுப் பசி. அவர்களுக்கு நிலம் வேண்டாம்; உணவு வேண்டும். தண்ணீர், காற்று போன்று ஜீவித்திருக்க இன்றியமையாதது உணவுதான். இதை நன்றாக உணர வேண்டும்.



திரு ஸர்தார் லால் ஸிங்

நிலத்தை மற்றப் பொருள்களுடன் ஒப்பிட வேண்டுமென்றால் ஒரு தொழிற்கூடம், பஞ்சாலை, அல்லது தொழிற்சாலைக்கு

ஒப்பிடலாம். உற்பத்திப் பெருக்கும், உற்பத்திப் பெருக்கில் ஈடுபட்டுள்ள எல்லோருக்கும் லாபத்தைப் பங்கிடும் முறை எந்தத்தொழிலில் எல்லாம் காணப்படுகின்றனவோ, அவற்றுடன் விவசாயத்தையும் ஒப்புநோக்க வேண்டும். விவசாய விளைபொருளில் ஈடுபட்டுள்ள சொந்தக்காரன், குடியானவன், பண்ணையாள் எல்லோருக்கும் லாபத்தில் பங்கு இருக்க வேண்டும். பலவீனரைப் பலமுள்ளவர்கள் சுரண்ட விடாமல் பார்த்துக் கொள்ளட்டும். உரிமைகளைப் புறக்கணிக்கக் கூடாது. இதைத் தவிர, வேறு எந்த முறையில் நில உடைமையைக் கருதினாலும் சிக்கல் மிகுந்து கஷ்டங்கள் தான் வரும்.

மேலும், ஒவ்வொருவனும் சிறிதளவு நிலமாவது வைத்திருக்க வேண்டியது அவசியம்தானா? அதிலும் இந்தியாவைப் போன்று தலைக்குச் சராசரி 75 சென்டு கூடக் கிடைக்காத பெரிய தேசத்தில் இந்த "நிலமில்லாதவருக்கெல்லாம் நிலம்" என்ற கோஷம் அவசியமா? ஆஸ்திரேலியா கண்டத்தில் நிலப்பரப்பு அதிகம். அதைப் பங்கிடு செய்தால் தலைக்கு இந்தியாவில் தலைக்குக் கிடைப்பதைக் காட்டிலும் 80 மடங்கு அதிகம் கிடைக்கும். ஆனால் அங்கே 14 சதம் மக்களே நிலமுள்ளவர்களாக இருக்கின்றனர். மற்ற 86 சதம் மக்கள் நிலமில்லாதவர்களே. இங்கிருப்பது மாதிரி 'எல்லோருக்கும் நிலம்' என்ற கிளர்ச்சி ஏதுமில்லை.

அமெரிக்கா நில விஸ்திரணம் மிகுதியாக உள்ள பெரிய நாடு. ஒரு காலத்தில் மக்களில், 85 சதவிகிதத்தினர் விவசாயத்தில் ஈடுபட்டிருந்தனர். இப்போது 11.5 சதவீத மக்கள் மட்டுமேவிவசாயத்தில் ஈடுபட்டிருக்கின்றனர். எனினும், அவர்கள் உற்பத்தி செய்யும் விளைபொருள்கள் அமெரிக்க மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்தபின், இந்தியாவைப் போன்ற பற்றாக்குறை நாடுகளுக்கு அனுப்புவதற்கும் போதுமானதாக இருக்கின்றன.

நமது நாட்டிலோ நிலைமை முற்றிலும் வேறு. ஏற்கனவே நிலத்தை நம்பிப் பிழைக்கும் மக்களின் எண்ணிக்கை அதிகம். இவர்களது எண்ணிக்கையை மேன்மேலும் பெருக்குவதினால் என்ன நன்மை விளையும்? நிலைமையைச் சமாளிக்க நமது சர்க்காருக்குப் போதிய புதுக் கருத்துக்கள் இல்லை என்பதே இதிலிருந்து விளங்குகிறது.

நில உடைமைக்கு உச்ச வரம்பு கட்டுவதற்குக் காரணம் இரண்டு லட்சியங்கள்தான் இருக்க முடியும். முதலாவது அதிக உணவு உற்பத்தி அல்லது தேசிய செல்வத்தின் அதிகரிப்பு. இரண்டாவது மக்களில் ஒரு சாராருக்கும் மற்றொரு சாராருக்குமிடையே காணப்படும் ஏற்றத் தாழ்வுகளைச் சமன்படுத்துவது. இவைதான் நாகபுரித் தீர்மானத்திலும் வலியுறுத்தப் பட்டிருக்கின்றன.

ஆனால் இந்த இரண்டு லட்சியங்களும் நிறைவேறாது. நல்ல முறையில் நடைபெற்று வரும் பெரிய பண்ணைகளையும், தோட்டப் பகுதிகளையும் சின்னஞ்சிறு துண்டு நிலங்களாகச் செய்வதால் உற்பத்தி குறையுமே தவிர அதிகரிக்காது என்பது பலதடவை எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது. இதை ஒரு சாக்காக வைத்து ஏற்கனவே தங்கள் நிலங்களை நல்ல முறையில் உபயோகப்படுத்தி வரும் நிலச்சுவான்தார்களிடமிருந்து நிலத்தைப் பறிப்பது நீதியற்ற செயலாகும். சமூகநலம் பெருகும் என்பதும் இதுபோலவே. வருஷத்துக்கு மூவாயிரத்து அறுநூறு ரூபாய் வருமானம் கிடைக்கக்கூடிய நிலத்தை இந்து

## லாபமா, கொள்ளையா ?

தனியார் தொழில் ஸ்தாபனங்கள் அதிக லாபம் சம்பாதிக்கின்றனர் ; அதனால் மக்கள் நலனுக்காக அவர்கள் செயலாற்றுகிறதில்லை ; என்று இரண்டு குற்றச் சாட்டுகள் படிக்கப்படுகின்றன. தேசிய வர்த்தகக் கார்ப்பரேஷன் இந்த இரண்டு குற்றங்களையும் விலக்கித்தான் செயல் புரிகின்றதா ? அவர்கள் கொடுக்கும் புள்ளி விவரங்களே பதிலளிக்கட்டும்.

ஒரு கோடி ரூபாய் மூலதனத்தையுடைய இந்தக் கார்ப்பரேஷன் 1956–57 ஆண்டில் நிகர லாபமாக 32 சதவிதமும், 1957-58 ஆண்டில் 105 சதவிதமும் சம்பாதித்திருக்கிறது. நிகர லாபம் என்றால் சர்க்காருக்குச் சேர வேண்டிய வருமான வரி, தேய்மானம், வசூலிக்க முடியாத கடன்கள் இப்படி எல்லாவற்றுக்கும் ஒதுக்கின பிறகு கிடைத்த லாபம்.

தனியார் ஸ்தாபனத்தின் மிகப் பெரிதாக உள்ள டாடா எஃகுத் தொழில், சிந்தியா கப்பல் தொழில், அசோஸியேடட் சிமிட்டி இம் மூன்றையும் ஒப்பிட்டுப் பார்க்கலாம். 1957-58 ஆண்டில் டாடா இரும்புக் கம்பெனி 15½ சதவிதமும், அசோஸியேடட் சிமிட்டிக் கம்பெனி 11 சதவிதமும் லாபம் அடைந்திருக்கின்றனர்.

மூலதனத்தில் 35 சதமும் 105 சதமும் லாபம் சம்பாதிப்பது லாபமா ? 14 சதமும் 11 சதமும் லாபம் சம்பாதிப்பது லாபமா ?

சர்க்கார் தொகுதித் தொழில்களும் தேசிய வர்த்தகமும் உபரியாக லாபம் கிடைக்கும் வகையில் நடத்தப்பட வேண்டும் என்பதுதான் காங்கிரசின் புதுக் கொள்கை. வரிகள் மூலம் சர்க்கார் பணம் திரட்டுவது போய், வியாபாரம் மூலம் பணம் சேர்க்கின்றனர்! உணவு தானிய வர்த்தகத்தையும் மேற்கொண்டால் இந்தக் கதிதானே அங்கேயும் உண்டாகப் போகிறது !

—ப்ரீ பிரஸ் ஜர்னல் மே 19, 1959

போர்கள் கொண்ட ஒரு குடும்பத்துக்கு விட்டு உபரி நிலத்தை எடுத்துக் கொள்ள வேண்டு மென்று சொல்லப் படுகிறது. பஞ்சாப் பிரதேசத்தில் இதற்கு 30 ஏக்கர் என்று வரம்பு கட்டப்படவிருக்கிறது. இந்த வருமானம் நபருக்கு மாதத்துக்கு ரூ 60 கணக்காகும். இதைக் கொண்டு அந்தக் குடும்பம் உணவுச் செலவு, குடியிருப்பு வசதி, கல்வி, வைத்தியச் செலவு, கல்யாணம், சமக்கடன் முதலிய இதர செலவுகள் எல்லா வற்றையும் சமாளித்துக் கொள்ள வேண்டும். அதாவது உயர் தரத்திலுள்ள விவசாய குடும் பங்கள் சர்க்கார் உத்தியோகத்திலிருக்கும் கடைநிலை ஊழியர்களின் நிலைமைக்குத் தாழ்த் தப்படுவார்கள். ஆனால், நகர்ப்புறத்தில் கோடிக்கணக்கில் மதிப்பிடக் கூடிய சொத் துக்கள் ஒருவன் வைத்திருந்தாலும் அவனுக்கு எந்தவித வரம்புமில்லை. நகர்ப்புறங்களிலுள்ள வர்களுக்கு முதலாளித்துவ முறை நியாயமும் கிராமப் புறங்களிலுள்ள விவசாயிகளுக்கு "சோஷலிஸபாணி" நியாயமும் கம்யூனிஸ்டு முறை நியாயமும் அங்கீகரிக்கப்படும் ஒரு சீர்திருத்தத்தில் சமூக நீதி எங்கேயிருக்கிறது? கருத்து ஒற்றுமையாவது இருக்கிறதா?

இவைகளைத் தவிர இன்னும் பல குறைபாடு களும் நில உச்சவரம்பு விஷயத்தில் மலிந்து கிடக்கின்றன. சிலவற்றை மட்டும் கீழே குறிப்பிடுகிறேன்:—

1. விஸ்தீரணத்தை அனுசரித்து வரம்பு கட்டுவது அர்த்தமற்றது. ஏனெனில் நிலத் தின் தரமும், அதில் விளையும் பொருள்களின் அளவும், நிலத்தின் மதிப்பும் இடத்துக்கு இடம் மாறுபடும். இரண்டு மூன்று மைல் களுக்குள்ளேயே ஒரு நிலத்தைவிட மற் றொன்று ஐந்து மடங்கு பத்து மடங்குஅதிக மதிப்புள்ளதாக இருக்கும். நமது பாரதத்தில் பரந்து கிடக்கும் விளைநிலங்களைத் தரப்படுத்து வது எளிதான காரியமல்ல. லஞ்ச ஊழல் களுக்கு வேண்டிய இடம் உண்டு.

2. மிகக் குறைந்த அளவில் வரம்பு ஏற் படுத்தினால், உயர்ந்த தரமுள்ள நிலங்களை அதிக விலைக்குப் பணக்காரர்களுக்கும் மட்ட ரகமான நிலங்களை ஏழை மக்களுக்கும் மாற்றி விட வாய்ப்புண்டாகும். செயல் முறையில் அப்படித்தான் நடைபெறும். தரக் குறை வான நிலங்களை வைத்துக் கொண்டு பண வசதிகள் இல்லாத ஏழை விவசாயி அந்நிலங் களிலிருந்து அதிகமான மகசூலை விளை விக்க முடியாது.

3. புறம்போக்கு நிலங்களைச் சீர்திருத்திச் சாகுபடியின் கீழ் கொண்டு வருவதற்கு உற்சாகம் காட்டும் தனி விவசாயிகள் உச்ச வரம்பு வந்து விடும் என்ற பயத்தினால் இனி ஊக்கம் குன்றி விடுவர். தனிப்பட்டவர்கள் இந்த முயற்சியில் ஈடுபடவில்லையானால் அந்த வேலையை அரசாங்கந்தான் மேற்கொள்ள வேண்டும். இது சம்பந்தமாக இது வரையில் சர்க்கார் எடுத்த முயற்சிகள் பிரமாதமாகப் பயன் அளிக்கவில்லை. அவர்களுக்கு ஆகும் செலவும் அதிகம். தாங்களாலும் செய்ய முடியாததும் தனியார்களையும் செய்ய ஊக்க மளிக்காததுமான இந்தச் சீர்திருத்தத்தினால் இப்போதுள்ள காலி நிலங்கள் நிரந்தரமாகக் காலியாகவே இருக்கும்.

4. யந்திர சாதனங்களைக் கொண்டு விவசாயம் செய்யும் வசதியும் தகுதியுமுள்ள இடங்களில் உச்சவரம்பு மிகக் குறைந்த அளவில் ஏற்படுத்தினால், அம்மாதிரி நவீன முறை விவசாயம் நடக்கவொட்டாமல் தடை யுறும். இது பிற்போக்கான நடவடிக்கை யாகும். இதை ஊக்குவிக்கும் உச்சவரம்புக் கொள்கையும் பிற்போக்கான நடவடிக்கை என்பதில் என்ன சந்தேகம்?

5. இது வரையில் விவசாயத்துக்கு வேண்டிய பண வசதி சீரிய மேற்பார்வை, ஊக்கம், அறிவு, நிர்வாகத் திறன் முதலிய வற்றை லாபநஷ்டம் பாராமல் தலைமுறை தலைமுறையாக அளித்து வந்த நிலச் சொந்தக் காரர்கள் உச்சவரம்பு வந்தால் நிலத்தை விட்டு விலகிக் கொள்ள நேரிடும். உடனடியாக இல்லா விட்டாலும் படிப்படியாக இது நிச்சயம் நேரிடும். அப்போது நிலங்களெல் லாம் பாமர மக்களாகிய ஏழை ஜனங்கள் கையில் சிக்கி, வசதியும் நிர்வாகத் திறனுமின் மையால் விவசாயம் பண்டைகால முறையி லேயே தங்கிச் சீரழிந்து நிற்கும். இந்திய விவசாயத்துக்கு இதைக் காட்டிலும் அதிக மான தீமை வேறு இருக்க முடியுமா? நவீன முறைகளும் அறியாமையும் கூடிச் செயல் புரியாது. அறியாமையே மிகுதியாக யுள்ள ஒரு சர்க்காரிடத்திலிருந்து யந்திர சாதன நவீன முறை விவசாயத்தை எதிர்பார்ப்பது நடக்காத காரியம்.

ஆகவே, இம்மாதிரி அசட்டுத்தனமான கொள்கைகளைக் கைவிட்டு நாட்டுக்கு மிகவும் தேவையான உற்பத்திப் பெருக்கைப் பற்றிச் சர்க்கார் கவனம் செலுத்தினால் பலனுண்டு.

## கூட்டு விவசாயம், நில உச்சவரம்பு, சர்க்கார் வர்த்தகம்

ஆகிய விஷயங்கள் பற்றிய இந்த ஆராய்ச்சி அரங்கத்தில்
அடுத்த வாரம் ஆகஸ்டு 23-ந் தேதி கல்கி இதழில்

**ஸர்தார் உஜ்ஜல் ஸிங், டாக்டர் எஸ். சந்திரசேகரன்**
**டாக்டர் பி. ஆர். ஷெணய்**

ஆகியோரின் கட்டுரைகள் வெளிவரும்.

NEW

Rs100

# ஆஹா! அருமையான பொக்கிஷம்!

பல்லாண்டு காலம் உன்னதமான
ஒலியை வழங்குவதனால் நீங்கள்
மர்பி மாடல் 0352 ரேடியோவை
ஓர் பொக்கிஷமாகப் பாதுகாக்கலாம்.
உறுதியான அழகிய காபினட்டில்
அமைக்கப்பட்ட உயர்ந்த ரேடியோ...
நீண்ட கால ஆராய்ச்சி, பல
சோதனைகள், மறு சோதனைகள்
முதலியவற்றை அதன்
தயாரிப்பின் ஒவ்வொரு
நிலையிலும் நிகழ்த்தி இந்த ரேடியோவை
மிக உன்னதமாகத் தயாரித்துள்ளனர்.

**மர்பி 0352**

இந்த விசேஷ மதிப்புக்களை
ரூ. 275.00க்கு* வழங்குகிறது

- ஆல் வேவ்ஸ் 3 பாண்டுகள்
- 5 வால்வுகள் 8 வகை செயல்திறன்

*உள்ளூர் வரிகள் தனி

# மர்பி
# 0352





கவர்ச்சியான தோற்றம்!
இனிமையான நாதம்!

[ இக்கட்டுரையை வழங்கும் திரு ஏ. எஸ். நாராயணஸ்வாமி அய்யர் ஒரு முற்போக்குள்ள விவசாயி. 1951ம் ஆண்டில் ஏக்கராவுக்கு 8,500 பவுண்டு நெல் உற்பத்தி செய்து அம்பாசமுத்திரம் தாலூக்காவிலேயே அதிக உற்பத்திக்கான இரண்டாவது பரிசு பெற்றவர். நெல்லை மாவட்ட ரயத்துவாரி நிலச்சுவான்தார்கள் சங்கத்தின் தலைவராக 1947ம் ஆண்டிலிருந்து பணியாற்றுபவர். வழக்கறிஞர்கூட. கூட்டுறவு விவசாயத்தைப் பற்றி அவர் விளக்கியுள்ள விஷயங்கள் ஆராய்ச்சித் திறனுடன் பிரகாசிக்கின்றன. — ஆசிரியர் ]

# கூட்டுப் பண்ணைகள் ஏன் கூடாது?

ஏ. எஸ். நாராயணஸ்வாமி அய்யர்

## முகவுரை

சென்னை மாநிலத்தில் விவசாய நிலங்கள் எல்லாம் ரயத்துவாரி முறைப்படியே ஒவ்வொரு பட்டாதாரும் வைத்திருக்கிறார். ரயத்துவாரி முறையின் கீழ் உள்ள மொத்த நிலப்பரப்பு, ஜமீன்தாரி ஒழிப்பினாலும், 1936-க்கு முன்னிருந்த இனாம் கிராமங்கள் சென்னைச் சட்டம் 26-ன் கீழ் ஒழிக்கப்பட்டதாலும் விரிவடைந்து விட்டது. ஆகவே 1936-க்குப் பின்னுள்ள முழு இனாம் நிலங்களும் சிறு இனாம் நிலங்களும் தவிர, மற்ற விவசாய நிலங்கள் எல்லாம் ரயத்துவாரி முறையின் கீழேதான் இருக்கின்றன. மிகுதியாக உள்ள நிலப்பரப்பு மிக மிகக் கொஞ்சம்.

## தவறான கருத்துக்கள்

சில வருஷங்களாகப் பெரியவர்களும் சிறியவர்களுமான அரசியல்வாதிகள் தீவிரப் பிரயாசையுடன் ரயத்துவாரி நிலச் சொந்தக்காரரும் ஜமீன்தாரும் ஒரே இனத்தைச் சேர்ந்தவர்கள்; இவர்கள் இருவருக்கும் வித்தியாசமில்லை என்ற தவறான கருத்தைப் பரப்புவதில் முனைந்திருக்கின்றனர். இது கருத்துக் குழப்பத்தினால் ஏற்பட்ட விபரீத விளைவு. 1956-57-ம் ஆண்டில் தேர்தல் சமயத்தில் தங்கள் சாதனைகளை விவரித்தும் அடுத்த பதவி காலத்தில் தாங்கள் செய்யவிருக்கும் அபாரமான காரியங்களையும் விவரிக்கையில், "நாங்கள் மகாராஜாக்களை யெல்லாம் தீர்த்துக் கட்டிவிட்டோம். ஜமீன்தார்களை யெல்லாம் ஒழித்து விட்டோம். நிலச்சுவான்தாரர்களையும் அதேபோல் ஒழித்துக்கட்ட உறுதி கொண்டுள்ளோம். அவர்களை ஒழித்து விட்டு நிலங்களை உழவர்களுக்குக் கொடுப்போம்!" என்று காங்கிரஸ் கட்சியினர் யுத்த முழக்கம் செய்தார்கள். அவர்கள் எண்ணத்தில் மகாராஜாக்களுக்கும் ஜமீன்தார்களுக்கும் நிலச்சுவான்தார்களுக்கும் எவ்வித வித்தியாசமும் இல்லை போலும்! அல்லது இம்மூன்று வர்க்கத்தினரையும் ஒன்றாகவே சேர்த்து, உழவர்களின் உழைப்பைப் பயன்படுத்திக் கொண்டு அவர்களைச் சுரண்டிப் பிழைக்கும் நடுவாந்தரக்காரர்கள் என இழிவாகப் பேசுவதற்கு அவர்களுக்கு அப்போதைக்கு ஏற்றதாக இருந்தது போலும்! 1947-ம் ஆண்டுக்குப் பின் கல்வியறிவில்லாத மக்களுக்கு "உழவனுக்குத்தான் நிலம்; நிலச்சுவான்தார்கள் எக்கேடாவது கெட்டு ஒழியட்டும்" என்ற கருத்தைத்தான் அரசியல்வாதிகள் இடைவிடாது போதித்துக் கொண்டே வருகின்றனர்.

ரயத்துவாரி முறையில் நிலச் சொந்தக்காரனின் நிலைமையைப் பற்றி இம்மாதிரி தவறான அபிப்பிராயத்தைப் பரப்பியதன் விளைவாக, காங்கிரஸ் மேலிடமும், தேசிய அபிவிருத்திக் கௌன்சிலும் கூட ரயத்துவாரி பட்டாதாரர் உண்மையிலேயே ஒரு "நடுவாந்தரக்காரர்தான். அவரை ஒழித்து விட்டு அரசாங்கத்துக்கும் உழவனுக்கும் நேரடித் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ள வேண்டியது அவசியந்தான்" என்று எண்ணத் தொடங்கி விட்டனர்.

இந்த விஷயத்தில் உண்மையறிந்த நமது சென்னை மந்திரிகள் கூட, "சரித்திர பூர்வமாக இந்தக் கருத்துக்கு ஆதாரமில்லை; இது தவறான அபிப்பிராயம்" என்று உண்மையை எடுத்துரைப்பதற்குப் பதிலாக அரசியல்வாதிகள் சொல்லும் தவற்றையே சரியென்று ஒத்துப் பாடுவது விசனிக்கத் தக்கது. இந்தத் தவற்றை அடிக்கடி எடுத்துச் சொல்லித் திருத்த முயற்சி செய்கின்றன விவசாயிகள் சங்கமும் ரயத்துவாரி கழகங்களும். பல தடவைகளில் இது சம்பந்தமான தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டு மகஜர்களும் சமர்ப்பிக்கப்பட்டிருக்கின்றன. இந்தத் தவற்றை இங்கே மீண்டும் ஒரு முறை எடுத்துச் சொல்லுவது மிகையாகாது. அவசியமே.

## ரயத்துக்கள் ஜமீன்தாரர்களல்ல

ஜமீன்தாரி முறைக்கும் ரயத்துவாரி முறைக்குமுள்ள வித்தியாசம் வட துருவத்துக்கும் தென் துருவத்துக்கு முள்ளது மாதிரி. அடிப்படைத் தத்துவங்களிலேயே வித்தியாசம் இருக்கிறது. ஜமீன்தாருக்கு வருமானத்தில் மட்டுமே பங்கு உண்டு. அவனுடைய ஆதிக்கத்திலிருந்தாலும் குடியானவர்கள் நிரந்தரமாக வைத்துக் கொண்டிருக்கும் நிலங்களுக்கும் அவனுக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை. இந்நிலை வசூலிப்பதற்குச் சுலபமான மார்க்கமாக இருக்குமென்று எண்ணி அரசாங்கம் இந்தப் பணத்தை வசூலிப்பதற்காகவே ஜமீன்தாரர்களைத் தங்கள் ஏஜெண்டாக நியமித்தார்கள். சென்ற நூற்றாண்டின் இறுதியில் நிரந்தரத் தீர்வை விதிக்கப்பட்ட நிலங்களுக்கு அரசாங்கத்துக்குச் சேர வேண்டியது தீர்வையில் மூன்றில் இரண்டு பாகம் என்று நிச்சயிக்கப்பட்டது. மீதியுள்ள மூன்றில் ஒரு

பாகத்தை ஜமீன்தார் தனது வசூல் செலவுக்காகவும் ஊதியத்துக்காகவும் எடுத்துக் கொள்ள வேண்டியது என்று ஏற்பாடு செய்யப்பட்டது.

ஆனால் ரயத்துவாரி பட்டா நிலங்களிலுள்ள அயன் ரயத்து அந்த நிலத்துக்குச் சொந்தக்காரனும் விவசாயியும் உழவனும் ஆவான். நிலத்துக்குச் சம்பந்தப்பட்ட மேல் வாரப் பாத்தியதையும் குடி வாரப் பாத்தியதையும் அவனுக்கே சொந்தம். அரசாங்கத்துக்குச் சேர வேண்டிய கிஸ்திப் பணத்தை மட்டும் அவன் நேரடியாகச் சர்க்காருக்குச் செலுத்தி விட்டால் போதும். தீர்வையும் முப்பது ஆண்டுகளுக்கு ஒரு முறை சர்வே மேற்கொள்ளப்பட்டு நிர்ணயிக்கப்படும். அந்தத் தீர்வைதான் கிஸ்தியாகக் கொடுக்கப்படுகிறது. சுருங்கச் சொன்னால் அவன்தான் ரயத்து. சொந்த நிலமுள்ள ''எஜமான விவசாயி'' (Peasant Proprietor).

## சுப்பிரமணியம் கமிட்டியின் சிபார்சு

சரித்திர பூர்வமாக ஏற்பட்டுள்ள இந்த ரயத்துவாரி முறையின் ஆதார உண்மையைக் கருத்தில் கொண்டு நிலத் தீர்வை வருமானமும் சீர்திருத்தமும் என்பது பற்றிப் பரிசிலனை செய்ய 1950-ல் நியமிக்கப்பட்ட சுப்பிரமணியம் கமிட்டி தனது யாதாஸ்தில் ''நமது மக்களின் சம்பிரதாயத்துக்கும் அறிவாற்றலுக்கும் முற்றிலும் தகுதி வாய்ந்த விவசாய முறை சொந்தக்கார - எஜமான- விவசாயி முறைதான்'' என்று சிபாரிசு செய்தது. இரண்டு ஐந்தாண்டு திட்டங்களும் கூட, ''கிராமப் புறங்களின் பொருளாதார அமைப்பு சொந்தக்கார - எஜமான - விவசாயி அடிப்படையில் இருப்பதுதான் இலக்கியமான முறை'' என்பதை அங்கீகரித்திருக்கின்றன. ஆனால் நடைமுறையில் நில உடைமையையும் வெள்ளாமையையும் ஒன்றாக இணைக்க எப்படி நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும் என்பதில்தான் சுப்பிரமணியம் கமிட்டிக்கும் திட்டக் கமிஷனுக்கும் வித்தியாசங்கள் தோன்றத் தொடங்கின. இந்த வித்தியாசங்களைப் பற்றியோ, அல்லது அவர்கள் செய்த சிபார்சுகளையோ பரிசீலிக்க இங்கே நமக்கு அவசியமில்லை. நாம் இங்கே கவனிக்க வேண்டியது, இதுகாறும் கிராமாந்திரப் பொருளாதாரம் சொந்தக்கார - எஜமான - விவசாயி அடிப்படையில் இருக்க வேண்டுமென்ற கருத்து நாகபுரி காங்கிரஸில் திடீரென்று கூட்டுப் பண்ணை விவசாயமாக இருக்க வேண்டுமென்று மாறுபட்டுவிட்டது என்பதே.



ஏ. எஸ். நாராயணஸ்வாமி அய்யர்

## சேவை கூட்டுறவை எதிர்க்கவில்லை

கூட்டுப் பண்ணை விவசாயத்தைப் பற்றி விவாதிப்பதற்கு முன், மேலும் ஒரு விஷயத்தைப் பற்றித் தெளிவுபடுத்திக் கொள்ள வேண்டும். கூட்டுறவு முறையை எதிர்ப்பவர்கள் கூட உலகத்தில் இருக்கிறார்களா, இப்படியும் மனிதர்கள் உண்டா என்று பிரதமர் நேருஜி ஆச்சரியப்பட்டுப் போனதாகக் கூறப்படுகிறது.

இவ்வாறு அவர் சொல்லியிருந்தால் அது நியாயமல்ல. கூட்டுறவுத் தத்துவத்தை ஒருவரும் எதிர்க்கவில்லை. கூட்டுறவு முறை, முற்றிலும் வரவேற்கத்தக்கது. நாட்டில் எல்லோருடைய விருப்பமும் கூட கடன் வசதி, விற்பனை வசதி, சப்ளை வசதி முதலியவற்றைச் சரிவர அளிக்கவல்ல கூட்டுறவுக் கட்டுக்கோப்பு சிறப்பான முறையில் உருவாக வேண்டும் என்பதுதான். நாகபுரித் தீர்மானத்தில் இரண்டாவது பாராவில் கூறப்பட்டுள்ள சேவா கூட்டுறவுச் சங்கங்கள் உருவாவதில் எந்தவித ஆட்சேபனையும் இருக்க முடியாது. மேலும், அம்மாதிரி சேவா சங்கங்கள் சுயேச்சையாகவே ஏற்பட்டு அவற்றின் சேவைகளும் நல்ல விதைகள், ரசாயன உரம், விவசாயக் கருவிகள், விற்பனை முதலிய வசதிகளையும் செய்வதானால் அவற்றை நிச்சயம் வரவேற்பார்கள். ஆனால் கூட்டுறவுச் சங்கங்களின் ஆதிக்கம் நிலத்தில் பயிரிடும் வேலையில் மட்டும் பரவக் கூடாது. சுருங்கச் சொன்னால் எதிர்ப்புகளெல்லாம் கூட்டுப் பண்ணை விவசாயத்துக்கே தவிர, கூட்டுறவுக் கொள்கைக்கு அல்ல.

முன்னுரையாக விளக்கப்பட்ட இக்கருத்துக்களைக் கவனத்தில்வைத்து, காங்கிரஸ் இப்போது மக்கள் மீது திணிக்கப் பார்க்கும் கூட்டுப் பண்ணை விவசாயத்தை விருப்பு வெறுப்பின்றி ஆராய்வோம். இந்தப் பிரச்னையை மூன்று கோணங்களிலிருந்து பரிசீலனை செய்யலாம்:

1. இந்த முறை விரும்பத் தக்கதுதானா?
2. இது சாத்தியமானதா?
3. இதனால் உணவு உற்பத்தி பெருகுமா?

## இது விரும்பத்தக்கதா?

எல்லா நாடுகளிலும் இருப்பதைப்போலவே நமது நாட்டிலும் தன்னுடையதென உரிமை கொள்ளும் தன்மை மனித இயல்பில் குடிகொண்டிருக்கிறது. மனித நடவடிக்கைகள், செயல் திறன் எல்லாவற்றுக்கும் இந்த உணர்ச்சிதான் ஆதாரமும் ஆரம்ப ஸ்தானமும். ஒரு தனிப்பட்ட விவசாயி தன்னுடைய சொந்த நிலத்தில் வேலை செய்வதில் காட்டும்

ஊக்கமும் உற்சாகமும் சமூக சொத்தான நிலத்தில் வேலை செய்யும்போது காட்ட மாட்டான். சிறிய விவசாயியாக இருந்தாலும், பெரிய விவசாயியாக இருந்தாலும், நிலத்தில் முதலீடு செய்திருந்தாலும் சரி, நிலத்தில் வேலை மட்டும் செய்வதானாலும் சரி, விவசாயி நிலத்தில் பற்றுக் கொண்டே வாழ்கிறான். ''என்னுடைய குடும்பம்,'' ''என்னுடைய வீடு,'' ''என்னுடைய தோட்டம்,'' ''என்னுடைய நிலம்'' என்ற உணர்ச்சி அவனுக்கு மகிழ்ச்சி யூட்டுகிறது. தன்னுடைய சொத்து என்பதற்கும் பிறத்தியார்களின் சொத்து என்பதற்குமுள்ள வித்தியாசத்தை எடுத்துக் காட்டத் தன்னுடைய குழந்தையையும் மற்றவர்கள் குழந்தையையும் ஒருவன் எவ்வாறு நடத்துகிறான் என்பதைப் பார்த்தால் தெரியும்: தனது குழந்தையின் மூக்கு ஒழுகினால் அதைத் தன் கைக்குட்டையால் துடைத்து விடுகிறான் ஒருவன். மற்றவர் குழந்தையின் மூக்கு ஒழுகினாலும் அருகில் கூடப் போவதில்லை. இது சாதாரணமாகக் காணப்படும் மனித சுபாவம். இதைக் குறை கூறுவதில் உபயோகமில்லை. சமூக தத்துவத்துக்கு இந்தத் தன்மை ஏற்காது என்று இதை மாற்றி அமைக்க முற்படுவது தவறு. இந்த மனித சுபாவம் கண்கூடாகக் காணும் தன்மை என்று அங்கீகரித்து அதன்படி செயல் புரியவேண்டும்.

## விவசாய வாழ்க்கை குற்றமா ?

ஒரு சிறு விவசாயியாக இருப்பதில் என்ன தவறு? உண்மையில் பார்க்கப் போனால் நிலத்தில் உடைமை கொள்ளும் உணர்ச்சியை எல்லா ஜனநாயகங்களும் பாதுகாத்து, போஷித்து வளர்க்க வேண்டும். ஒரு விவசாயி நடத்தும் வாழ்க்கை இந்திய மக்களின் வாழ்க்கை முறையில் ஒரு பாகம். அது ஒருவனுக்கு நிழல் அளிக்கிறது; இயற்கையுடன் ஒன்றி வாழ வகை செய்கிறது; தனது உழைப்புக்குத் தகுந்த பலன் கைமேல் கிடைப்பதுடன் தனக்குத் திருப்தியுமளிக்கிறது; எல்லாவற்றுக்கும் மேலாக, தற்காலத்தில் நகர்ப்புறங்கள் விஸ்தரித்து அங்கு வாழும் மக்களின் நெரிசல் வாழ்க்கைக்கு மாறாக நிம்மதியுடன் வாழ வகை செய்கிறது. இந்த உண்மையைக் கருத்து, கோட்பாடு என்று ஒருதலைப் பட்சமாகக் குயுக்தி வாதம் செய்யாத எவனும் ஒப்புக் கொள்ளவே செய்வான். நமது இந்திய அரசியல் சட்டம்; ஜனநாயகச் சட்டம் சொத்து சேர்ப்பதையும், அதை வைத்துக் கொள்வதையும் அங்கீகரிக்கிறது. இதனால் கூட்டுப் பண்ணை விவசாய முறை சமூக இயல்புக்கு மாறானது; விரும்பத்தக்கதல்ல என்றே தெரிகிறது.

'நாகபுரித் தீர்மானத்தில் சொல்லியிருப்பது கூட்டுறவு முறை விவசாயமே தவிர கூட்டுச் சமுதாயப் பண்ணை அல்ல; கூட்டுப் பண்ணை அங்கத்தினராக இருக்கும் விவசாயிகளின் சொத்துரிமை எவ்விதத்திலும் பாதிக்கப்பட மாட்டாது; அப்படியிருக்கையில் இதைப் பற்றி ஏன் கூக்குரலிட வேண்டும்?' என்று குறை சொல்லுகிறார்கள். ஏட்டளவில் இது உண்மை தான். நடை முறையில் இது உண்மையாகாது. ஒரு கிராமத்தில் தனி நபர்களுக்குச் சொந்தமான எல்லா நிலங்களும் கூட்டுறவுப் பண்ணைக்காக ஒன்றாகச் சேர்க்கப்படுகிறது. சேர்க்கப்படுகிறது என்பதை ஒன்றாக்கப்படுகிறதென்றே சொல்ல வேண்டும். அதாவது ஒரு வயலுக்கும் அடுத்த வயலுக்குமுள்ள வரப்புகள், எல்லைக் கற்கள் தனிச் சொத்தென்பதைக் குறிக்கும் இதர அடையாளங்கள் எல்லாம் அகற்றப்பட்டு விடும். இணைக்கப்பட்ட நிலங்களெல்லாம் ஒரே பரப்பாக ஆக்கப்பட்டு, மரக் கலப்பை கொண்டோ, யந்திரக் கலப்பை, டிராக்டர் முதலிய கருவிகளைக் கொண்டோ, சமானமாக உழுது பயிர் செய்யப்படும். விவசாயி அங்கத்தினர்கள் தங்களுடைய நிலம் என்ற உணர்ச்சியையே மறக்க வேண்டும். ஏனெனில் எது அவருடைய நிலம் என்று குறிப்பிடவே முடியாதபடி அல்லவா எல்லாம் சமமாக்கப்பட்டிருக்கும்? அங்கத்தினர்களுக்கு மட்டும் அவர்களுடைய நிலம் கூட்டுப் பண்ணையில் சேர்ந்திருக்கிறது. மகசூலில் விஸ்திரணத்துக்கு ஏற்றவாறு பங்கு தரப்படும் என்று ஒரு உரிமைக் காகிதம் கொடுக்கப்படும். தனது சொத்து எங்கு இருக்கிறது என்று சுட்டிக்காட்ட முடியாத நிலைமையில் இந்தக் காகிதம் ஒன்றுமட்டுமே அவனுக்கு ஆதாரமாக இருக்கும். தன்னுடைய நிலம் என்ற உணர்ச்சியே அற்றுப் போனபின் பட்டாவும் உரிமைக் காகிதமும் அவனுக்கு என்ன திருப்தி கொடுக்கும்? ஒன்றும் கொடுக்காது. ஆகையினால் தன்னுடைய சொத்துடைமை பாதிக்கப்படாது என்பது ஏட்டளவில் உண்மையானாலும் நடைமுறையில் அர்த்தமற்றதாகப் போகும். தன் நிலத்தில் உழுது வேலை செய்பவனாக ஒரு விவசாயி இருந்தால், கூட்டுப் பண்ணையில் சேர்ந்த பிறகு அவனுடைய நிலத்திலேகூட வேலை செய்ய அவனுக்குச் சுதந்திரம் இருக்காது.

## நடைமுறையில் இது சாத்தியமா ?

இதற்கு விடைகூறக் காங்கிரஸ் கட்சியின் அந்தரங்க நோக்கங்களைப் புரிந்து கொள்ள வேண்டும். பிரஸ்தாபக் கூட்டுப் பண்ணைகள் நிர்ப்பந்தத்தின்மீது உருவாகப் போகின்றனவா அல்லது அவரவர்கள் சுயேச்சையாகச் சேருவதால் உருவாகப் போகின்றனவா என்பதைக் கவனிக்க வேண்டும். சுயேச்சையாகத் தான் தோன்றப்போகிறதென்றால் கணிசமான பலன் ஒன்றும் கிடைக்காது. காங்கிரஸ் எதிர்பார்க்கும் அளவு நன்மை கிடைக்காது. இங்கு மங்கும் சில கூட்டுறவுப் பண்ணைகள் உருவாகும். இரண்டு மூன்று வருஷங்கள் ஒருவாறு செயலாற்றி விட்டுப் பின் ஜீவனற்றுக் கருகித் தீய்ந்துவிடும். அப்படித்தான் பல கூட்டுப் பண்ணைகள் மறைந்து விட்டன. பலாத்கார முறை . அல்லது நிர்ப்பந்தத்தின் பேரில்தான் உருவாகப் போகிறது என்றால், ஜனநாயகம், சுதந்திரம், சாத்தியம் என்ற பேச்சுக்களையெல்லாம் மூட்டை கட்டி மூலையில் போட்டு விடலாம். எந்தவிதமான நிர்ப்பந்தமும் நமது அரசியலுக்கே விரோதம். மேலும் 'கட்டாயக் கூட்டுறவு' என்பதே ஒன்றுக்கொன்று முரணான வார்த்தைகள். இருதலைக் கொள்ளி எறும்பின் நிலைமையில் காங்கிரஸ் கட்சி நிற்கிறது.

இம்மாத

வெளியீடு!

சேகர் ஆர்ட் பிலிம்

என்டர்பிரைசஸ்...

# மணிமேகலை



சங்கீதம் - G. ராமனாதன்

திரைக்கதை வசனம் இளங்கோவன்

டைரக்ஷன் - V.S. ராகவன்

ALL RIGHTS OWNED BY...

ஸ்ரீ ராமா பிலிம்ஸ்

சென்னை - 2.

Elegant

# சுஜலாம் சுபலாம் மலயஜ சீதளாம்...

வரண்டுபோன வயல்களாக இருந்த இடத்திலே பொன் விளையும் பூமி; காட்டாற்று வெள்ளமாக இருந்த இடங்களில் பணிந்தோடும் ஜீவநதிகள்; வீடு தோறும் ஒளி யூட்டுவதற்கு, தொழிற்துறையின் சக்கரங்களை இயக்குவதற்கும் ஆதாரமான மின்சக்தி; நாடெங்கும் பூரண சுபிட்சத்தின் புன்னகை!

அத்தகைய தவம் பலிப்பதற்காக, 860 கோடி ரூபாய் செலவில் பாரத நாட்டின் மாபெரும் அணைத் திட்டங்கள் உருவாகி வருகின்றன. பற்பல வரியினங்களுக்காக ஆண்டுதோறும் 100 கோடி ரூபாய்க்கு மேலாக தேசப் பொதுநிதிக்குப் பங்கு செலுத்திவரும் பருத்தி யாலைத் தொழிலுக்கும் மேற்கூறிய மகத்தான பணியில் பெரும் பங்கு உண்டு. ஆண்டுதோறும் 60 கோடி ரூபாயளவுக்கு அரும்பெரும் பிறநாட்டு நாணயச் செலாவணியைத் தேடித் தருவதோடு இத்தொழில், எட்டு லட்சம் தொழிலாளர்களுக்கு நேரிடையான வேலையளித்து உழைப்புக் கூலிக்கென ஆண்டுதோறும் 100 கோடி ரூபாய் செலவிட்டு, மேலும் பல்லாயிரக் கணக்கான மக்களுக்கு வாழும் வழி வகுத்துக் கொடுக்கிறது!

ஆலைத்துணிக்காக நீங்கள் செலவிடும் ஒவ்வொரு ரூபாயிலும் 25 நயாபைசாக்கள் தேசப் புனரமைப்புக்கு உதவுகின்றன.

THE INDIAN COTTON MILLS' FEDERATION

வாங்குவீர் ஆலைத்துணி, அதன் மூலம் ஆற்றுவீர் தேசப் பணி!

© CF.I Tam

**தி இண்டியன் காட்டன் மில்ஸ் ஃபெடரேஷன்**

பம்பாய் 1.



## நிர்ப்பந்தம் தொனிக்கிறது!

நிர்ப்பந்தம் எப்படியும் இருக்கக் கூடாது என்று நிச்சயமாகத் தீர்மானத்தில் சொல்லப் படவுமில்லை. விவசாயிகள் கூட்டுப் பண்ணை யில் சேர்ந்தாலும் சேரலாம்; சேராமலும் இருக்கலாம் என்று வேண்டுமானால் நாசுக்கித் தீர்மானத்துக்குப் பட்டதும் படாததுமாக அர்த்தம் சொல்லலாம். ஆனால் தீர்மானத் தின் வாசகம் கட்டளையிடும் தோரணையில் தான் அமைந்திருக்கிறது. "முதல் நடவடிக் கையாக, கூட்டுப் பண்ணை விவசாயம் ஏற்படு வதற்கு முன், நாடு முழுவதிலும் சேவா கூட்டுறவுச் சங்கங்கள் நிறுவுவதற்கு மூன்று வருஷ காலம் அவகாசம் அளிக்கப்படுகிறது. எனினும் இந்தக் காலத்துக் குள்ளாகவே, எங்கெல்லாம் சாத்தியமோ, எங்கெல்லாம் விவசாயிகள் பொதுவாகச் சம்மதித்திருக் கிறார்களோ, அங்கெல்லாம் கூட்டு விவசாயம் ஆரம்பிக்கலாம்" என்று தீர்மானத்தின் ஒரு பகுதி கூறுகிறது. விவசாயிகளின் சம்மதம் குறிப்பிட்டிருப்பது "மூன்று வருஷகாலத்துக் குள்ளாகக் கூட்டுப் பண்ணை ஆரம்பிப்பதாக இருந்தால்" என்று வரையறை செய்திருப்பது கவனிக்கத்தக்கது. தீர்மானத்தின் முடிவிலும், "எல்லாரும் காங்கிரஸ் ஸ்தாபனத்துடன் ஒத்துழைத்து லக்ஷக்கணக்கான விவசாயிகளின் உற்சாகத்தைத் தட்டியெழுப்பிச் செயல்புரிய வேண்டப் படுகிறது" என்று காண்கிறோம். 'தட்டியெழுப்புதல்' 'திரட்டுதல்' போன்ற வார்த்தைகளெல்லாம் யுத்த காலங்களில் உபயோகப்படும் சொற்கள். இவற்றில் பலாத்காரமும் நிர்ப்பந்தமும் தொக்கி நிற் கின்றன. காங்கிரஸ் அரசியலார்களின் "அணிகளும்" கூட்டுறவு, விவசாய இலாக் காக்களின் "அதிகார வர்க்கமும்" கிராமங் களின் மீது "படையெடுத்து"த் தங்களுக்குத் தெரிந்த எல்லா "முறைகளையும்" கையாண்டு விவசாயிகளைக் கிராமக் கூட்டுப் பண்ணையில் சேரும்படி சொல்லுவார்களாம்!

வற்புறுத்திச் சொல்லுவது (Persuasion) என்றால் நிர்ப்பந்தம் என்பது கிராம மக்கள் அனுபவத்தில் அறிந்த உண்மை. ஆகையால் காங்கிரஸ் தீர்மானத்தில் கூட்டுப் பண்ணையில் சேரும் விஷயத்தில் விவசாயி களின் சம்மதம் அவசியம் என்பது சந்தேகமற வலியுறுத்தப் படவில்லை என்று நினைப்பதில் தவறில்லை. பிரதமர் நேருஜி என்னமோ, "எவரையும் கட்டாயப்படுத்துவது என்ற பேச்சுக்கே இடமில்லை" என்று மிகுந்த பிரயாசையுடன் நாட்டுக்கு உறுதியளிக்கிறார். ஆனால் மத்திய சர்க்காரின் உணவு இலாகா கூட்டுறவுக் கொள்கைகளை நிறைவேற்ற நிய மிக்கப் பட்ட "செயல்முறைக் குழு" தேசிய அபிவிருத்திக் கௌன்ஸில் தீர்மானங்களை அனுசரித்து நடவடிக்கைத் திட்டங்கள் வகுத் திருப்பதாகச் சொல்லப் படுகிறது. தேசிய அபிவிருத்திக் கௌன்ஸில் தீர்மானங்கள் சுயேச்சை முறையில் கூட்டுறவு இயக்கங்கள் விரிவடைவதை எதிர்க்கிறது. இவர்கள் சிபாரிசு செய்துள்ள திட்டத்தின் ஒரு அம்சத் தில் "எந்தந்த விவசாயிகள் கூட்டுப் பண்ணை யில் சேர விரும்பவில்லையோ, அவர்களுக்கு விதைகள், உரம், கடன் முதலிய வசதிகள் கொடுக்கக் கூடாது" என்று சொல்லப்பட் டுள்ளது (தினத்து 19-4-1959 இதழில் வெளி வந்துள்ளது). இப்போது தெரிகிறதல்லவா உண்மை அபிப்பிராயம்! இந்தத் திட்டம் நிறைவேற்றப் பட்டால், பிரதமர் கொடுத்த வாக்குறுதிகளெல்லாம் உபயோகமற்றதாகி விடும். நாடு கம்யூனிஸத்தை நோக்கி வேக மாக மிதந்து செல்லும்.

இந்த விஷயத்தில் விவசாய சீர்திருத்தக் கமிட்டிகளின் நடவடிக்கைகளும் கூட விவ சாயிகளின் பயத்தை அதிகரிப்பதாகவே உள்ளன. ஆதார அளவுள்ள நிலங்களுக்குக் குறைவான நிலங்களுக்குக் கட்டாய முறையில் கூட்டுப்பண்ணையும், ஆதார அளவுள்ள நிலங் களுக்கும் கட்டுப்படியாகக் கூடிய நிலப்பரப் புக்கும் கட்டாய முறையில் தீவிர முறை விவ சாயமும் மேற்கொள்ளப்பட வேண்டும் என்று குமரப்பா தலைமை வகித்த அகில இந்திய கமிட்டி சிபாரிசு செய்திருக்கிறது. 1950-ஆம் ஆண்டில் சென்னை மாநில சர்க்கார் நியமித்த சுப்பிரமணியம் கமிட்டி இதே சிபார்சை வேறு முறையில் செய்திருக்கிறது. குமரப்பா கமிட்டி சொல்லியிருப்பதைப்போல் நில விஸ்தீரணத் தைப் பாகுபாடு செய்யத் தேவை யில்லை என்று இக்கமிட்டி கூறுகிறது. கட்டாய முறையும் கூடாதென்று சொல்லுகிறது. எனினும், "கட்டுப்படியாக விவசாயம் செய்ய முடியாத சிறு நிலங்களும், வேண் டிய பணவசதி முதலிய கிடைக்காத நிலங் களும் ஐந்து வருஷ காலத்துக்குள் சுயேச்சை முறையில் கூடிக் கணிசமான பலன் ஏதும் கிடைக்கவில்லையானால் அவர்களை நிர்ப் பந்தப் படுத்தி உயர்தர விவசாயத்துக்கோ, கூட்டுப் பண்ணைக்கோ—எது அப்போதைக்கு ஏற்றதாகக் கருதப்படுகிறதோ அதற்குச் சேரும்படி வற்புறுத்தலாம்" என்று அது சிபாரிசு செய்திருக்கிறது. ஆகவே விவசாயி களின் மனத்தில் உதித்த பயம் ஆதாரமற்றது என்று தள்ளிவிட முடியாது.

## விலகும் உரிமை உண்டா?

தவிரவும், கூட்டுப் பண்ணையில் சேர்ந்து விட்ட பிறகு, தான் தனியாகப் பயிரிட்ட போது கிடைத்துக் கொண்டிருந்த மகசூலை விடக் குறைவாகவே பண்ணையிலிருந்து வரு மானம் கிடைக்கிறதென்று தெரிந்தால், பண்ணையிலிருந்து விலகிக் கொள்ள ஒரு விவ சாயி அங்கத்தினரால் முடியுமா என்பது தெளிவாக எங்கேயும் சொல்லப்படவில்லை. இந்த விஷயம் மிகவும் முக்கியமானது. ஏனெனில் நம் நாட்டு விவசாயிகள் பெரும் பாலோர் சிறு நிலங்கள் வைத்துக் கொண்டு குறைந்த வருமானத்தில் எப்படியோ ஜீவனம் நடத்துகிறவர்கள். இந்த வருமானம் குறைந் தால் அவர்களுக்கு மிகுந்த கஷ்டம் ஏற்படும். குறைவதை அவர்களால் பார்த்துக் கொண் டிருக்க முடியாது. பருவ மழை பெய்யாத தாலோ, அல்லது வேறு காரணங்களாலோ பண்ணையில் நஷ்டங்கள் ஏற்பட்டால் அதற்கு ஈடு கொடுக்க அரசாங்கம் ஏதாவது உத்தர வாதம் அளித்திருக்கிறதா?

மேலும் ஒரு அங்கத்தினருக்குச் சொந்தத் தேவைக்குப் பணம் தேவைப்பட்டு நிர்ப்பந்தம்

ஏற்பட்டால், அம்மாதிரி சமயங்களில் தனது நிலத்தை விற்றுவிட அவனுக்குச் சுதந்திரம் உண்டா என்பதும் தெளிவாக்கப் படவில்லை. இம்மாதிரி தினசரி நடைமுறையில் பலவித விஷயங்கள் தெளிவாகாமல் இருக்கின்றன. அப்படியிருக்கும் போது, கூட்டுப் பண்ணையில் சேருவதால் அநுகூலங்கள் இருக்கின்றனவா இல்லையா என்ற அடிப்படை விஷயத்தையே சீர்தூக்கி ஆலோசனை செய்யப் போதிய விவரங்கள் இல்லாமல் இருக்கையில் லக்ஷக் கணக்கான விவசாயிகளைக் கூட்டுப்பண்ணையில் உற்சாகம் கொள்ளும்படி ஊக்கி விட வேண்டுமென்பது அர்த்தமற்றது. மனித வாழ்க்கை உண்ணும் உணவைக் கொண்டே நிகழ்கிறது வறட்டுத் தத்துவங்களால் அல்ல.

கூட்டுப் பண்ணையைப் புகழ்ந்து பேசும் உற்சாகிகள் மேற்கு ஐரோப்பிய நாடுகளில் கூட்டுறவு இயக்கம் வெற்றிகரமாக செயலாற்றுவதை உதாரணமாக எடுத்துக் காட்டுகிறார்கள். ஆனால் இந்த நாடுகளில் ஒன்றில் கூடக் கூட்டுப் பண்ணை விவசாயம் நடைபெறுகின்றது என்று கூற முடியாது. மேற்கு நாடுகளில் சேவா கூட்டுறவுச் சங்கங்கள் வெகு சிறப்பாக வேலை செய்து வருகின்றன என்பது உண்மையே. இதைப் பார்த்து, நம் நாட்டில் சேவா கூட்டுறவு, கூட்டுப்பண்ணை இவ்விரண்டுமே வெற்றிகரமாக நடந்து விடும் என்று கூறப்படுகிறது. இப்படிச் சொல்லுபவர்கள் இந்தியாவுக்கும் இதர நாடுகளுக்கும் சமூக அமைப்பு, சூழ்நிலை முதலிய அம்சங்களிலுள்ள வித்தியாசங்களை எண்ணிப் பார்ப்பதில்லை. அந்த நாடுகளெல்லாம் சிறிய நாடுகள். ஜாதிப் பிரிவினை, மதப் பிரிவினை போன்ற வேறுபாடுகளில்லாத நாடுகள். சமூகம் முழுவதும் ஒரே உணர்ச்சியுடன் கட்டுப்பாடாக உள்ள நாடுகள். இந்தியாவின் நிலைமை வேறு. பல்வேறு ஜாதிகள், உட்பிரிவினைகள் மலிந்த சமூகத்தையுடையது. எல்லோரும் ஒன்றுபட்டுச் செயலாற்றும் திறமை இன்னமும் வளரவில்லை. இதுதான் கூட்டுப்பண்ணை வெற்றியடைய இன்றியமையாதது. ரிஸர்வ் பாங்கியினால் மூன்று வருஷங்களுக்கு முன்பு நியமிக்கப்பட்ட நிபுணர்கள் கமிட்டி கூட்டுறவு இயக்கத்தைப் பற்றிச் சொல்லுகையில், ஐம்பது ஆண்டுகள் இடைவிடாத முயற்சிக்குப் பின்னரும் கூட்டுறவுக் கடன் சங்கங்கள் தோல்வியே அடைந்துள்ளன; இதற்குக் காரணம் கிராமங்களின் சமூகப் பொருளாதார அமைப்பு, ஜாதிப் பிரிவினையின் அடிப்படையில் நிலவுவது என்று குறிப்பிட்டிருக்கிறது. பிரதமர் நேருவும் ஓயாது ஜாதிப் பிரிவினை, மதப் பிரிவினை, மொழிப்பிரிவினை, மற்றும் இதர பிரிவினைகள் ஒழிய வேண்டும் என்று சொல்லி வருகிறார். ஆனால் மத்திய அரசாங்கமும் ராஜ்ய சர்க்காரும் மேற்கொண்டுள்ள நடவடிக்கைகளும் கொள்கைகளும் இப்பிரிவினைகளை மேன்மேலும் வலியுறுத்தி வளர்ப்பதாகவே இருக்கின்றன என்பதை வருத்தத்துடனே சொல்ல வேண்டியிருக்கிறது. சாதாரணமாகவே, கிராமங்களில் சமூக சமுதாய உணர்ச்சி மெள்ள மெள்ளத்தான் வளரும். அதுவும் சர்க்கார் ஒரு சாராரை மற்றொரு சாராருடன் மோதவிடாமல், ஒரு ஜாதியாரை மற்றொரு ஜாதியாருக்கு எதிராக ஏவி விடாமல் இருந்தால். இந்நிலையில் இம்மாதிரி பிளவுகளும் பிரிவினைகளும் மந்திரவாதியின் கோலை யசைத்தவுடனே ஒரே நாளில் மறைந்துவிடும் என்று எதிர்பார்ப்பது தவறு.

மேலே விவரிக்கப்பட்டுள்ள குழப்பங்களும் கலவரங்களும் நாட்டில் சமீபத்தில் தோன்றியிருப்பினும், கிராமப் பகுதிகளின் வாழ்க்கையும் பொருளாதாரமும், ஏற்கனவே சென்னை அரசாங்கம் நிறைவேற்றியுள்ள பண்ணையாளர் சட்டங்களினால் சீர்குலைந்திருக்கிறது. நன்றாக உழைத்துப் பாடுபடும் பண்ணையாட்களுக்கு நிலையான பண்ணை வேலையும், நியாயவாரமும் அவசியமானவை, விரும்பத் தக்கவை என்றாலும், சட்டத்திலுள்ள குறைபாடுகளினாலும் தவறுதல்களினாலும் பல விபரீத விளைவுகள் ஏற்பட்டிருக்கின்றன. பலாத்காரம், தீமை, அட்டூழியம், கோர்ட் நடவடிக்கைகள், வர்க்கப் போராட்டம் முதலிய விளைவுகள் சாதாரணமாகத் தஞ்சை, திருச்சி, திருநெல்வேலி கிராமங்களில் கண்கூடாகக் காணலாம். ஒருபுறம் பேராசை, பொறாமை, சட்டத்தைப் புறக்கணித்தல்—முதலியவை நடைபெறுகின்றன. மற்றொரு புறத்தில் ஆழ்ந்த அமைதியின்மையும் நிராசையும் காணப்படுகின்றன. சிறு நிலச்சொந்தக்காரர்கள் தான் நிலம் வைத்திருப்பவர்களில் பெரும்பான்மையினர். எப்போதுமே அவர்கள் கஷ்ட ஜீவனம் செய்து கொண்டிருப்பவர்கள். அவர்களது நிலைமை இப்போது இன்னும் மோசமாகி விட்டது. பண்ணையாட்களுக்குச் சர்க்கார் வரம்புக்கு மீறிச் சலுகை காட்டுகின்றனர். இதன் விளைவாக, எங்கெல்லாம் சச்சரவுகள் ஏற்பட்டிருக்கின்றனவோ அங்கெல்லாம் உற்பத்தி குறைந்துள்ளது. நிலச்சொந்தக்காரர்களுக்கு உரிமையாகக் கிடைக்க வேண்டிய நியாயம் கிடைக்கவில்லை.

இவ்வளவு தடைகள் இருந்த போதிலும், சென்னை மாநிலம் உணவு விஷயத்தில் உற்பத்தியைப் பெருக்கி, ராஜ்யத்தைத் தன்னிறைவுள்ள ராஜ்யமாக ஆக்கியிருக்கிறதென்றால் அதற்குப் புத்தி கூர்மையும் முற்போக்குக் கொள்கையுமுள்ள விவசாயிகளுக்கும் சென்னை விவசாய இலாக்காவும் பொது மராமத்து இலாக்காவும் செய்துள்ள நல்ல காரியங்களுக்கும் நாம் நன்றி செலுத்த வேண்டும். நிலச்சுவான்தார்களுக்கும் வார, குத்தகைக்காரர்கள் பண்ணையாட்களுக்கு மிடையே நல்லுறவை முதலில் பழையபடி பலப்படுத்தித் தரவேண்டும். அதற்குத் தேவையான நடவடிக்கைகளை அரசாங்கம் முதலில் எடுக்க வேண்டும். சேவா கூட்டுமுறைச் சங்கங்கள் கிராமங்களில் நிறுவுவதற்கு முன் இந்த நடவடிக்கைகள் மிகவும் அவசியமானவை. இப்போது நாட்டில் கிராமங்களில் நிலவும் சூழ்நிலையைக் கவனித்தால் சேவா கூட்டுறவுகள் கூடப் பெரும் அளவில் ஏற்படுவதற்குள்ள அறிகுறிகள் இல்லை.

நமது ஹிந்து சமூகத்தில் சிறப்பான கூட்டுறவு ஸ்தாபனம் தொன்றுதொட்டு இருந்து வந்தது. அதுதான் பழங்காலத்திய அவிபக்த கூட்டுக் குடும்பம். இந்துக்களின் வாழ்க்கை சிக்கல் மிகுந்ததாக ஆகும் வரையில் இக்கூட்டுக் குடும்ப முறை நன்றாகவே

# யூனியன் பாங்க் ஆப் இந்தியா லிமிடெட்

(ஸ்தாபிதம் 1919)

தலைமைக் காரியாலயம்

யூனியன் பாங்க் பில்டிங், அப்பாலோ தெரு, பம்பாய் - 1

சென்னைக் காரியாலயம் 9, செம்புதாஸ் தெரு

நாங்கள் உலகம் முழுதும் தொடர்பு கொண்டு சகலவிதமான அயல்நாட்டுச் செலாவணிகளையும் கையாளும் வசதிகளையும் பெற்றிருக்கிறோம்

வேண்டும்பொழுது பெறும் டிபாஸிட்டுகளும், நிரந்தர டிபாஸிட்டுகளும், கனிசமான வட்டி விகிதத்தில் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன

ஏ. எஸ். பிஜோர்
சென்னை ஏஜண்ட்

எப். கே. எப். நரிமன்
ஜெனரல் மானேஜர்

---



## EPHRILIME
### எப்ரிலைம்



அவன் கொடுக்கும் இந்த மருந்தை உட்கொண்ட ஒரு சில நிமிஷங்களிலேயே அவனது ஆஸ்த்மா உபாதைகள் மாயமாக மறையும்.

நீண்ட காலப்பட்டதும், மிக்க உபாதை தரக்கூடியதுமான மார்ச்சளி, ஆஸ்த்மா முதலிய நோய்களுக்கு ஓர் சிறந்த [illegible] மருந்து.

**யூனியன் டிரக் கம்பெனி லிட்.**
மதராஸ் டிப்போ 2, ஜோன்ஸ்லேன், மதராஸ்-1

---





துரிதமாக
உறுதியாக
வழவழப்பாக
எழுதக் கூடியது

டிஸ்ட்ரிபியூட்டர்கள்
ராஜேந்திரா [illegible] கோ
236, அப்துல் ரஹ்மான்
தெரு. பம்பாய்-3

## RITESHARP *Pens*
GHORUPDEV, BOMBAY 10

விற்பனை மற்றும் சர்வீஸ் செய்பவர்கள்:

ஜெம் அண்டு கம்பெனி
325/326, நேதாஜி போஸ் ரோடு, சென்னை-1

செயல் புரிந்து வந்தது. ஆனால் நவீன வாழ்க்கையின் போக்கும் வாழ்க்கை முறைகளும் இதில் சிதைவை உண்டாக்க ஆரம்பித்தன. சட்டங்களின்படியும், கோர்ட்டுகள் தீர்ப்பு படிக்கும் இக்கூட்டுக் குடும்பம் வேகமாகத் தகர்க்கப்பட்டு விட்டது. 1956ஆம் ஆண்டில் நிறைவேறிய ஹிந்து வாரிசுரிமைச் சட்டம் இதை முடிவாகத் தாக்கி மண்டையில் அடித்து விட்டது. இக் கூட்டுக் குடும்ப முறை ஒழிந்து போய் விட்டது பற்றி ஒரு துளிக் கண்ணீர் சிந்துவார் ஒருவருமில்லை. சகோதரர்களிடையேயும் தாயாதிகளிடையேயும் கூட இந்தக் கூட்டுறவு முறை நவீன நாகரிகப் போக்கின் வேகத்தில் மறைந்து போய்க் கொண்டிருக்கும்போது, தன்னுடைய வாழ்க்கைக்குச் சம்பந்தப் படாத நூற்றுக்கணக்கான கிராம மக்களுடன் ஒரு சாதாரண விவசாயி முன் பின் யோசியாமல் ஒன்றிப் போய்க் கூட்டுப் பண்ணையில் சேர்ந்து விட வேண்டும் என்று எதிர்பார்ப்பது கனவு உலகத்தில் சஞ்சரிப்பது போலாகும்.

## உற்பத்தி பெருகுமா?

மூன்றாவதாகக் கேட்க வேண்டிய கேள்வி இது. இங்கேயும், இதை ஆராயப் புகுவதற்கு முன் சில பூர்வாங்க விவரங்களைத் தெளிவு படுத்திக்கொள்ள வேண்டியது அவசியம். நிலமுள்ளவரானாலும் நிலமில்லாதவரானாலும் கிராமத்தில் நிலையாக வசிப்பவர்களெல்லாம் கிராமக் கூட்டுறவில் அங்கத்தினர்களாக ஆகலாம் என்று தீர்மானம் சொல்லுகிறது. முதலாவதாக, விவசாயிகளுக்குச் சொந்த வீடே இல்லாத ரெவின்யூ கிராமங்கள் பல நமது மாநிலத்தில் இருக்கின்றன. மேலே சொன்ன ஷரத்தின்படி பார்த்தால் அந்தக் கிராமக் கூட்டுறவிலிருந்து அநேக விவசாயிகள் விலகிக் கொள்ளவேண்டும். இவர்கள் நிலமிருந்தும் வசிக்கும் வசதி யில்லாதவர்கள்.

இரண்டாவதாக, சொந்த நிலங்கள் இருக்கும் கிராமத்தை விட்டு வெளியே வசிக்கும் விவசாயிகளின் நிலைமை என்ன? மந்திரிகள், நீதிபதிகள் முதல் தாலூக்கா பியூன்கள், டாக்டர்கள், வக்கீல்கள், வர்த்தகர்கள், வியாபாரிகள் வரை பல பேர்களுக்குக் கிராமங்களில் நிலங்கள் இருக்கின்றன என்பது நாடறிந்த விஷயம். இவர்களெல்லாம் தங்கள் அலுவல்களைக் கவனிக்க நகரங்களிலும், நகர்ப்புறங்களிலும் வசிக்கிறார்கள். இவர்கள்தான் கண் மறைவிலுள்ள நிலச்சுவான்தார்கள். இவர்களுடைய நிலங்களை என்ன செய்வதாக உத்தேசம்?

மூன்றாவதாக, கிராமக் கூட்டுறவில் நிலமில்லாத விவசாயிகளும் சிறு விவசாயிகளும் இருப்பார்கள் என்று சொல்லப்படுகிறது.

நடுத்தர விவசாயிகள்—அதாவது உச்சபட்ச வரம்பு வரையில் நிலம் வைத்திருப்பவர்கள் கதி என்ன? இப்படிப்பட்டவர்கள் கிராமத்திலேயே நிலையாக வசித்தாலும், கிராமக் கூட்டுறவிலிருந்து விலக்கப்பட்டவர்களென்றே கருத வேண்டும். அப்படியானால் அவர்களுடைய சொந்த நிலத்தை அவர்களே சொந்தமாகப் பயிரிட அனுமதிப்பார்களா? ஒருகால் அனுமதிக்கப் பட்டாலும், நிலத்தில் வேலை செய்யவும் உதவி புரியவும் பண்ணையாட்கள் கிடைப்பார்களா?

மேலே விவரிக்கப்பட்ட அவ்வளவு பேர்களுடைய நிலங்களையும் கூட்டுறவுப் பண்ணையில் இணைப்பதற்காகப் பலவந்தமாக அரசாங்கம் எடுத்துக் கொள்ளுமா? ஆனால், பெரிய நிலச்சுவான்தார்களிடமிருந்து எடுத்துக் கொள்ளப்படும் உபரி நிலங்களுக்கு எவ்வளவு நஷ்டஈடு கொடுக்கப்படும், அல்லது நஷ்டஈட்டுத் தொகை எந்த விதமாக நிர்ணயிக்கப்படும் என்பதைப் பற்றி நாகபுரித் தீர்மானத்தில் எந்தவிதக் குறிப்புமில்லை.

இந்தப் பிரச்னைகளுக்கெல்லாம் விளக்கம் வேண்டுவது அவசியம். ஏனெனில் கூட்டுப் பண்ணை ஏற்படும்போது அடுத்தடுத்துள்ள நிலப்பரப்புகளெல்லாம் பண்ணையில் சேர்ந்திருக்குமாகையினால் மத்தியில் பண்ணையில் சேர்ந்த திட்டு நிலங்கள் தனித்து இருக்காது. அம்மாதிரி நிலங்களின் சொந்தக்காரர்கள் பண்ணையில் சேருவதற்கு விருப்பமில்லையென்றால், பண்ணையில் சேர்ந்துள்ள நிலங்களில் முற்போக்கான விவசாய முறைகளை மேற்கொள்ள இந்தத் துண்டு நிலங்கள் தடையாக இருக்குமல்லவா? இம்மாதிரி கிராமங்களின் அமைப்பையும் நிலங்களின் தன்மையையும் கவனித்துப் பார்த்தால், கிராமக் கூட்டுப் பண்ணைகள் பெரும்பாலும் விஞ்ஞான முறையில் பயிரிடக்கூடிய இணக்கமான நிலப்பரப்பு கொண்டதாக இருக்காது என்று தெரிய வரும். அதிக உற்பத்தியை அடைவதற்காகவே கூட்டுப் பண்ணை விவசாயம் மேற்கொள்ளப் படுகிறது என்னும் லட்சியம் நிறைவேறாமல் தான் போகும்.

ஒருகால் விஞ்ஞான முறையில் வெள்ளாமை செய்வதற்கு ஏற்ற பெரும் நிலப்பரப்பு ஒரு கிராமக் கூட்டுப் பண்ணையில் கிடைத்து விடுகிறது என்று வைத்துக் கொண்டாலும், அதிலிருந்து உடனடியாக உற்பத்திப் பெருக்கு கிடைத்து விடும் என்பதை மத்திய சர்க்காரும் ராஜ்ய சர்க்காரும் உறுதி செய்து கொண்டார்களா? கூட்டுப் பண்ணை ஏற்பட்டதுமே உற்பத்தி பெருகிவிடும் என்று லட்சக்கணக்கான விவசாயிகளுக்கு உத்தரவாதம் அளிக்கும் நிலையில் நமது அரசாங்கம் இருக்கிறதா? பண்ணையின் விஸ்தீரணம் அதிகரிப்பதற்குத் தக்கவாறு உற்பத்தியும் அதிகரிக்கும் என்பது நிச்சயமாக எதிர்பார்க்கக் கூடிய விளைவு அல்ல.

உலகத்தில் பல நாடுகளில் பெரிய பண்ணைகளில் கண்டு முதலாவதைக் காட்டிலும் சிறிய நிலங்களில் அதிகம் மகசூல் காண்கிறது என்ற புள்ளி விவரங்கள் திரு எம். ஆர். மஸானி எழுதியுள்ள கட்டுரையில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஆகவே அவற்றை இங்கே விவரிக்கத் தேவையில்லை. இவற்றிலிருந்து தமிழ் மக்கள் உண்மை நிலையைப் புரிந்து கொண்டு கூட்டுப் பண்ணையின் நன்மை தீமைகளைச் சீர்தூக்கிப் பார்த்துக் கொள்ளலாம். பெரிய நிலங்களைச் சின்னஞ் சிறு துண்டு நிலங்களாகத் துண்டாடுவதானால் விளைவு குறைகிறதென்பது நன்றாகத் தெரிந்தது. பெரும் பண்ணை விவசாயம்கூட உற்பத்திக் குறைவில்தான் முடியும் என்பது இப்போது விளங்கும். ஆகவே அரசியல் விஷயங்களில் இருப்பதைப் போல்

விவசாயவிஷயத்திலும்ரஸ்தாவின் இடதுசாரி, வலது சாரி என்று செல்லுவதைவிட நடுவில் செல்லுவதுதான் சிறந்தது. அதாவது அடுத்தடுத்துள்ள நிலங்களை ஒன்றாகச் சேர்த்து இரண்டிலிருந்து ஐந்து ஏக்கர் பண்ணைகளாக அவற்றை விஸ்தரித்துக் கொள்ள வகை செய்ய வேண்டும். மிகவும் அவசியமான இந்தச் சிறு சீர்திருத்தத்தை நாடு சுதந்திரம் பெற்றுப் பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பின்னரும் செய்து பார்க்கச் சிறு முயற்சிகூட எடுத்துக் கொள்ளப்படவில்லை.

முற்போக்கான விவசாய முறைகளைப் பற்றியும் ஒரு ஏக்கராவிலிருந்து உற்பத்தி அதிகரிக்க வேண்டிய அவசியம் பற்றியும் காங்கிரஸ் தீர்மானம் கூறுகிறது. முற்போக்கான விவசாய முறைகள் யாவை? திருந்திய பண்ணை முறைகள் யாவை? விவசாய இலாகாவினால் மண் வளத்துக்குத் தக்கபடி இன்னின்ன நிலங்களில் இன்னின்ன பயிர்கள் சாகுபடி செய்ய வேண்டுமென்று அதிகார பூர்வமாக வரையறை செய்யப்பட்டிருக்கின்றனவா? அரசாங்கப் பண்ணையில் பரீட்சை செய்யப்பட்டு உச்சபட்சமாகக் கிடைத்த மகசூலை அடிப்படையாகக் கொண்டு அந்தப் பயிர் முறைகளை விவசாயிகளுக்கு எந்தப் பண்ணையாவது நிரூபித்துக் காட்டியிருக்கிறதா? மண் வளத்தின் தரங்களை மாவட்டவாரியாக ஆராய்ந்து, ஒவ்வொரு மாவட்டத் தலைநகரிலும் ஆராய்ச்சிக்கூடங்கள் அமைத்து விவசாயிகளுக்கு அவரவர்கள் கிராமத்தில், தாலூக்காக்களிலுள்ள மண் வளம் பற்றியும் அவற்றை மாற்றிக் கொள்ள என்ன செய்ய வேண்டுமென்பது பற்றியும் ஆலோசனை வழங்கப்படுகின்றனவா? அதிக உரம், அதிக பாசனம், அதிக மழை, அதிக காற்று முதலியவற்றால் பாதிக்கப்பட்ட நிலங்களுக்கு என்ன மாற்று உபாயங்கள் மேற்கொள்ள வேண்டுமென்று கண்டு பிடிக்கப்பட்டிருக்கின்றனவா? பூச்சிகளினாலும் நோய்களினாலும் பயிர்கள் பாழடையாமல் பாதுகாக்கப் பயனுள்ள முறைகள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளனவா? கிராமங்களில் விவசாயிகளுக்குத் தெரிந்த வரையில் இந்தப் பிரச்னைகள் திருப்திகரமாகத் தீர்க்கப்படவில்லை என்றே கருத வேண்டும்.

அரசாங்கப் பண்ணைகளில் இப்போது கிடைத்துக் கொண்டிருக்கும் அதிகமான மகசூல் தனிப்பட்ட விவசாயி தன்னுடைய நிலத்தில் அறுவடை செய்யும் மகசூலைக் காட்டிலும் குறைவு என்பது நன்கறிந்த விஷயம். சர்க்கார் பண்ணைகளில் ஏக்கராவுக்கு 3500 முதல் 5000 பவுண்டு நெல்தான் விளைகிறது. தனிப்பட்ட விவசாயி தன் பண்ணையில் 10,000 பவுண்டு மகசூலும் அதற்கு அதிகமாகவும் கூடச் சாகுபடி செய்கிறான். ஆனால் ஒரு மகசூலில் கிடைத்த அதிகவிளைவு தொடர்ந்து ஒவ்வொரு பசலிக்கும் அதேபோல் கிடைத்துக் கொண்டிருக்கும் என்று எதிர்பார்ப்பது தவறு. உரம் அதிகம் போட்டாலும், எரு அதிகமாகப் போட்டாலும் ஒரேமாதிரியான பலன் தொடர்ந்து கிடைக்காது. இக் குறைவுக்குக் காரணம் விவசாயத்தின் தன்மை-ஓரளவுக்குப் பிறகு அதிக எரு, உரம் முதலியவை போட்டாலும் உற்பத்தி அதற்கேற்பப் பெருகாமல், குறையும் தன்மை - என்று விவசாய இலாக்கா அதிகாரிகள் சொல்லி விடுவார்கள். ஆனால் இப்படிக் குறைவது எந்த அளவில் ஏற்படுகிறது? எந்த அளவுக்குப் பிறகு இந்தக் குறைவு காணப்படுகிறது? என்று நிர்ணயம் செய்துள்ளார்களா? இல்லையென்றே கூறவேண்டும்.

சமீப காலத்தில் ஆழ உழுதால் நல்லதா, மேலாக உழுதால் நன்மையா, டிராக்டர் உழவு மேலானதா, மாட்டு ஏர் உழவு உயர்வானதா, நாத்துக்கள் நெருக்கி நடுவது நல்லதா, அகல நடுவது நன்மையா என்ற விவாதம் வேறு கிளம்பியிருக்கிறது. ஜப்பானிய முறை சீன முறைக்கு நேர் மாறானது. இரண்டுக்கும் பொதுவானது உரம் அளிப்பது ஒன்றுதான். சென்ற ஆறு ஆண்டுகளில் ஜப்பானிய முறை வானளாவப் புகழப்பட்டது. கடைசியில் திருந்திய ஜப்பானிய முறை நமது பாரதச் சூழ்நிலைக்கு ஏற்றதென்று விவசாய இலாகா கண்டுபிடித்தது. இதை இந்தோ-ஜப்பானிய முறை என்று வேண்டுமானால் சொல்லலாம். இதைத்தான் விவசாயிகள் அதிகமாகக் கையாண்டு பலனும் அடைந்து வருகின்றனர்.

அப்படியிருக்கையில் தற்போதுள்ள முறையை மாற்றிக் கூட்டுப் பண்ணை முறையைப் புகுத்த என்ன அவசியம் வந்துவிட்டது? நடைமுறைச் சிக்கல்களையும் கவனியாது ஏன் இதை மேற்கொள்ள இவ்வளவு பரபரப்பும் ஆவேசமும்?

## முடிவுரை

எந்த வகையிலிருந்து பார்த்தாலும் கூட்டுப் பண்ணை சாத்தியமானதல்ல: விரும்பத்தக்கதுமல்ல; அதனால் அதிக உற்பத்தியென்ற பலனும் கிடைக்காது. பிரதமரும் காங்கிரஸ் தலைவரும் கண்டனம் செய்பவர்களை நோக்கி மாற்று யோசனை உண்டானால் தெரிவிக்கலாம் என்று கேட்டுக்கொண்டார்கள். நடைமுறையில் செயல்படக்கூடிய உருப்படியான யோசனைகளை விவசாயச் சங்கங்களும், தேசத் தலைவர்களும், விவசாயத்தில் அனுபவமுள்ளவர்களும் சொல்லியிருக்கிறார்கள். அவையனைத்தும் ஏட்டிலிருக்கின்றன. நாகபுரித் தீர்மானத்தைக் கண்டிக்கிறவர்கள் கூடத் தேசாபிமானிகள் தாம். உணவுப் பிரச்னையைத் தீர்த்துவைப்பதில் அவர்களுக்கும் அக்கறை அதிகம். அவர்களெல்லாம் கூட்டுறவுப் பண்ணை மூலம் இந்தப் பிரச்னை தீராது என்று உண்மையாக மனப்பூர்வமாக நம்புகின்றனர். பிரச்னை தீராது என்பது மட்டுமல்ல; நாட்டைப் படுகுழியில் ஆழ்த்திவிடும் என்று நம்புகின்றனர். சென்ற ஆண்டு 1958 - மார்ச்சு மாதத்தில் அகில இந்திய விவசாயிகள் சம்மேளனத்தின் பிரதிநிதிகளுக்குப் பிரதமர் நேருஜி இவ்விஷயம் பற்றிப் பேசியபோது, "கூட்டுப் பண்ணை பத்து தடவைகள் தோல்வியுற்றாலும் பதினோராவது தடவை நிச்சயமாக வெற்றியடையும்" என்று உறுதி கூறினாராம். முதல் பத்துத் தடவைகளில் ஏற்படும் தோல்வியினால் உண்டாகும் கஷ்டங்களை நாடு சகித்துக் கொள்ளத்தான் வேண்டும் என்றும் சொன்னார். நமது ஏழை பாரதம் இம்மாதிரி அபாயமிக்கதும், செலவு மிகுந்ததுமான ஒரு பரிசோதனையின் பத்துதரம் தோல்வியடைவதனால் உண்டாகும் நஷ்டத்தைச் சுமக்க முடியுமா? பொதுமக்களே சிந்தித்துப் பார்த்து முடிவு செய்து கொள்ளட்டும்.

# பிரஸிடெண்ட்



காதலும், சூழ்ச்சியும், கத்திச் சண்டையும், மாயஜாலங்களும், ஒரே மாதிரிக் காட்சிகளும் தமிழ்ப் படங்களில் இடம் பெற்று வருவதைப் பார்த்திருக்கிறோம்.

அவைகளிலிருந்து ஒரு மாறுதல் வேண்டும் என்று படம் பார்ப்பவர்கள் துடித்துக் கொண்டிருக்கின்றனர். இந்தத் துடிப்பின் காரணமாகத்தான் சில தமிழ்ப் படங்கள் அமோக வெற்றியடைந்தன. உதாரணமாக, ''சபாஷ் மீனா''வைக் கூறலாம். நம்ப முடியாத நிகழ்ச்சிகள் அந்தப் படத்தில் நிறைய இடம் பெற்றிருந்தாலும், தொடர்ச்சியாகப் பார்த்து வரும் தமிழ்ப் படங்களின் போக்கிலிருந்து ஒரு பெரிய மாறுதல் இருந்த காரணத்தினால், ''சபாஷ் மீனா''வைப் பாராட்டி எழுத வேண்டி வந்தது.

இப்பொழுது அதே மாதிரி மனமுவந்த பாராட்டை இன்னொரு படத்துக்கும் அளிக்க வேண்டியிருக்கிறது.

ஏ.எல்.எஸ். வெளியீடான ''பிரஸிடெண்ட் பஞ்சாட்சரம்'' உண்மையிலேயே பாராட்டப்படவேண்டிய படம்.

சாதாரணமாக, நம் தமிழ்ப் படங்களில் வழக்கமாகக் கதாநாயகன்—கதாநாயகி காதல் காட்சிகளோடு கூடவே இன்னொரு காதல் காட்சியும் தொடர்ந்து வரும். அதாவது கதாநாயகனின் தோழன் கதாநாயகியின் தோழியைக் காதலிப்பான். மேற்படி காதல் காட்சிகளில் அசட்டு ஹாஸ்யங்கள்—பல முறையும் வந்த ஹாஸ்யங்கள்—ஏராளமாக வரும். இது கோடைகாலத்து வெய்யில் மாதிரியும், மார்கழி மாதத்துப் பனி மாதிரியும் நிச்சயமாக நடக்கும் சம்பவம்.

''பிரசிடெண்ட் பஞ்சாட்சரம்'' இயற்கையான ஹாஸ்யமும், மனக்கு மகிழ்ச்சி தரும் காட்சிகளும் கொண்ட சுவாரஸ்யமான படம். (ஆனால் ஜில்லா போர்டுக்கும், மத்திய சர்க்கார் அதிகாரிக்கும் என்ன சம்பந்தம் என்று தயவு செய்து கேட்க வேண்டாம்!)

''பிரசிடெண்ட் பஞ்சாட்சரம்'' சேவா ஸ்டேஜ் குழுவினரால் பல முறையும் நாடகமாக நடத்தப்பட்டு மிகவும் பிரசித்தி பெற்றுவிட்ட நாடகம். நாடகத்தில் நடித்த நடிகர்கள் சிலர் சினிமாவில் மாற்றப்பட்டிருக்கின்றனர்.

நாடகத்தில் கதாநாயகன் சிகாமணியாக டி. கே. பாலசந்திரனும், பிரசிடெண்ட் பஞ்சாட்சரத்தின் மகன் மேகலையாக மைனாவதியும் நடித்தனர்.

சினிமாவில் மேகலையின் பாகத்தை பி. சரோஜாதேவி ஏற்றிருக்கிறார். ''கல்யாணப் பரிசு''க்குப் பிறகு சரோஜா தேவிக்கு இந்தப் படம் பூரண வெற்றியை அளித்திருக்கிறது.

பவழக்கடல் ரயில்வே ஸ்டேஷனில் ரயிலுக்குக் காத்திருக்க ஆரம்பித்ததிலிருந்தே மேகலையின் பாத்திரம் களை கட்டிவிடுகிறது. சோகரஸத்துக்கு இந்தப் படத்தில் இடம் இல்லையாதலால், கண்ணீரையே

# பஞ்சாட்சரம்

காந்தன்

இந்தப் படத்தில் காண முடியாது. மனத்தில் நன்கு பதியும் அழுத்தமான கதையம்சமும் கிடையாது.

சரோஜாதேவி கவர்ச்சிகரமாகத் தோன்றிக் கருத்தில் பதியும் வண்ணம் அழகாக நடித்திருக்கிறார். சிகாமணி ரயில்வே ஸ்டேஷனில் காணும் கனவில், பல கவர்ச்சிகரமான தோற்றங்களில் தோன்றி, நீலமயிலின் கோல நடை பயின்று அற்புதமாக நடனமாடுகிறார். அந்தக் காட்சிகளிலும், சரோஜா தேவி தோன்றும் மற்றக் காட்சிகளிலும் ஒளிப்பதிவு திறமையாகக் கையாளப்படவில்லை.

அடுத்தபடியாக எஸ். எஸ். ராஜேந்திரனுக்கும் இந்தப் படம் வெற்றியைத் தந்திருக்கிறது. சமீபத்தில் அவர் நடித்த படங்களிலெல்லாம் அவர் நடிப்பு அவ்வளவாகச் சோபிக்கவில்லை. ''அன்பு எங்கே?'' ''கூடி வாழ்ந்தால் கோடி நன்மை,'' ''மாமியார் மெச்சிய மருமகள்'' இந்தப் படங்களிலெல்லாம் ராஜேந்திரனின் நடிப்பு நன்றாயிருக்கிறது. ''பிரசிடெண்ட் பஞ்சாட்சரத்''தில் சிகாமணியின் பாத்திரம் ஒரு தமாஷான பாத்திரம். அத்தகைய பாத்திரம்தான் ராஜேந்திரனுக்கு ஏற்றது. சோகத்தில் அழுந்திக் கதறவும், கண்ணீர் வெள்ளத்தில் மிதக்கவும் நேரும்படியான பாத்திரங்களைவிடத் தமாஷான பாத்திரங்கள்தான் அவருக்கு நல்ல பெயரைத் தரும்.

வேலைக்கார நாதமுனியை மேகலை சுருக்கமாக ''நாதா!'' என்று அழைத்த நெருக்கடியான தருணத்தில் சிகாமணி தன்னை மறந்து ''என் கண்ணே!'' என்று கேட்டு விடுகிறான். அந்த இடத்தில் ராஜேந்திரனின் முக பாவமும் நடிப்பும் நன்றாயிருக்கின்றன.

''ஒளி படைத்த கண்ணினாய்'' பாட்டைப் பரிகாசம் செய்கிற மாதிரி இருக்கிறது அபிநயம்.

பிரசிடெண்ட் பஞ்சாட்சரமாக வரும் எஸ். வி. சகஸ்ரநாமத்தைப் பற்றி எவ்வளவு வேண்டுமானாலும் பாராட்டலாம். நல்ல நடிப்பு.

திரைக்கதை, வசனம் எழுதியிருக்கும் பி. எஸ். ராமையா சிறந்த தமிழ் எழுத்தாளர். அவருக்குப் பெருமை தரும் விதத்தில் படம் வெளியாகியிருப்பது மகிழ்ச்சிக்குரிய விஷயம்.

டி. ஆர். ராமச்சந்திரன், வி. ஆர். ராஜகோபால் இருவரும் ரகுவாகவும் குருவாகவும் வந்து, நகைச்சுவையை நல்ல முறையில் படம் முழுவதும் பரப்பியிருக்கின்றனர்.

கவிஞர் கண்ணதாசனின் ''மன்னாதி மன்னன் இங்கே ஓடி வந்தான் — இந்தப் பெண் மானைத் தேடி இசை பாடி வந்தான்...'' என்ற பாட்டு பி. சுசீலாவின் இனிய குரலில் ஒலிக்கிறது. சரோஜாதேவியின் அபிநயமும் நன்றாயிருக்கிறது.

முக்கியமாகக் குறிப்பிட வேண்டிய பகுதி வ. உ. சி. இசை நாடகம். மகாகவி பாரதியாரின் பாடல்களை இணைத்து, கு. மா. பாலசுப்ரமணியம் நன்கு தொகுத்திருக்கிறார். மாஸ்டர் முரளி சிதம்பரனாராக வந்து நன்கு நடித்திருக்கிறான்.



# வேங்கையின் மைந்தன்

## பதின்மூன்றாம் அத்தியாயம்

## போர்க்களத்தில் பொல்லாத வீரன்

சேப்பகல்லகம் அரண்மனையை விட்டு வெளியில் வந்த வந்தியத்தேவர், இளங்கோவின் கடமையை நினைவூட்டி அவனைச் சுய நினைவுக்குக் கொண்டு வந்தார். அவனைத் துரத்திவந்த வேல்விழிகளின் பிரமையிலிருந்து அவனை மீட்பதற்கு அவர் அரும்பாடு படவேண்டியிருந்தது.

பிறகு இருவரும் தங்கள் கண்களை நன்றாகச் சுழலவிட்டு, அந்த நகரத்தின் சுற்றுச் சுவர்களையும், கோட்டை மதில்களையும், வெளி வாயில்களையும் கண்காணிக்கத் தொடங்கினர். அகழிப் பாலத்தை அவர்கள் கடந்தபோது, "அதோ பார் முதலைகளை!" என்று அவனுக்குச் சுட்டிக் காட்டினார் வல்லவரையர் வந்தியத் தேவர்.

இயற்கையின் பாதுகாப்பு நிறைந்த இடத்தில்தான் அவர்களும் தலை நகரை அமைத்துக் கொண்டிருந்தார்கள். பின்புறம் மூன்று பக்கங்களிலும் அரண்களைப் போன்ற குன்றுகள் எழும்பி நின்றன. கோட்டை வாயில்களின் இருபுறங்களிலும், மதில் சுவர்கள் மீதும், ஏன்-குன்றுகளின் சிகரங்களில்கூட ஆயுதம் தாங்கிய காவல் வீரர்கள் காணப்பட்டனர்.

"இளங்கோ! நம்மைப் போலவே இவர்களும் முன்யோசனையுடன் பல காரியங்களைச் சாதித்திருக்கிறார்கள்" என்று சொல்லிக் கொண்டே, தம் குதிரையின் மீது தாவி ஏறினார் வல்லவரையர்.

இளங்கோவும் ஏறிக்கொண்டு, "மகிந்தனின் திறமையைத் தாங்கள் அளவுக்கு மேல் மதிக்கிறீர்கள். அவர் கோழை என்பதை நாமே நேரில் காணவில்லையா?" என்றான்.

"அவர் கோழையாக இருந்தாலும் புத்திசாலி. திருமந்திர ஓலையை அவர் யாரிடம் கொடுத்துப் படிக்கச் சொன்னார் என்பதைப் பார்த்தாயா? உண்மையில் இப்போது ரோகணத்தை ஆள்பவர் மகிந்தனல்ல; ஓலையைப் படித்துவிட்டு, உன்னிடம் செருக்கோடு பேசினாரே, அவர் தாம் இந்த நாட்டையும் இதன் மன்னரையும் இப்போது ஆள்பவர்."

"என்ன!"

"ஆமாம்; கீர்த்தி என்ற சிங்கள வீரரைப் பற்றி நீ முன்பே கேள்விப்பட்டிருப்பாய். இன்று நேரிலும் பார்த்து விட்டாய். மெய்யான வீரர்; அஞ்சாநெஞ்சம் கொண்ட முரட்டு மனிதர். பேச்சைப் போலவே வாள்வீச்சிலும் வல்லவர்."

முகத்தில் பெரிய மீசையுடனும் கூர்மையான கண்களுடனும் அலட்சியப் பார்வையுடனும் விளங்கிய அந்த அமைச்சரின் உருவத்தை மீண்டும் தன் கண் முன்னால் கொண்டு வந்தான் இளங்கோ.

"சோழப் பேரரசின் வலிமையை உணராமல் பேசினார் என்றல்லவா நினைத்தேன்!" என்றான்.

"இல்லை; சொல்லுக்குப் பின்னால் செயல் திறமை இருக்கிறது. நம்முடைய நடவடிக்கைகளை யெல்லாம் முன்னமேயே தெரிந்து கொண்டு, ஓரளவு விழிப்போடு இருக்கிறார்."

வல்லவரையர் மேலும் கீர்த்தியைப் பற்றிக் கூறினார்:—

"மன்னரின் பெயரைச் சொன்னால்தான் மக்களுக்கு எழுச்சியூட்ட முடியுமென்பதற்காக இவர் இப்போது மகிந்தனைத் தழுவிக் கொண்டு நிற்கிறார். நாட்டுப் பற்றில் நம்மைவிடச் சளைத்தவரல்ல. இவருடைய ஆசை என்ன தெரியுமா? முதலில் சேர பாண்டியர்களின் துணை கொண்டு நம்முடைய அரசை இந்த மண்ணிலிருந்தே களைய வேண்டும். பிறகு அவருக்கு உதவிய சேரபாண்டியர்களையும் விரட்ட வேண்டும்! தமிழகத்தின் சேயகமான ஈழத்தில் தமிழர்களுக்குள்ள நியாயமான உரிமைகளை ஒப்புக் கொள்ளாதவர் இவர்."

அகிலன்

இளங்கோவேள் திடுக்கிட்டான். பன்னெடுங்காலமாக இரு சாராரும் சேர்ந்து வாழும் நாடல்லவா இது?

"பாண்டிய சேரர்கள் அவருக்குப் பகைவர்கள் அல்லவே!" என்றான் இளங்கோவேள்.

"நண்பர்களைப் பகைத்துக் கொள்வதற்குக் காரணந்தானா கிடைக்காது? பாண்டியர்களில் எவராவது இங்குள்ள மணிமுடிக்கு உரிமை கொண்டாடினால் போதுமே! தவிரவும், மக்களிடம் மறைந்து கிடக்கும் இன வெறி, சமய வெறி, ஆதிக்க வெறி இவற்றைத் தூண்டி விடுவதற்கு எவ்வளவு நாழிகை யாகும்? — இந்தத் தீவு தமிழர்களுக்கும் சிங்களவர்களுக்கும் சொந்தமானது என்கிறோம் நாம். கீர்த்தியைப் போன்றவர்கள் தமிழர்களின் உரிமையை ஒப்புக் கொள்வதில்லை."

"அவரைச் சொல்லிக் குற்றமில்லை; அந்தப் பாண்டியப் பதர்கள் இருக்கின்றனவே..." என்று நறநறவெனப் பற்களைக் கடித்தான் இளங்கோ.

"பொறு இளங்கோ, பொறு!" என்றார் வந்தியத் தேவர்.

மலைபோல் வீற்றிருந்த மாமன்னர் அவர்கள் கொண்டு வந்த செய்திகளை விவரமாய்க் கேட்டறிந்தார். கப்பகல்லகம் கோட்டையின் பலமான கட்டுக் காவலையும், கீர்த்தியின் முன்னேற்பாடுகளையும், அவரது செருமிக்க மறுமொழிகளையும் கேட்ட பின்பும் சக்கரவர்த்தி வியப்படையவில்லை; சினங் கொள்ளவில்லை.

இளங்கோவைப் பார்த்து இளநகை செய்து விட்டு, வல்லவரையரிடம் திரும்பி, "சாமந்த நாயகரே! தொடங்குங்கள் போரை!" என்று கர்ஜனை செய்தார். "தெற்கே மாவலிவாண ராயருக்கு ஆள் அனுப்பி விட்டு, இப்போதே போர்ப்பறை ஒலிக்கச் செய்யுங்கள். இதோ, நானும் கிளம்பி விட்டேன்!"

"தாங்கள் நிராயுதபாணியாகப் போர்க்களம் புகுவதை விட..."

"என்ன சொல்கிறீர்கள், மாமா?"

"உக்கிரமான எதிர்ப்பு இருக்கும் என்று தெரிகிறது. தாங்கள் ஆயுதம் தாங்கி வருவதே நல்லது."

கடகடவென்று சிரித்தார் சக்கரவர்த்தி. "உக்கிரமான எதிர்ப்பு இருந்தால்தானே நம்முடைய வீரர்களுக்கும் உற்சாகம் பிறக்கும்? அந்த உற்சாகத்தை ஒருமுனைப் படுத்தவே நான் களத்துக்கு வருகிறேன். என்னைப் பற்றி யாரும் கவலைப்படாதீர்கள். ஆயுத பலத்தை மட்டும் நம்பி நாம் இங்குவரவில்லை. நம்மை எதிர்ப்பவர்களை எதிர்ப்போம்; பொதுமக்களின் ஒரு சொட்டு ரத்தம் கூடத் தரையில் சிந்தாது பார்த்துக் கொள்வோம்."



முரசுகள் அதிர்ந்தன. சங்கநாதம் பொங்கி எழுந்தது. ஊது கொம்புகள் அனைத்தும் ஒலித்திரள் உமிழ்ந்தன.

கடலைப் போல் பொங்கிப் படர்ந்த காலாட்படை எழுப்பிய புழுதிப் படலத்தால் வானமே மறைந்து விட்டது.

வானத்தில் குவிந்து கொண்டிருந்த கார்மேகத் திரள், தரையை அதிரச் செய்து நடை பழகிய யானைக் கூட்டங்களைக் கண்டு அஞ்சி எங்கோ ஒரு மூலையில் ஓடி ஒளிந்தது.

புயல் மழையில் மின்னும் மின்னல்களெனப் புரவிகள் பாய்ந்து கண்களைப் பறித்தன.

காடுகளை அழித்துக்கொண்டு, குன்றுகளைக் குலுக்கிக்



கொண்டு, புதர்களை வெட்டிப் புதுச் சாலை கள்சமைத்துக் கொண்டு சோழர் பெரும் படை முன்னேறத் தொடங்கியது. காடுகளை அழிக்கும் முயற்சியில் மரங்களோடு சாய்ந்து மடிந்தவர் பலர்; குன்றுகள் குலுங்கும் போது குப்புறச் சரிந்தவர் பலர்; புதர்களை வெட்டிப் புதுச்சாலை சமைத்த வேகத்தில் புதையுண்டு மாண்டவர் பலப் பலர்.

ஆனாலும் கடல் அலைகளைப் போன்ற படை அலைகள் ஓயவில்லை. மேலும் மேலும் சென்றுகொண்டே இருந்தன.

போர்! போர்! ரோகணத்தின் சரித்திரமே அதுவரையில் கண்டிராத போர்! ரோகணம் என்ற மங்கைநல்லாள் அதுவரையில் தன் எல்லையில் யாரையுமே அடி எடுத்து வைக்க விட்டதில்லை, பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளாக இயற்கைத் தேவி அவளுக்குப் பயங்கரமான பாதுகாப்பு அளித்திருந்ததால். கன்னி கழியாத பெண்ணின் சீற்றத்தோடு அவள் தமிழகத்துக் கட்டிளம் காளைகளைப் பலி வாங்கத் துடித்தாள்.

மகிந்தன் எப்படிப்பட்டவரோ, ஆனால் கீர்த்தி மலைகளையே புரட்டக் கூடியவர்.

ஆம், அவருடைய வீரர்கள் மலைகளின் மீதேறி நின்றுகொண்டு அம்பு மழை பொழிந்தார்கள். பாறைகளைச் சோழ வீரர்கள் மீது உருட்டி விட்டு இடிஇடித்துக் கிடுகிடுக்கச் செய்தார்கள். பாண்டிய நாட்டில் செய்த வேல்களும், சேர நாட்டில் சித்தமான ஈட்டிகளுமே செந்தமிழ் நாட்டு வீரர்களின் செங்குருதியைச் சுவைத்தன.

உயிருக்குப் பயந்த கூட்டமா இது? ஒப்பற்ற புகழ் தேடுவதற்காக உயிரைப் பணயம் வைப்பதற்கென்றே ஓடோடியும் வந்தவர்களல்லவா இவர்கள்? மலைகளே புரண்டு விழுந்தாலும் மலைக்கவா போகிறார்கள்?

நகரத்தைச் சுற்றிலும் ஒரு காதச் சுற்றளவுக்கு ஏற்படுத்தியிருந்த காவலைத் தகர்த்து விட்டு, ஆறும் நாள் மாலைப் பொழுதில் சோழப் பெரும் படை கப்பகல்லகம் நகரத்தை நெருங்கியது. ஆயிரத்துக்கு மேற்பட்ட வீரர்களை இழந்த பின்னும் அதன் வலிமை குன்றவில்லை. எதிரில், அகழிக்கு அப்பால் குன்றுகள் சூழ நின்ற கோட்டையைக் கண்டவுடன் அவர்கள், "வெல்க, வேங்கை நாடு!" என்று ஆர்ப்பரித்துக் கொண்டு முன்னேறிச் சென்றார்கள்.

"தாத்தா! ராஜசிம்ம பாண்டியன் இங்கு விட்டுச் சென்ற மணிமுடி விசுவரூபம் எடுத்து நிற்பது போல் இந்தக் கோட்டை தோற்றமளிக்கிறதல்லவா?" என்று வல்லவரையரிடம் கேட்டான் இளங்கோ.

மாலைப் பொழுது மயங்கி இரவுநெருங்கியதால், மறுநாள் போர் தொடங்கலாம் என்று கட்டளையிட்டார் மாமன்னர். வீரர்கள் தொலைவில் காடுகளுக்குள் பாசறைகள் அமைப்பதில் முனைந்தார்கள். அகழிக்கு அருகே சென்று அதன் ஆழத்தையும் அகலத்தையும் கணக்கிட்டார் மாமன்னர்; கோட்டையின் உயரத்தையும் அளவெடுத்தார். "நாளைக்குக் காலையில் தொடங்கும் போர், மாலைக்குள் நம் வீரர்களிடம் நம்பிக்கையை வளர்ப்பதாக இருக்க வேண்டும்" என்று இளங்கோவிடம் கட்டளை பிறப்பித்தார்.

தீவர்த்திகள் ஆயிரக்கணக்கில் கொழுந்து விட்டெரிந்தன. யானைகள், குதிரைகள், ஆயுதங்களுடன் மனிதர்கள் மறுநாள் பகல் பொழுதை எதிர்பார்த்திருந்தார்கள். கோட்டைக்குள்ளே அப்போது பல இரகசியமான ஏற்பாடுகளும் வெளிப்படையான நடவடிக்கைகளும் நடந்த வண்ணமாக இருந்தன.

அகழிக்கு அப்பால் சென்று தாக்குவதற்காகப் பெரும் படையினரை அணிவகுத்துக் கோட்டை வாயில் கதவருகில் சித்தமாக நிறுத்திக் கொண்டிருந்தார் கீர்த்தி. வில் பயிற்சியில் தேர்ந்தவர்களைப் பொறுக்கியெடுத்து மதில் சுவர்களின் மேலே நிரப்பினார்.

**ம**றுநாள் உதய சூரியன் செவ்வொளி பரப்பிக் கொண்டே போர்க்களத்தின் காட்சியைக் கண்ணுறுவதற்காகச் சிறிது சிறிதாக மேலெழும்பி வந்தான். இராஜேந்திர மாமன்னர் அமைத்திருந்த படை வியூக அணிகள் அவனது கதிர்க் கற்றைகளைப் போலவே ஒளி பெற்றுத் துலங்கின. படைகளைத் தரம் பிரித்துப் பல சாரிகளில் நிறுத்தியிருந்தார்.

வேல்முனை பாய்ச்சப் பெற்ற கோட்டைக் கதவுகளைத் திறந்து கொண்டு, அணையுடைத்த வெள்ளமெனப் பாய்ந்து வந்தனர் மகிந்தனின் வீரர்கள். அகழிப் பாலம் யானைகளின் அடிச் சுவடுகளால்

அதிர்ந்தது. அம்பு மழை பெய்து கொண்டும், வேல் மின்னல்களை வீசிக் கொண்டும் அவர்கள் ஆரவாரங்களுடன் முன்னேறி வந்தார்கள். — சோழப் பெரும் படையோ மாமன்னரின் கட்டளைக்குக் காத்து நின்றது.

எதிர்த் தரப்பினர் நெருங்கி வந்து, தங்களோடு கலக்கும் வரையில் வாளா விருந்த சக்கரவர்த்தி, அவர்களுடைய ஆரம்ப வீர சாகசங்களைக் கண்டு நகைத்து விட்டு, "கொட்டுங்கள் முரசத்தை! தொடங்குங்கள் போரை!" என்று கர்ஜித்தார்.

"வெல்க வேங்கை நாடு! வெல்க ராஜேந்திர மாமன்னர்!" என்று எழுந்த வாழ்த்தொலிகளால் விண்ணகமே நடுநடுங்கியது.

அவ்வளவுதான்!

யானைகளோடு யானைகள் மோதித் தங்கள் கடைவாய் மதம் பிழிந்து பிளிறின. தந்தத்துடன் தந்தம் உராய்ந்து செந்தீச் சுடர்ப் பொறிகள் உதிர்த்தன. சூரியன் ஒளியை மறைக்கும் அளவுக்குக் கூரம்புகள் சரக்கூடம் கட்டின. செவியைத் துளைத்துச் செவிடாக்கும் பேரொலி எழுந்தது. வாயில் தள்ளும் நுரைப் பெருக்கோடு பாய்ந்து கனைக்கும் குதிரைகள்; கேடயங்களும் வேலும் வாளும் பொருந்தும் ஒலி; ஆவேசக் கூக்குரல்கள்; வாழ்த்தொலிகள்; மரண ஓலங்கள்!

கோட்டை வாயில் கூண்டின் உச்சியில் மறைவிடத்தில் இருந்தவாறே மன்னர் மகிந்தனும் அவர் குடும்பத்தாரும் களக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தனர். ரோகணத்து யானைகள் சில அகழியில் வீழ்த்தப்படும் பயங்கரமான செயலைக் கண்டபோது அவர்கள் மனம் பதறியது. பட்டமகிஷி பயத்தால் மயங்கி விழுந்தாள்.

முன்னொரு நாள் இளங்கோவின் மேல் வாளெறிந்த சிறுவனும், இளங்கோவைத் தன்விழிகளால் வதைத்த வனிதையும் அங்குதான் இருந்தார்கள். சிறுவன் பற்களைக் கடித்தான். பெண்ணோ கண் இமைக்கவும், மூச்சு விடவும் மறந்து போய் நின்றாள்.

அன்றைக்குத் தூதுவனாக வந்த ஒருவன் அந்தக் களத்திடையே புயலெனப் புகுந்து போர்புரிந்த விந்தைக் காட்சி அவளை மயிர்க் கூச்செறிய வைத்தது. ஒரு முறை அகழியின் அருகே அவனுடைய குதிரை வந்தபோது, தன் அருகில் நின்ற சிறுவனுக்கு அவனைச் சுட்டிக் காட்டி, "பொல்லாத வீரன்!" என்றாள்.

இளங்கோவின் ஆவேசத்துக்கோர் எல்லையில்லை. மலைகளென மோதும் வேழங்களிடையில், பிடரி மயிர் சிலிர்க்கத் தாவும் புரவிகளிடையில், வேல் பாய்ச்சும் வெந்தழல் வீரர்களிடையில், இன்னும் எங்குமே நீக்கமற நிறைந்து காணப்பட்டான். அவனுடைய முரட்டுக் குதிரைக்குச் சிறகு முளைத்து விட்டது. அவனுடைய வாள்தாங்கிய கரத்தில் காலன் குடிகொண்டு விட்டான்.

பார்த்தோர் பயந்தொளியும் பலபீமன் அவன். கண்டோர் நடு நடுங்கும் காலன் அவன். அவன் திரும்பிய திசைகளிலெல்லாம் ரோகணத்து வீரர்கள் சரிந்து விழ்ந்தனர்; சோழநாட்டு வீரர்கள் புத்துயிர் பெற்றனர். "கொடும்பாளூர் இளவரசர்!" என்ற சொல், ஒவ்வொரு தமிழ் வீரனுக்கும் ஒரு யானையின் பலத்தைக் கொடுக்கும் விந்தைச் சொல்லாக வளர்ந்தது.

மாலை நேரத்துக் காட்சி, செவ்வானத்தின் பிரதிபலிப்பாக விளங்கியது, கப்பகல்லகம் போர்க்களத்தில். அகழி முழுவதும் செங்குருதியால் நிரம்பி வழிந்தது. அதனுள்ளிருந்த முதலைகள் தங்களை வளர்த்தவர்களின் உடல்களையே சுவைக்கத் தொடங்கின. திரும்பிய பக்கமெல்லாம் சிதைந்த உடல்கள் சிதறிக் கிடந்தன. மாண்டு போன மனிதர்கள், குதிரைகள், யானைகள்...

மகிந்தனின் வீரர்களில் எஞ்சி நின்றவர்கள் சிலரே. அவர்களும் போர்நிலை மாற்றத்தைக் கண்டவுடன் கோட்டைக்குள் பதுங்கிக் கதவுகளைத் தாழிட்டுக் கொண்டார்கள். அகழிப் பாலத்தை அகற்றி விட்டார்கள். "மூன்று மாதங்களுக்கு நம்மிடம் உணவுப் பொருள் இருக்கிறது; அவர்கள் முற்றுகையிட்டுப் பார்க்கட்டுமே!" என்று வீரம் பேசி, தம்முடைய வீரர்களின் சோர்வை அகற்றப் பார்த்தார் கீர்த்தி.

கோட்டை வாயில் கூண்டின்மேல் நின்று கொண்டிருந்த பெண்மணி, தன் அருகில் நின்ற சிறுவனின் தோளை வளைத்துக் கொண்டு, கலங்கும் கண்ணீருடன் பெருமூச்செறிந்தாள். வெகு தூரத்தில் தெரிந்த இளங்கோவின் உருவம் அவள் சீற்றத்தைக் கிளறிவிட்டது.

"தம்பி! அன்றைக்கே நீ அந்தக் கொடியவனைக் கொன்று போட்டிருக்க வேண்டும். மறுமுறையும் வாள் எறியப் போகிறாயோ என்று பயந்து உன்னிடமிருந்து அதைப் பிடுங்கிக் கொண்டது மகா பாவம்! இப்போது உன்னால் அவனைக் குறி பார்த்து வாள் எறிய முடியுமா?"

"இப்போது எனக்கு உன்னைத்தான் கொல்லத் தோன்றுகிறது!" என்று கண்களை உருட்டி உருட்டி விழித்தான் அந்தச் சிறுவன்.

## பதினான்காம் அத்தியாயம்

# முற்றுகையிட்டவள்

மூன்று மாத முற்றுகையைத் தாங்க முடியுமென்று வீரம் பேசிய கீர்த்தி, இனி மூன்று நாட்கள்கூடத் தாங்க முடியாதென்பதைக் கண்டு கொண்டார். அவருடைய சினம் இளங்கோவின் மீது திரும்பியது. கொடும்பாளூர் இளவரசனுமே அவன்? சூறாவளியுடன் சேர்ந்த ஊழித் தீயைப்போல் அவன் நமது படைகளைப் பதைபதைக்க வைத்து விட்டானே?

கீர்த்தி குறிதவறாது கூரம்பு எய்வதில் பெயர் பெற்றவர். பறக்கும் பறவைகளையும், பாயும் புலிகளையும், புதருக்குள் ஒளிந்துவிட்ட வன விலங்குகளையும் அவருடைய அம்புகள் அநாயாசமாக வீழ்த்தியிருக்கின்றன. அப்படிப்பட்டவர் எத்தனையோமுறை இளங்கோவின்மேல் குறி வைத்து அம்புகளை நாணேற்றினார். பலன்?—அந்த இளைஞனே ஒரு மனிதப் புயல்; அவன் ஏறியிருந்த கறுப்புப் புரவியோ கார் காலத்து மின்னல்.

மன்னர் மகிந்தனுடன் ரகசிய ஆலோசனைகள் நடத்தி அவரை இரவோடு இரவாக எங்கோ ஓர் இடத்துக்கு அனுப்பி வைத்தார் கீர்த்தி. எஞ்சியிருந்த வீரர்களையும் அரண்மனைக் காவலர்களையும் கூட்டி வைத்து, கோட்டை மதில்களைக் காக்கும் ஏற்பாடுகளை மளமள வென்று கவனிக்கத் தொடங்கினார்.

மறுநாள் பொழுது புலர்ந்தது. கோட்டை வாயில்கள் திறக்கப்படவில்லை; அகழிப் பாலம் பொருத்தப்படவில்லை. சாவோடு உறவாடும் போர்க்களத்தின் பயங்கரமான பேரமைதியைக் கண்டு மலைத்து நின்றது கப்பகல்லகம் கோட்டை. காலை இளம் காற்றில் அதன் சோகப் பெருமூச்சு கலந்திருந்தது.

வில்லேந்திய வீரர்களும், தீப்பந்தங்களைச் சுழற்றி வீசும் திண்தோளர்களும் கோட்டைச் சுவர்களின் உச்சியில் வந்து குவியலாயினர். "யானைப் படையை முன்னால் அனுப்புவார்கள்; தீப்பந்தங்களை வீசி எறியுங்கள்" என்று கட்டளையிட்டிருந்தார் கீர்த்தி. யானைகள் திருப்பிக் கொண்டு சோழர்களின் சேனையை மிதித்து அழிக்க முற்படுமல்லவா?

ஆனால், இராஜேந்திர மாமன்னர் இதைப் போன்ற எத்தனை எத்தனை போர்க்களங்களைக் கண்டவர்! எத்தனை எத்தனை கோட்டைகளை வென்றவர்! சோழப் பேரரசின் குஞ்சர மல்லர்களோ தங்கள் யானைகளைக் காட்டுக்குள் திருப்பிப் பெரிய மரங்களை வேரோடு பெயர்த்துக் கொண்டிருந்தனர்!

கேடயம் தாங்கிய தரைப் படை வீரர்களை அணிவகுத்து, அவர்களில் ஒரு பகுதியினரை முன்னால் அனுப்பிவைத்தார். எதிரிகளின் அம்புகள் அவர்கள் மீது பெரு மழை பெய்யத் தொடங்கின. இதையே எதிர்பார்த்தவர்போல், மறு பகுதியினரைப் பின்னால் அனுப்பி, முதல் நாள் போரில் வீழ்ந்து பட்ட சடலங்களை ஒன்றுதிரட்டச் செய்தார்.

கோட்டை வாயிலுக்கு எதிரே கிடந்த அகழிப் பகுதியைத் தூர்ப்பதற்கு அதைத் தோண்டியவர்களின் சடலங்களே பெரிதும் பயன்பட்டன. சோழவள நாட்டின் புகழ் உயர்த்த! வீர சுவர்க்கம் எய்தியவர்கள் கூடத் தங்கள் புகழ் உடம்பைக் கொண்டு சென்று, பொய்யுடலை மெய்யான வெற்றிக்கு அடித்தளமாக்கினர். இன்னும் இருதரப்பிலும் வீழ்ந்து பட்ட கரிகளையும் பரிகளையும் கூட வீரர்கள் விட்டு வைக்கவில்லை. அனைத்தும் அகழியை நிரப்புவதற்கு உதவின.

"பிற்பகலுக்குள் கோட்டைக் கதவுகளைத் தகர்க்க முடியுமா?" என்று வல்லவரையரிடம் கேட்டார் சக்கரவர்த்தி.

"ஆம், கோட்டைக் கதவுகளின் வேல் முனைகளில் பலகைகள் பாய்ச்சி, பின்னர் யானைகளை மோதவிட்டுத் தகர்த்தெறிய வேண்டியதுதான்."

அகழியை ஒட்டி நின்றவண்ணம் படையினருக்கு உற்சாக மூட்டிக்கொண்டிருந்தான் இளங்கோவேள். யானைகளின் உடல்களைப் புரட்டுவதற்கு அவ்வப்போது அவனும் கைகொடுத்தான்.

அவனையே பார்த்து விட்டு வந்தியத்தேவர் பக்கம் திரும்பினார் மாமன்னர். "கொடும்பாளூர்ச் சிறிய வேளாரின் சாகசங்களை நான் கண்டதில்லை; கேள்விப் பட்டிருக்கிறேன். பூதி விக்கிரம கேசரியின் பராக்கிரமச் செயல்களையும் என் தந்தையார் கூறியிருக்கிறார்.—இளங்கோவை நேற்று நான் களத்தில் கண்டபோது அவர்களையெல்லாம் நினைத்துக் கொண்டேன்" என்றார்.

"பொறுப்பைக் கொடுத்தவுடன் போர்க்களத்தையே தனதாக்கிக் கொண்டான்" என்றார் வல்லவரையர்.

"சரி, நீங்கள் இருந்து கவனியுங்கள்; நான் பின்புறக் கோட்டை வாசலின் நிலைமையைப் பார்த்து வருகிறேன்."

ஐம்பது யானைகளுடன் இராஜேந்திரர் கோட்டையின் மேற்கு வாயிலை நோக்கிப் புறப்பட்டார். அவர் புறப்பட்டுச் சிறிது நேரத்துக்கெல்லாம் கிழக்கு வாயிலை நாடி நூற்றுக்கணக்கான யானைகள் வேருடன் பிடுங்கிய மரங்களோடு விரைந்தன. மதில்மேல் நின்ற ரோகணத்து வீரர்கள் தீப்பந்தங்கள் யாவற்றையும் முன்னரே எறிந்துவிட்டமையால் அம்புகளையே நம்பும் நிலைமைக்கு வந்து விட்டார்கள்.

தூர்க்கப்பட்ட அகழி மீது அழுத்தமான பாதை உருவாகியது. வீரர் கூட்டம் விரைந்தோடி நூலேணிகள் வீசிக் கோட்டைமேல் ஏறியது. இறந்து விழுந்தவர்களைத் திரும்பி நோக்கப் பொழுதில்லை. கோட்டைக் காவலர்களைக் கொன்று குவித்தபின், அகழிப் பாலத்தையே மேலிருந்து இறக்கி விட்டார்கள் சோழநாட்டு வீரர்கள்.

கதவுகளின் வேல் முனைகள் மழுங்கப் பெற்றன. மரப் பலகைகள் பொருத்தப்பட்டன. பாய்ந்தன, பாய்ந்தன, பாய்ந்தன ஈழநாட்டு வேழங்கள்! பாய்ந்தனர், பாய்ந்தனர், பாய்ந்தனர் தமிழ் நாட்டுக் காளைகள்!

மத்தகங்களால் களிறுகள் மோத, மரத் தூண்களால் காளைகள் மோதினார்கள். மத்தகம் மதம் சொரிய, சிறு கண்கள் செந்நீர் பாய்ச்ச, தந்தங்கள் முத்துதிர்க்கப் பொடிப் பொடியாகச் சிதறி வீழ்ந்தன கப்பகல்லகம் கோட்டைக் கதவுகள்.

வீரர்களின் வெற்றி ஆரவாரத்தை இனிச் செவிமடுக்க முடியுமா? அவர்களது ஆனந்த வெள்ளத்துக்கு இனி அணையிட முடியுமா?

"வாழ்க, தமிழ்த் திருநாடு! வாழ்க, புலிக் கொடி!"

"வெல்க, வேங்கையின் மைந்தன்!"

இளங்கோவேளின் கரிய நிறப் புரவி தன் பிடரியைச் சிலிர்த்துக் கொண்டு நாலுகால் பாய்ச்சலில் உள்ளே தாவியது. அவனைப் பின்பற்றியது சிறு குதிரைப் படை. நேரே அரண்மனை வாயிலுக்குச் சென்று, எதிர்த்தோரை மடக்கிவிட்டு உள்ளே சென்றான் இளங்கோ. அரசசபை காலியாகக் கிடந்தது. மந்திராலோசனை சபை மண்டபத்திலும் யாரையுமே காணோம். மேல் மாடத்திலும் ஆள் அரவமில்லை. எங்கே மன்னன்? எங்கே மகிந்தன்? மகா வீரனென்று பெயர் பெற்ற கீர்த்தி எங்கே?

அரண்மனைக்குப் பத்து பாகத் தொலைவில் அந்தப்புர மாளிகை தனியே தென்பட்டது. அதைச் சுற்றிலும் பலமான பாதுகாவல் படை நின்றதால் மன்னர் மகிந்தன் அங்கே இருக்கக் கூடும் என்று நினைத்தான் இளங்கோ. அவனுடைய வீரர்கள் காவலர்களை வளைத்துக் கொள்ளவே, அவன் மட்டிலும் தனியாக உள்ளே நுழைந்தான்.

முன்வாயிலைக் கடந்தவுடன் உள் வாயிலின் முன்னே ஓர் உருவம் நிற்பதைக் கண்டான் இளங்கோ. அன்றைக்கு அவன் மீது வாளெறிந்த அதே சிறுவன்!

அவனுடைய துடுக்கும் மிடுக்கும் அப்படியே இருந்தன. இடக்கரத்தில் கேடயமும், வலக்கரத்தில் சிறு வாளுமாகப் போர்க்கோலத்தில் நின்றுகொண்டிருந்தான் அவன். பன்னிரண்டு வயதுப் பாலகனை அவனை அன்போடு தழுவிக் கொண்டு தட்டிக் கொடுக்க வேண்டுமென்று தோன்றியது இளங்கோவுக்கு. ஆனால் சிறுவனின் முகத்திலோ குரோதம் குமுறிக்கொண்டிருந்தது.

அன்போடு தழுவிக் கொள்ளலாமென்றால், அந்த அன்பு நெஞ்சத்தின் ஆழத்தைத் தன் உடை வாளால், அளந்து பார்த்து விடுவான் போலிருக்கிறதே!

"தம்பி! உனக்குத் தமிழ் தெரியுமா? மன்னர் எங்கே? அரசர் இங்கு இருக்கிறாரா?" என்று கேட்டான் இளங்கோ.

"மன்னரை ஏன் தேடுகிறாய்?" என்று கத்தினான் சிறுவன். "இதோ அவர் மகன் இருக்கிறேன். உன் வீரத்தை என்னிடம் காட்டு, பார்ப்போம்!"

மின்னலெனப் பாய்ந்து வந்து இளங்கோவின் மூக்கு நுனியைத் தொட்டது சிறுவனின் உடை வாள். ஒரு சொட்டு செவ்விரத்தம் அங்கே பவளம் போல் திரண்டது. விளையாட்டுப் பிள்ளையா, இவன் விளையாற்றும் வீரனா?

இளங்கோவேளுக்குச் சிறிது நேரம் அவனோடு வீர விளையாட்டு விளையாடிப் பார்க்க வேண்டுமெனத் தோன்றியது.

வாட்கள் மோதின; கேடயங்கள் உராய்ந்தன. இளங்கோவேள் அவனுக்குச் சிரிப்பு மூட்டுவதற்காகப் பலவித வேடிக்கைகள் செய்து காட்டினான்.

ஆனால் விளையாட்டு வினையாகி, வேடிக்கை காட்டியவனுக்கே விபத்தைத் தேடித் தரும்போல் தோன்றியது. வயதுக்கு மீறிய வாட்பயிற்சி சிறுவனுக்கு. "சிரிப்பா காட்டுகிறாய்? சிதைத்துவிடுகிறேன் பார், உன் தலையை!" என்று கூறி, வாள் சுழற்றினான்.

விளையாட இனி நேரமில்லை.

அவன் வாளைத் தட்டி விட்டு, தன் வாளையும் செருகிக் கொண்டு அவனை எட்டிப் பிடிப்பதற்காக ஓடினான் இளங்கோ. சிறுவனின் கால்கள் அசுர பலம் பெற்று முன்னே ஓடத் தொடங்

னை. அங்குமிங்கும் போக்குக் காட்டிவிட்டு மிகச் சாதுரியமாக விரைந்தான் அவன். சிரிப்பும் பழிப்பும் இப்போது சிறுவனிடமிருந்தே கிளம்பின!

"என்ன! என்னையா பழிக்கிறாய்? உன்னை என்ன செய்கிறேன், பார்!"—கோபத்தோடு இளங்கோ அவன் மேலே விழுந்து பற்றி இழுக்கப் போனான்.

'படார்' என்ற சத்தத்துடன் இளங்கோவின் வலது பக்கம் இருந்த அறைக் கதவுகள் திறந்தன. அவன் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்ப்பதற்குள், வளைக்கரமொன்று விரைந்து வந்து அவன் வலது கரத்தைப் பற்றியது.

"அவனை இப்போது என்ன செய்து விடுவீர்களாம்?" என்று கேட்டுக் கொண்டே, அவன் குறுக்கே வந்து நின்று, வழிமறித்தாள் ஒரு பெண். பிடித்திருந்த கரம் மென்றளிர்க் கரம் தான்; ஆனால் பிடியோ இரும்புப் பிடி! சிறுவன் மீது அவனைப் பாயவிடாமல் வளைத்து நின்று முற்றுகையிட்டாள் அவள். இளங்கோவுக்குப் பேசுவதற்கே நா எழவில்லை.

"இதுதான் தமிழ்நாட்டு வீரமோ? உங்களுடைய வீரத்தைக் காட்டுவதற்கு இந்தப் பச்சைப் பாலகன்தானா அகப்பட்டான்?"

'இப்போது நான்தான் உண்மையில் அகப்பட்டுக் கொண்டு விழிக்கிறேன்' என்று சொல்லத் தோன்றியது அவனுக்கு. ஆனால் எப்படிச் சொல்வதென்று விளங்கவில்லை. அவளோ தன் வேல் விழிகளால் அவனைச் சுட்டெரிக்கிறாள்.

அன்றைக்குத் தூதுவனாக வந்தபோது அவனைத் துரத்தி வந்த அதே வேல் விழிகள்! நேருக்கு நேர் நின்று அவனை இப்போது துளைத்தெடுக்கின்றன. இளங்கோ அப்பழுக்கற்ற வீரன்தான். என்றாலும் அவளை ஏறிட்டுப் பார்க்கும் துணிவு அவனுக்கு ஏற்படவில்லை. தன்னுடைய கரத்தை விடுவித்துக் கொள்ளும் சக்தியும் அவனிடம் இப்போது கிடையாது. அவன் செயலிழந்து போய் நின்றான்.

"சொல்லுங்கள், இதுதான் தமிழ்நாட்டு வீரமா?"

"மன்னித்துக் கொள்ளுங்கள்" என்று தடுமாறினான் இளங்கோ. "எங்கள் நாட்டுப் பெண்களுக்கு உங்களைப்போல் இவ்வளவு துணிவு கிடையாது. பிடியைச் சிறிது தளர்த்துகிறீர்களா?"

பின்னால் திரும்பிப் பார்த்துவிட்டு, அந்தச் சிறுவன் அங்கே இல்லை என்பதை நிச்சயமாகத் தெரிந்துகொண்டு, அவன் கரத்திலிருந்து தன் கரத்தை எடுத்தாள் அவள். கலகலவென்று அவள் சிரித்த சிரிப்பொலியோடு, அவளுடைய வெண் முத்துப் பல்வரிசை மல்லிகை மணம் சிந்தியது.

அந்தக் கிறக்கத்திலிருந்து அவன் விடுபட்டுச் சுய நினைவு பெறுவதற்குள், அவனை இதுவரையில் அலைக்கழித்த வீரச் சிறுவன் எங்கோ ஓடி மறைந்துவிட்டான். ஒவ்வொரு இடமாக இளங்கோ, தேடி விட்டு ஏமாந்தபோதும், அந்த வேல்விழியாள் ஒவ்வொரு முறை தன் சிரிப்புதிர்த்துப் பரிகசித்தாள்.

பயமே கிடையாதா அவளுக்கு? அச்சத்தையே அறியாதவளா அவள்?

அவளிடமே திரும்பி வந்து, "எங்கே அந்தச் சிறுவன்?" என்று சினத்தோடு கேட்டான் இளங்கோ.

அதற்கும் அவள் மறுமொழி ஒரு மோகனச் சிரிப்புத்தான். (தொடரும்)

---

*கொச்சைத்தமிழ்*

## ஓசியின் வரலாறு!

கொச்சைத் தமிழிலே பல ஆங்கிலச் சொற்கள் கலந்து வழங்கக் காணலாம். 'ஓசி' என்பது அத்தகைய சொற்களில் ஒன்று. 'நாசிக்குப் பொடி ஓசி; வெறு வாய்க்கு வெற்றிலைபாக்கு ஓசி. ஓசி என்பது சும்மா கிடைப்பது. விலை கொடாமல் பெறுவது. இந்தச் சொல்லின் வரலாற்றைப் பார்த்தால் ஏறக்குறைய இருநூற்றாண்டுகளாக இந்நாட்டில் இது வழங்கி வருகிறது என்பது விளங்கும். ஆங்கிலக் கம்பெனியார் இந்நாட்டில் ஆட்சி செலுத்தியபோது அக் கம்பெனியின் சார்பாக அனுப்பிய அஞ்சல் கடிதங்களில் ஓ. சி. எஸ். என்று முத்திரை யிட்டார்கள். ஓ.சி.எஸ். என்பது 'ஆன் கம்பெனி சர்வீஸ்' (On Company Service) என்பதன் குறுக்கம். ஓ. சி. எஸ். தபால் பில்லை ஒட்டாமல் எங்கும் சென்றமையால் ஓ. சி.யில் போகிறது என்ற சொல்லுக்குச் சும்மா போகிறது என்னும் பொருள் வந்தது.

சீட்டுக் கச்சேரியில் ஆடுதன் என்ற சொல் அடிக்கடி வரும். ஆடுதன் என்பது (Hearts) என்ற ஆங்கிலச் சொல்லின் சிதைவு. வாட்டசாட்டமா யிருப்பவனைப் பார்த்து, 'ஆடுதன் ராஜாமாதிரி யிருக்கிறான்' என்று சொல்வதுண்டு.

—பேராசிரியர் திரு ரா. பி. சேதுப் பிள்ளை

இருமலின்
மூலகாரணத்தை
அகற்றுங்கள்






ஸிரோலின்
சாப்பிடுங்கள்

குடும்பத்தினர்
யாவருக்கும்
ஏற்ற
ஔஷதம்

ஸிரோலின் இருமலை நிறுத்து
வதோடு இருமலுக்குக் காரண
மான தீங்கிழைக்கும் கிருமி
களைக் கொல்லவும் செய்கிறது.

ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள்: வால்டாஸ் லிமிடெட்

# நாட்டு வைத்தியம்

ஸ்ரீஹரி

## 115. அசக்த சத்துருக் கிருமிகள்

அசக்த சத்துருக் கிருமிகளால் உண்டாகும் சிரமங்களைப் பற்றி முந்தின கட்டுரை யொன்றில் ஓரளவு தெரிவித்தது நினைவிருக்குமே! இவ்வகைச் சிரமங்கள் ஏற்படும் வரையில் நம் தாய்மார்கள் சும்மா இருப்பதில்லை.

"பத்திலே எட்டிலே ஏதாவது காரங் கல்கம் போட வேண்டாமோ? இல்லாவிட்டால் குழந்தைக்கு வயிற்றில் புளிப்பு சேர்ந்து கொள்ளாதோ?" என்பர். 7, 8, 10 வயதான பிள்ளைகளானாலும் சரி, "மாசத்திலே ஒரு தரமாவது பேதிக்குக் கொடுக்க வேண்டாமோ?" என்பர். "குழந்தை எடுத்தால் கனக்கிறது. வயிறு மட்டும் தனியாகக் கனக்கிறது. வயிற்றிலே அடைசல் இருக்கிறது. புளிப்புத் தட்டியிருக்கிறது. வாயில் புளிப்பு வாடை வீசுகிறது" என்று இப்படிப் பல குறிகளைக் கொண்டு குழந்தைகளுக்குக் குறிப்பான வியாதி வருவதற்கு முன்பே தக்க முயற்சி எடுத்துச் சிகிச்சிப்பர். பேதிக்குக் கொடுப்பதில் வயதுக்குத் தக்கபடிதான் மருந்தை நிச்சயிப்பர். அதற்குப் பூர்வாங்கமாகச் சிலருக்கு எண்ணெய்க்குளி சிலருக்குக் கிருமிஹரமான மருந்து என்று இப்படி ஏதாவதொன்றையும் செய்வர்.

'பச்சைக் குழந்தை'யாக உள்ளபோது இலைக்கள்ளியின் இலையை வாட்டிப் பிழிந்த ரசத்தில் சில துளிகளைத் தேனும் சேர்த்துக் குழைத்து நாவில் தடவுவார்கள். வயிற்றில் மப்பு தட்டுவது வயிறு அடைசல் படுவது போன்றவை ஒருகாலும் ஏற்படாது. ஒன்றிரண்டு முறை மணி மணியாக வெளிக்குப் போய் விடும்.

ஒரு பல் பூண்டை இட்டுக் காய்ச்சிய ஆமணக்கெண்ணெயில் வயதுக்குத் தக்கபடி ஒரு தம்பிடி யளவிலிருந்து 1-2 டீஸ்பூன் அளவுவரையில் கொடுப்பர். இதற்கு அனுபானம் தாய்ப்பால் அல்லது வெந்நீர். தாய்ப்பாலானால் தாயாருக்குப் பத்தியாகாரம் — தினசரி சாப்பிடும் திபன பாசன லேஹியம்—அவ்வப்போது சாப்பிடும் பூண்டு ஆகியவை காரணமாகத் தாய்ப்பால் மூலமாகவே மருந்தும் புகட்டப்படும்.

"இந்தப் பிள்ளைக்கு ஆமணக்கெண்ணெய் கொடுத்தால் வயிற்றாலே போகிறதே இல்லை. 2-மணி 3-மணிக்குத்தான் கொஞ்சம் கஷ்டப்பட்டுப் போகும். இதன் தேகக் கூறு இப்படி. அதனாலே, ஆமணக்கெண்ணெய் கொடுப்பதில்லை" என்பார் ஒரு அனுபவம் மிகுந்த அன்னை, அல்லது குழந்தையின் பாட்டி.

'அப்படியானால் என்ன செய்கிறீர்கள்?' என்று கேட்டால்-"அதனாலே நாலிலே மூணிலே--இல்லாவிட்டால் வாரத்திலே ஒரு தரம் மணத்தக்காளி இலையை ஒரு நசுக்கு நசுக்கி ஒரத்த கஷாயமாக வைத்து ஒன்று இரண்டு பாலடை கொடுத்து விடுவேன். தண்ணி தண்ணியா பேதியாகிவிடும் வயிறு தடுக்குப் போலே ஆகிவிடும். குழந்தையை எடுத்துக் கொண்டோமானால் ஒரு 'கடிதாசி' கனங்கூட இருக்காது." வயிற்றிலோ குடலிலோ கிருமிகள் உண்டாகாதென்பது இருக்கட்டும். புளிப்பு மந்தம் இவைகளே ஏற்படாது

ஐந்தாறு வயதுக் குழந்தையாகி விட்டால் ஆமணக்கெண்ணெயில் பாகல் இலையொன்றிரண்டை இட்டுக்காய்ச்சியோ-அல்லது பாகல் இலையின் ரஸத்தையே சேர்த்துக் காய்ச்சிய ஆமணக்கெண்ணெயையோ அளவோடு கொடுப்பர். குடற் கிருமிகள் போம்; பேதியுமாகும். கிருமி இல்லாமல், உண்டாகாமல் இருக்க உதவி புரியும்.

ஏழெட்டு வயதுக் குழந்தைகளானாலோ? முறத்திலிட்டுத் தேய்த்து நிமிட்டித் தோல் போக்கிய வேப்பன் ஈர்க்கு, ஓமம் அல்லது கற்பூரவள்ளியின் இலை-இவற்றை வெண்ணெய் போல் அரைத்துச் சுண்டையளவில் ஒன்றிரண்டு உருண்டைகளை முதல் நாள் கொடுப்பர். மறுநாள் மேற்சொன்ன விதத்தில் காய்ச்சிய ஆமணக்கெண்ணெய் கொடுத்துப் பேதியாகச் செய்வர். இதை இருபது நாட்கள், ஒருமாதம் ஒன்றரை மாதம் என்று இப்படிக்கொருதரம் தவறாமல் செய்வர். குடல் கிருமி வரவேவிட மாட்டார்கள். வந்திருந்தாலும் இம்முறைகளால் கிருமிகள் மாயமாகப் போய் விடும். ஆனாலும் மித்திரக் கிருமிகளுக்கு ஒரு கேடும் வரவே செய்யாது. அதிகரித்த ஊக்கத்துடனும் திறமையுடனும் செயல் புரியவும் தொடங்கும்.

இவ்வளவுக்குள் குழந்தையின் சரீரக் கூறு எத்தன்மையது என்று நன்கு புரிந்துகொள்ள முடியுமல்லவா? குடலில் கிருமி சேரும் குணக்கேடுள்ள குழந்தை என்று தெரிந்தால், வாயுவிடங்கம்



அன்புள்ள அப்பாவுக்கு,

வணக்கம். உயர்த்தரகம் பேனா ஒன்றை நேற்று ஏலத்தில் வாங்கினேன். விலை கொஞ்சம் மலிவு. இருபத்தேழு போய்த்தான் எவ்வளவு அழகாய் இருக்கிறது தெரியுமா? அற்புதமாக எழுதுகிறது. பழைய பேனாவைப் போல் மக்கர் ...

என்னும் கடைச் சரக்கின் கஷாயத்தை வாரத்தில் ஒன்றிரண்டு நாட்கள் தவறாமல் கொடுத்து வருவர். கிருமியைச் சேரவே விடமாட்டார்கள்.

பலாசம் விதை என்று வேறொரு கடைச் சரக்கு. இதை வெந்நீரில் ஊற வைத்து அதன் மேலே உள்ள தோலைப் பாதாம் பருப்பின் மேல்தோலைப் போல் களைந்து, பிறகு உலர்த்திப் பொடித்து வைத்துக் கொள்வது. இதில் அரை டீஸ்பூனளவைச் சிறிது பனை வெல்லத்துடன் பிசைந்து வாரத்தில் ஒன்றிரண்டு நாட்கள் விதம் சாப்பிட்டு வந்தால் அசக்தச் சத்துருக்களான கிருமிகள் சேருவதென்ற இயல்பே மாறிவிடும். ஆயினும் மித்திரக் கிருமிகளுக்கு ஒருவித மான இன்னலும் ஏற்படாது. இதற்கு மாறாக அவை மேலும் திறம்படத் தமது செயலைப் புரியவும் தொடங்கும்.

பெரியவர்களானால் கிருமிமுத்கர ரஸம் போன்ற மருந்துகள், மாணிபத்ர லேஹியம் ஆகியவை அசக்த சத்துருக் கிருமிகள்—அதிசக்த சத்துருக் கிருமிகள் அவற்றால் ஏற்படும் வியாதிகள் யாவற்றிலும் மித்திரக் கிருமிகளுக்கு ஒருவித ஆபத்துமில்லாமல் கொடுக்கக் கூடிய அனுபவ சித்தமான மருந்துகள்.

இனி சித்தர் நூல்கள் வாயிலாகக் கிடைக்கும் முறைகளையும் பார்ப்போம்.

ஆடு தீண்டாப்பாளை என்னும் பூண்டின் இலையை உலர்த்தி வைத்து அதினின்றும் தயாராக்கிய ஊறல் குடிநீரைக் கொடுக்க நுண்புழுக்கள் சாகும்.

இதன் விதையைப் பொடித்து ஒரு வராகன் எடை எடுத்து அரைப்பலம் சிற்றாமணக்கெண்ணெயில் சேர்த்துக் கொடுக்கக் குடற் புழுக்களை வெளிப் படுத்து மென்றார் அகத்தியர்.

இலைக் கள்ளியின் வேருடன் பெருங் காயத்தையும் சேர்த்து நீர் விட்டு அரைத்து, சிறு பிள்ளைகளின் வயிற்றின் மேல் பற்றிட்டால் போதும். வயிற்றிலுள்ள பூச்சிகள் தாமாகவே வெளிப் பட்டு விடும். மித்திரக் கிருமிகளுக்கு ஆபத்து விளையுமோ என்ற கவலைக்கு இடமே இல்லையல்லவா?

உத்தாமணி (வேலிப்பருத்தி) என்னும் கொடியின் இலையின் குடிநீரை இரண்டு மூன்று டீஸ்பூன் அளவு குழந்தைகளுக்குப் புகட்டினால் வயிற்றிலுள்ள புழுக்கள் வெளிப்படும்.

பாக்கை உலர்த்திப் பொடித்த சூர்ணத்தில் ஒன்றிரண்டு சிட்டிகை முதல் கால் தோலா வரையில் அரை—ஒரு அவுன்ஸ் எலுமிச்சன் சாற்றில் கொடுத்தாலும் புழுக்கள் வெளியாகும்.

காட்டாத்திப் பூவின் கஷாயத்தைக் கொடுத்தாலும் குடற்புழு போம். காட்டுக் கடுகு என்பதுதான் நாய்வேளை எனப்படுவது. இதன் விதையைப் பொடித்து ஒரு சிட்டிகை யளவைச் சிறிது சர்க்கரையும் சேர்த்துத் தினம் ஒரு வேளையாக இரண்டு நாட்கள் கொடுத்து, மூன்றும் நாள் ஆமணக் கெண்ணெய் கொடுக்கக் கழிச்சலுடன் வயிற்றுப் புழுக்களும் விழும்.

பிரமதண்டு என்பதைப் பிரமதண்டி என்றும் அழைப்பர். இதன் வேரைப் பொடித்து ஒன்றிரண்டு சிட்டிகைப் பிரமாணம் கொடுக்கத் தட்டைப் புழும் விழுந்து விடும்.

குப்பைமேனியின் இலையைப் பொடி செய்து தக்க அளவாகக் குழந்தைகளுக்குக் கொடுத்தல் அல்லது இலையையும் சிறிதளவு பூண்டையும் சேர்த்தோ கொடுத்தல் ஆகியவற்றால் மலப்புழுக்கள் வெளிப்படும்.

குப்பைமேனியின் சமூலத்தினால் செய்த 'மேனித்தைலம்' என்பதை மணப் பாகுடன் சேர்த்துக் கொடுத்தாலும் கிருமிகள் வெளிப்படும்.

பூசுணை என்றால் பலருக்குப் புரியாது. பூசணி என்றால் சிலருக்கும் சாம்பல் பூசணிக்காய் அல்லது கலியாணப் பூசணிக்காய் என்றால் பலருக்கும். கூஷ்பாண்டம் என்றால் சித்தர் நூல்களைப் படித்தவருக்கும், கூஷ்மாண்டம் என்றால் வடமொழி நூல்கள் வாயிலாக வைத்திய சாஸ்திரம் பயின்றவருக்கும் நன்றாகப் புரியும். இதன் விதையை வறுத்துச் சர்க்கரையும் கலந்து இரவு படுக்கைக்குப் போகும்போது தின்று தண்ணீர் குடித்துப் படுக்கவும். மறுநாள் ஆமணக் கெண்ணெயைப் பேதிக்குச் சாப்பிட்டுத் தொடர்ந்து அவ்வப்போது சிறிது சிறிதாக வெந்நீர் பருகிவரத் தட்டைப் புழுக்கள் (இருந்தால்) செத்து, கொத்துக் கொத்தாய் விழும். இல்லாவிட்டால் ஒன்று மில்லை. அவ்வளவுதான்.




# வாத்தியாரய்யா

**மிதுனம்**

கொல்லம் செங்கல் பாவிய திண்ணை. அந்தத் திண்ணைக்கு அழகளித்த கருங்கல் தூண்கள். அவைகளுக்கு மேல் பனங் கட்டை விட்டங்களில் ஓட்டுக் கூரை. சுவர்களில் செம்மண்ணிடப் பட்டிருந்தது. வாசலில் தண்ணீர் தெளித்து மெழுகிப் பளிச்சென்று கோலமிடப்பட்டிருந்தது. கிராமங்களுக்கே உரித்தானசிறிய வாசல் நிலை. வருவோர் போவோர் எல்லோரும் அடக்கமாகக் குனிந்து செல்ல வேண்டும் என்ற நியதிக்கு ஏற்றவாறு அமைந்திருந்தது அந்த வேலைப்பாடமைந்த தேக்கு நிலை. திண்ணையைத் தாண்டி உள்ளே எட்டிப் பார்த்தான் சிங்காரம்.

"வாத்தியாரையா இருக்காங்களா?" என்று சற்று உரத்தே வினவினான்.

"யாரு?" என்று விசாரித்துக் கொண்டே வெளியே வந்தார் பாலகிருஷ்ணய்யர். முதுமையின் ஆரம்பத்துக்கு அறிகுறியாக அவர் முகத்திலே சுருக்கங்கள் விழவிருந்தன. ஆழ்ந்த கண்கள். மூக்கிலிருந்து கீழே விழுந்து விடுவேன் என்று பயமுறுத்திக் கொண்டிருந்த கண்ணாடி. அரையில் நாலு முழ வேஷ்டி. தோளில் ஒரு துண்டு.

"வாத்தியாரையா! அடையாளம் தெரியல்லியா? நான்தான் சிங்காரம்."

"வா! வா! பத்து வருஷத்திலே என்னமா மாறிப் போயிட்டே? எப்ப வந்தே? அடியே! இங்கே வா. யார் வந்திருக்கான்னு பாரு!" என்று பரபரப்புடன் கூவினார். மீனாட்சி அம்மாள் வந்தவுடன், ஒரு நிமிடம் பிரமித்துப் போய் நின்றாள்.

"அம்மா! நான்தான் சிங்காரம். உங்களை யெல்லாம் பார்த்துட்டுப் போவலாம்னு வந்தேன்" என்றான் சிங்காரம்.

"நல்ல சீரும் சிறப்புமா தீர்க்காயுசா இருக்கணும்டாப்பா" என்று முழு மனத்துடன் ஆசீர்வதித்தாள் மீனாட்சியம்மாள்.

"நம்ம ரமணி எங்கிருக்கான்? தங்கச்சி சுகமாயிருக்கா?" என்று ஆதுரத்துடன் வினவினான் சிங்காரம்.

"கல்கத்தாவில் ஏதோ கம்பெனியில் வேலையாக இருக்கான்" என்று அசுவாரஸ்யமாகப் பதிலளித்தார் பாலகிருஷ்ணய்யர். "அம்மா பூமா! இங்கே வா. சிங்காரம் உன்னைப் பார்க்கணுமாம்!" என்று கூப்பிட்டார்.

அழகுக்கோர் அணிகலனாய், அடக்கத்துக்கோர் இலக்கணமாய் வந்து நின்றாள் பூமா. அன்று பார்த்த எட்டுவயதுச் சிறுமிக்கும், அவன் முன் நின்ற ஆரணங்

குக்கும் எவ்வளவு வித்தியாசம்? சிங்காரம் பூமாவைச் சிறுமியாகவே இன்றுவரையில் நினைத்திருந்தான்.

"தங்கச்சிக்குக் கல்யாணம்......"

"ஆகணும்டாப்பா! நல்ல மாப்பிள்ளையாகப் பார்த்துச் சொல்லேன்." என்று ஆரம்பித்தாள் மீனாட்சி அம்மாள்.

"ஊரிலேயிருந்து இப்பத்தான் வந்து இறங்கியிருக்கான். அதுக்குள்ளே ஆரம்பிச்சிட்டியே உன் கதையை. சீக்கிரம் சிங்காரத்துக்குப் பிடிச்ச சமையலாப் பண்ணு!" என்று பேச்சுக்கு முற்றுப் புள்ளி வைத்தார் பாலகிருஷ்ணய்யர்.

பிறகு வெகுநேரம் சிங்காரம் பாலகிருஷ்ணய்யரிடம் பேசிக் கொண்டிருந்தான். வடக்கே கை நிறையச் சம்பாதித்து வருகிறான் சிங்காரம் என்று அறிந்த பாலகிருஷ்ணய்யருக்கு மகிழ்ச்சி பொங்கியது. இருவரும் உணவருந்திய பிறகு பாலகிருஷ்ணய்யர் பள்ளிக்கூடம் செல்லப் புறப்பட்டார்.

"சிங்காரம்! ஊரிலேயிருந்து வந்த களைப்பு நீங்கத் தூங்கு. சாயங்காலமா நாமிருவரும் வெளியே போகலாம்" என்று மொழிந்து விட்டுச் சென்றார் வாத்தியாரையா.

பாயில் படுத்த சிங்காரத்துக்கு உறக்கம்கொள்ளவில்லை. அவன் மனப்பறவை சிந்தனைகளில் தாவிப் பறந்தது. பத்து வருடங்களுக்கு முந்திய நினைவுகளைக் கிளறியது.

* * *

சிங்காரம் அடவிகள் என்ற நெசவாளர் வகுப்பில் பிறந்தவன். பிறந்த உடனேயே தன் தாயை இழந்து விட்டான். அவன் தந்தை இசக்கி அடவியார் தம் ஒரே மைந்தனை நன்றாகப் படிக்கவைக்க வேண்டும் என்று பாடு பட்டார். சிங்காரமும் பள்ளியில் நன்றாகப் படித்தான். வகுப்பில் முதன்மையாகவே தேறி வந்தான். ஆனாலும் சிங்காரத்தின் படிப்புச் செலவுக்குப் போதிய பணமில்லாமல் தவித்தார் அவன் தந்தை. தம்முடைய தறியை அடகு வைத்துக் கடன் வாங்கினார். அப்பொழுது அவரை இகழ்ந்தவர் பலர்.

"டேய்! உன் குலத்தொழிலை விட்டுட்டு எதுக்குடா உன் பயலைப் படிக்க வைக்கிறே? நீங்கெளெல்லாம் இப்படிச் செய்யறதுனுலேதான் ஊர் கெட்டுப் போறது" என்று மிரட்டுவார் லேவா தேவி சங்கரலிங்கமய்யர். மில் வேஷ்டியைத் தவிர வேறொன்றையும் கட்ட மாட்டார் அவர்!

"சாமி! என் தறியை அடகுவைக்கிறேனுங்க. என் பய எப்படியாவது முன்னுக்கு வந்துட்டாப் போதுமுங்க. நான்தான் ரெண்டெழுத்து கூட்டிப் படிக்க முடியாதுபோயிட்டுது. அந்தப் பயலுக்கு அந்தக்குறை வேணுமே!" என்று அழாத குறையாகக் கெஞ்சிக் கடன் வாங்கி வருவார் இசக்கி அடவியார்.

தகப்பனைத் தூற்றியவர் பலர் என்றால் தனயனைத் தூற்றியவர் இன்னும் பலர். நெசவாளர் இனத்தைச் சேர்ந்த சிறுவன் நன்றாகப் படிப்பதா என்று அழுக்காறு கொண்டவர் அநேகர். அநாவசியமாக அந்தச் சிறுவனின் அவல நிலையை எடுத்துக் காட்டிப் புண்படுத்தினர்.

"ஏலே மூதி! உங்கப்பாரு இருக்கிற லச்சணத்துக்கு உனக்குப் படிப்பு வேறெயாலே! ஒரு வேளை சோத்துக்கு நாதியில்லே, பிச்சையெடுத்தாவது படிக்கணுமோ?" என்று அவமானப்படுத்திய பொழுது, சிங்காரத்துக்கு ஆறுதல் அளித்தவர் பாலகிருஷ்ணய்யர்தான்.

பாலகிருஷ்ணய்யர் பத்தமடைப் பள்ளியில் உபாத்தியாயராக இருந்தார். நன்றாகப் படிப்பவரிடம் என்றுமே அவருக்கு அலாதியான அன்பு. அதுவும் சிங்காரத்திடம் இன்னும் அன்பு அதிகம். ஏனெனில் அவருடைய மகன் ரமணியும்,



சிங்காரமும் ஒரே வகுப்பில்தான் படித்து வந்தனர்.

அநேகம் நாட்கள் உணவில்லாமல் தவித்தபொழுது மீனாட்சி அம்மாள்தான் சிங்காரத்துக்கு உணவிட்டிருக்கிறாள். ரமணிக்கும் சிங்காரத்திடம் அளவுக்கு மீறிய வாஞ்சை. ரமணி சிங்காரத்தைப் போல் நன்றாகப் படிக்க மாட்டான். ஆனால் அதற்காகச் சிங்காரத்தின்மேல் அவனுக்குப் பொறாமை கிடையாது.

ரமணியும், சிங்காரமும் எஸ். எஸ். எல். ஸி. படித்துக் கொண்டிருந்த பொழுது, சிங்காரத்துக்குப் பெரிய சோதனை ஏற்பட்டது. அதிக உழைப்பினால் தளர்ந்துவிட்ட இசக்கி அடவியார் மண்ணுலகை நீத்தார்.

" வாத்தியாரையா! சிங்காரத்தின் படிப்பை முடிக்காமே நான் போறேனேன்னு எனக்குக் கஷ்டமாயிருக்கு. எப்படியாவது அவன் படிச்சு முன்னுக்கு வந்திருவான்னு நினைக்கிறேன். என் மச்சான் ஒருத்தன் திருநெல்வேலியிலே இருக்கான். பரீட்சைக்கு அப்புறம் அவன் கிட்டே சிங்காரத்தை அனுப்பிச்சிடுங்க. உங்களைத்தான் நம்பறேன்" என்று கையெடுத்துக் கும்பிட்டார் இசக்கி இறக்கும் தறுவாயிலே.

" கவலைப்படாதே, இசக்கி!" என்று அபயம் அளித்த பாலகிருஷ்ணய்யர் சிங்காரத்தைத் தம் வீட்டுக்கே அழைத்து வந்து விட்டார்.

" மீனாட்சி! இனிமேல் சிங்காரத்தை இன்னொரு பிள்ளையா நெனைச்சுக்கோ!" என்று பாலகிருஷ்ணய்யர் கூறியவுடன் அந்த அம்மாள் சிங்காரத்தை அணைத்து ஆறுதல் அளித்தாள்.

அன்று முதல் ரமணி, சிங்காரம், பூமா மூவரும் சேர்ந்து வளர்ந்தனர். ஊரார் ஏச்சுக்கு இலக்காகியபோதிலும் தம் இலட்சியம் ஒன்றையே பெரிதாகக் கருதி வாழ்ந்து வந்தார் வாத்தியாரையா. எஸ். எஸ். எல். ஸி. பரீட்சை முடிவுகள் வெளியாயின. சிங்காரம் பள்ளியில் முதன்மையாகத் தேறியிருந்தான். ஆனால் ரமணிக்கோ தோல்வி. அதனால் ஏற்பட்ட ஏமாற்றத்தைக்கூட மறைத்துக் கொண்டு, சிங்காரத்தின் வெற்றியில் ஏற்பட்ட மகிழ்ச்சியிலே திளைத்தனர் பாலகிருஷ்ணய்யர் தம்பதிகள்.

சிங்காரத்தின் மாமாவைக் கண்டு பேசிய பாலகிருஷ்ணய்யர் ஏமாற்றத்துடன் திரும்பி வந்தார். சிங்காரத்தின் மேல் படிப்புக்கு அவர் உதவியளிக்க மறுத்து விட்டார். பாலகிருஷ்ணய்யர் மிகவும் முயற்சிசெய்து உபகாரச் சம்பளம் வாங்கிக் கொடுத்துச் சிங்காரத்தைச் சென்னைக்கு அனுப்பி வைத்தார்.

நாட்கள் செல்லச் செல்லச் சிங்காரமும் படிப்பில் முன்னேறி ஒரு பட்டமும் வாங்கிவிட்டான். நிலையான ஒரு வேலையும் கிடைத்து விட்டது. பையன் முன்னுக்கு வருகிறான் என்று கண்டவுடன் தன் மகளையே கட்டிவைத்துச் சிங்காரத்தைக் கவனித்துக் கொள்ளலானார் அவன் மாமா. சிங்காரத்தின் கல்யாணத்துக்கு வந்திருந்து ஆசீர்வதித்துச் சென்றனர் வாத்தியாரையா தம்பதிகள். அதற்கு அப்புறம் முழுதாகப் பத்து வருடங்கள் கழிந்து விட்டன. சிங்காரம் மீண்டும் பத்தமடைக்கு வந்திருக்கிறான்.

* * *

ஊரைச் சுற்றிப் பார்க்கக் கிளம்பினான் சிங்காரம். வளைந்து செல்லும் கனடியன் வாய்க்கால் கரையோடு நடந்து சென்றான். தாமிரவருணி நதியிலிருந்து பிரிந்து வரும் அந்த வாய்க்கால் பத்தாவது மடையாதலால் அந்தக் கிராமத்துக்குப் பத்தமடை என்ற பெயர் நிலைத்தது. வயல்கள் சூழ, வாய்க்கால் கரையில் அமைந்திருந்த பள்ளிக்கூடம் அவனை எதிர்கொண்டு அழைத்தது. நெற்கதிர்களை முத்தமிட்டு வரும் தென்றல், மாமரச் சோலையிலே குயில்கள் இசைக்கும் கீதம், நீர் சுழித்தோடும் வாய்க்காலின் சலசலப்பு — யாவும் உள்ளத்திலே தனியொரு கிளர்ச்சியை ஏற்படுத்தின.

பத்தமடையிலேயே பிறந்து வளர்ந்து விட்ட சுப்பண்ணு சிறு வயதிலிருந்தே எடுபிடி வேலைகள் செய்து வந்தான். தண்ணீர் சுமப்பது, கல்யாணங்களில் சுற்று வேலை செய்வது, ஊருக்கு வருவோர் போவோரிடம் பல்லை இளிப்பது - இப்படியாகப் பல முறைகளில் ஜீவனம் நடத்தி வந்தான். ஊர் வம்பெல்லாம் அவனுக்கு அத்துபடி.

சிறிது நேரம் நின்று அழகை ரசித்துவிட்டு ஆற்றங்கரைச் சாலை வழியாக நடக்க ஆரம்பித்தான் சிங்காரம். வயல்களின் ஊடே பாம்புபோல் வளைந்து செல்லும் அந்தப் பாதையில் நடந்து சென்றான்.

" யோசனை பலமாயிருக்கே. நதிக்கரை வரைக்குமா?" என்று கேட்டுக் கொண்டே வந்தான் சுப்பண்ணு.

" வா! உன்னைத்தான் பார்க்கணும்னு நினைச்சேன். பீர் முகம்மது எதிரே வந்தான். மறந்து போயிட்டேன், ஊர்ச் சமாசாரம் தெரியணும்னு உன்னைத்தானே பிடிக்கணும்."

தனக்குத் தெரிந்தவர்கள் எல்லோரையும் பற்றி விசாரித்துக் கொண்டே வந்தான் சிங்காரம்.
















THE INDIAN OVERSEAS BANK LIMITED, MADRAS
IOB



'' ஹி...ஹி...ஹி என்ன, அண்ணே! இதுலே போய்க் கையெழுத்துப் போட்டு வைச்சிருக்கே?''

' நானும் ''செக்''குலே கையெழுத்து போட்டேன், அண்ணே!''

---

'' ஏன்டா சுப்பண்ணு! வாத்தியாரையா சரியாவே பேசல்லியே! ஏதோ மறைக்கிறாற்போலே இருக்கே! உனக்கு எதினாச்சியும் தெரியுமா?''

'' அதை ஏன் கேக்கிறே போ! அந்தப் பயராமணி உருப்படாமே போய்ட்டான். அன்னிக்குப் போனவன் தான். இன்னி வரைக்கும் தகவல் கிடையாது. அந்தப் பெண் பூமா வேறே கல்யாணத்துக்கு நிற்கிறது. வெறுங் கை முழம் போடுமா?''

சிங்காரத்தின் நெஞ்சத்திலிருந்து ஆழ்ந்த பெருமூச்சு வெளிப்பட்டது. சிறிது நேரம் சிலையடித்தாற் போலிருந்தவன் திடீரென்று ஏதோ முடிவுக்கு வந்தவன்போல் எழுந்தான்.

'' வா! போகலாம்'' என்று கூறிவிட்டு ஊரை நோக்கித் திரும்பினான் சிங்காரம்.

• • •

அன்று இரவு சாப்பிடும்போது, '' திருநெல்வேலியிலே தானே உங்க மாமா பொஞ்சாதி யெல்லாம் இருக்காங்க?'' என்று கேட்டார் வாத்தியாரையா.

'' ஆமாம்! குத்தாலம் போவலாம்னு நினைச்சுக்கிட் டிருக்கோம். நீங்க வரணும்னு எங்களுக்கு ஆசை.''

'' நீ கூப்பிட்டது ஒண்ணே போதும், சிங்காரம்! வயசாயிடுத்து. ஸ்கூல் வேறே திறந்துட்டுது'' என்றார் பாலகிருஷ்ணய்யர்.

'' நாளைக்குக் காலே அஞ்சு மணிக்கு டோனாவூர் பஸ்ஸிலே திரும்பிப் போவலாம்னு நினைச்சுக்கிட்டு இருக்கேன்.''

'' நீ எங்களைப் பார்க்க வந்ததுலே ரொம்ப சந்தோஷம். நம்ம பூமா கல்யாணத்துக்குக் கட்டாயம் வந்துடு'' என்றாள் மீனாட்சி அம்மாள்.

'' காலம்பற எழுந்திருக்கணும். சீக்கிரம் தூங்கப் போ'' என்று கூறிச் சென்றார் பாலகிருஷ்ணய்யர்.

வாசல் திண்ணையில் படுத்துக் கொண்டனர் வாத்தியாரையாவும் சிங்காரமும்.

விடியற் காலையில் எழுந்திருந்து தன் கைப் பையைத் துழாவினான் சிங்காரம். விடிவெள்ளியின் ஒளியில் தன் கையிலிருந்து எடுத்த பத்து நூறு ரூபாய் நோட்டுக்களை ஒரு சிறு கவரில் போட்டு அதன்மேல் ''பூமாவின் கல்யாணப் பரிசு'' என்று எழுதித் தூங்கிக் கொண்டிருந்த வாத்தியாரையாவின் தலையணைக்கு அருகில் வைத்து விட்டான் சிங்காரம்.

மீனாக்ஷி அம்மாள் அன்புடன் கொடுத்த காப்பியை அருந்திவிட்டு, '' வாத்தியாரையா தூங்கிக்கிட்டிருக்காரு. எழுப்ப வேண்டாம், நான் போய் வாரேன். கும்பிடறேனுங்க. ........பூமா! உன் கல்யாணத்துக்குக் கடுதாசி போட மறந்திடாதே!'' என்று கூறிவிட்டுக் கைப் பையை எடுத்துக்கொண்டு பஸ் ஸ்டாண்டை நோக்கி நடந்தான்.

''இன்னும் டோனாவூர் பஸ் போகல்லியாவே?'' என்று டீக்கடை ஆறுமுகத்திடம் விசாரித்தான் சிங்காரம்

'' வர்ற நேரம் தானுங்க......அதோ வந்திருச்சே!''

சிங்காரமும் பஸ்ஸை நோக்கி நடந்தான். பஸ் டிரைவர் 'ஹாரனை'ப் பலமாக அடித்தான்.

''ஏனப்பா,ஆறுமுகம்! சிங்காரம் பஸ் ஏறிப் போய்ட்டானா?'' என்று கேட்டார் அவசரம் அவசரமாக ஓடிவந்த வாத்தியாரையா.

''இப்பத்தான் பஸ்ஸிலே ஏறினாரு.''

''சிங்காரம்!'' என்று கூவிக்கொண்டே பஸ்ஸை நோக்கி ஓடினார்.

பஸ்ஸினுள்ளிருந்தே சிங்காரம் அவருக்கு ஒரு கும்பிடு போட்டான். பஸ் வேகமாகச் செல்லத் தொடங்கியது.

பஸ் கிளம்பிய புழுதி மறையும் வரை சிங்காரம் சென்ற திக்கையே பார்த்துக் கொண்டிருந்தார் வாத்தியாரையா. கிழக்கே ஆதவன் எழுந்தான். பொதிய மலைத் தென்றல் புத்துணர்ச்சி அளித்தது. கண்களில் துளித்த நீரைத் தம் துண்டினால் துடைத்துக் கொண்டு திரும்பினார் வாத்தியாரையா. அவர் நடையில் புதிய துடிப்புக் காணப்பட்டது.

# கண்கள் உறங்காவோ?

## அத்தியாயம் 3.

## உறுதியிலே விழுந்த விரிசல்

சுமார் இரண்டு மாதங்களுக்குப் பிறகு அன்றிரவு மீண்டும் வீணாவின் கண்கள் உறக்கம் கொள்ள மறுத்தன. ஆனால் முன்பு அவளுடைய உறக்கம் கெட்டதன் காரணம் வேறு; இன்று அது கெட்டிருந்ததன் காரணம் வேறு. ஆழ்ந்து ஆராய்ந்தால் அவை ஒன்றுக்கு ஒன்று நேர் எதிரானவை என்று கூடச் சொல்லலாம். ஆம், மனிதரின் மனந்தான் பச்சோந்தியைப் போல் சூழ்நிலைக்கு ஒப்ப நிமிஷத்துக்கு நிமிஷம் நிறம் மாறுவதாயிற்றே!

அப்பொழுது புங்களூற்றுக் காலனியிலும் அவளுடைய டிஸ்பென்சரி தொடங்கப்பட்டு ஒரு மாதம் போல் ஆகி விட்டது. கேசவபுரத்து ஆஸ்பத்திரியிலும் இந்த டிஸ்பென்சரியிலும் இப்பொழுது சுமாராக நோயாளிகள் வர ஆரம்பித்திருந்தனர். இருந்தபோதிலும், உதவிக்கு ஒரு கம்பவுண்டரையோ, ஏன் சில்லறை வேலைகளைச் செய்ய ஒரு பணியாளையோகூட அவள் அமர்த்திக்கொள்ளவில்லை. அதற்குத் தேவையே ஏற்படவில்லை.

ஏனென்றால் அந்த இரண்டு இடங்களிலும் இருவர் அவளுக்கு உள்ளன்போடு உதவி புரிந்து வந்தனர். ஊதியம் பெறும் ஊழியனைவிட உண்மையாக உழைத்து வந்தனர். அவள் வேண்டாமென்று சொன்னாலும் கேட்காமல் பிடிவாதமாகத் தாங்களே வேலைகளை இழுத்துப் போட்டுக்கொண்டு செய்தனர். தினந்தோறும் அவள் வைத்திய சாலையைத் திறந்ததுதொட்டு, வேலைநேரம் முடிந்து பூட்டிச் செல்லும் வரையில் அங்கே பழியாகக் காத்துக் கிடந்தனர். ஆம், கேசவபுரத்தில் சுந்தரமும், புங்களூற்றுக் காலனியில் விசாலமும் அப்படித்தான் அவளை விடாப்பிடியாகப் பற்றிக் கொண்டிருந்தனர்.

அவர்கள் பொழுதுபோக்குவதற்காகத் தன் வைத்திய நிலையத்துக்கு வரவில்லை; வந்த இடத்தில் ஏதோ உதவினோம் என்று உதவிக் கொண்டிருக்கவில்லை. தன் உறுதியைக் கலைத்துத் தன்னை மறு வாழ்வில் புகுத்த வேண்டும் என்ற நோக்கத்தோடுதான் இப்படியெல்லாம் செய்கிறார்கள் என்பது வீணாவுக்குத் தெரியும். ஆயினும், "உங்கள் நோக்கம் நிறைவேறாது. யார் என்ன சொன்னாலும், எப்படி நடந்து கொண்டாலும் என் மனம் மாறாது" என்று அவர்களிடம் வெளிப்படையாகச்



சொல்லிவிட அவளால் முடியவில்லை. ஏனெனில் தன் உறுதியைக் கடைசி வரையில் நிலைநிறுத்த முடியுமா என்பதில் அவளுக்கே இப்பொழுது சந்தேகம் ஏற்படத் தொடங்கி யிருந்தது.

கேசவபுரத்தில் அடியெடுத்து வைத்த போது வீணா தன்னை உணர்ந்து, தனக்கு அங்கே கிட்டப் போகும் வரவேற்பை

உணர்ந்து, 'எது நடந்தாலும் ஏற்றுக் கொள்ளு வது; எதிர்ப்பதில்லை; புரட்சி செய்வதில்லை' என்ற முடிவுடன்தான் வந்தாள். ஆனால் இப் பொழுது ஏனோ அந்த முடிவிலே ஒரு விரிசல் விழ ஆரம்பித்திருந்தது. அதை அவளே உணர்ந் தாள். ஆயினும் அந்த விரிசலுக்குக் காரணம் இந்த இளைஞர்களின் இடைவிடாப் போதனை களோ, அல்லது எதிர்பார்த்தே இராத விநோதக் கட்டுப்பாடுகளுக்கும் ஒதுக்கல்களுக்கும் தான் ஆளாக்கப்பட்டு வந்ததோ காரணமல்லவென் றும் அவள் அறிந்திருந்தாள். பின் எதுதான் அவ ளுடைய உறுதியான மனத்திலே ஒரு கீறல் விழச் செய்து விட்டது?

பிறர் மனத்தைப் புண்படுத்த விரும்பாத அவ ளுடைய இளகிய மனப்பண்பா என்றால், அப்படிச் சொல்வதற்கில்லை. ஏனெனில் இவ்விரு இளைஞர் களின் மனமும் தனது பிடிவாதப் போக்கால் புண் படுகிறதே என்று அவள் மனத் தளர்ச்சி அடைந் திருந்தால், நாளைக்குப் புரட்சித் திருமணத்தில் ஈடுபடும்போது அவளைச் சார்ந்த எத்தனையோ பேர்களின் மனம் அதனால் புண்படக் கூடும் என் பது அவளுக்குத் தெரியாதா? உதாரணமாக அவள் அத்தை, தந்தை, இன்னும் இன்று அவ ளிடம் அன்பும் அநுதாபமும் காட்டிவரும் வேறு எத்தனையோ பேர்கள் அதனால் வெந்து போவார் களே! ஆகையால் அதுவன்று அவளுடைய மன உறுதி ஆட்டம் காணத் தொடங்கி யிருந்ததன் காரணம்.

சரி, அது இல்லை; பின், ஆரம்பத்தில் சிறிது காலம் கஷ்டத்துக்கு உள்ளானாலும், பிறகு குலசேகரத்தின் மனைவியைப் போல் தனக்கும் நல்வாழ்வு கிட்டும் என்ற சபலமோ என்றால், அப் படி எத்தனை ஆயிரம் விதவைப் பெண்கள் மறு மணத்தின் மூலம் நிம்மதியான வாழ்வைப் பெற்றிருக்கிறார் கள்? அவள் கண்ணால் காண வேண்டாம்; கேள்விப்பட்டா வது இருக்கிறாளா? அவளு டைய இந்த இருபத்து மூன்று ஆண்டு வாழ்விலே சியாமளி யின் கதை ஒன்றுதானே அவள் கேள்விப்பட்ட முதலாவது சுப மான கதை. அதே சமயம் நேர் மாறான அசுபக் கதைகளைத் தான் அவள் நிறையக் கேட்



டிருக்கிருள்; கண்டுங் கூட இருக்கிருள். மறுமணம் செய்துகொண்ட விதவைகள் கணவனுல் கைவிடப்பட்டது; துன்பம் தாங்காமல் மாய்ந்தது; வாழவொட்டா மல் நசுக்கப்பட்டது; இப்படி எத்தனை எத்தனையோ! ஆதலால் அந்தச் சபல மும் அவளுடைய மன விரிசலுக்குக் காரணமன்று.

ஒருகால் பருவத் துடிப்போ என்றுல், அதை வீணு நிச்சயமாக ஒப்புக்கொள் ளத் தயாராக இல்லே. அந்தப் பருவம் மலர்ச்சி பெற்ற புதிதிலேயே ஒடுக்கப் பட்டு விட்டது. அதை மரத்த நிலேயி லேயே அவள் வளர்த்து வந்திருக்கிருள்.

அப்படியாளுல் வேறு எதுதான் இப் பொழுது அவளுடைய மனமாற்றத் துக்கு வித்திட்டிருக்கிறது?

அது உள்ளத்தின் ஓர் உளேச்சல்; சொன்னுல் நம்ப முடியாதது. மன வேதனேயின் ஓர் ஓலக் குரல்; ஆனுல் பிறர் கேட்டால் சிரிக்கக் கூடியது. ஆழ்ந்த மனேதத்துவம் அடங்கிய ஒரு பிரச்னே; பிறருக்கு எளிதில் புரியா தது. தன்னேத் தியாகம் செய்தா வது தன் போன்றேருக்கு நன்மை ஏற்பட வழி வகுக்க வேண்டும் என்ற தோர் உயர்ந்த பண்பு; ஆனுல் மற்ற வர்களுக்கு அது சுயநலப் பேராசை யாகப் படக் கூடியது. இத்தனேயும் ஓர் உருக் கொண்ட கிளர்ச்சிதான் அவள் உறுதியைக் கரைத்துக் கொண்டிருந்தது!

வீணு, தன் வரையில் சமூகத்தின் ஒதுக்கல், ஒரவஞ்சம், கொடுமை, கட்டுப் பாடு ஆகிய எதையும் தாங்கிக் கொள்ள உறுதி பூண்டிருந்தாள். ஆனுல் தன் நிலே யிலுள்ள பிற பெண்களுக்கு அத்தகைய துர்ப்பாக்கியங்கள் ஏற்படுவதை அவள் விரும்பவில்லே. அவை தனக்காக ஒழியா விட்டாலும் பிறருக்காகவாவது ஒழிய வேண்டுமென்ற விருப்பம் அவளுக்கு எப்பொழுதுமே உண்டு. அவற்றை ஒழிக்க முயலுபவர்களிடம் வெளிப் படையாக இல்லா விட்டாலும் உள்ளூற அநுதாபம் காட்டி வந்தவள்தான் அவள். அவ்வப்போது சுந்தரம், விகாஸ் ஆகியோர் இந்த அநியாயங்களேப் பொறுமல் வெறிகொண்டு கத்துகையில், அவள் அவர்களே வன்மையாகக் கண் டித்தாளே என்றுல், அவர்களுடைய அந்த வெறியும் துடிப்பும் அவள் பொருட்டுத் தோன்றியதே அதற்குக் காரணம். ஆனுல் அதே சமயம் அவ ளுடைய உள் மனத்தில் வெகு ஆழமான பகுதி ஒன்றில், 'இதே கிளர்ச்சி இவர் களுக்குப் பிற பெண்களின் அவல நிலே யைக் காணும்போதும் ஏற்பட வேண் டும்' என்ற பிரார்த்தனே இருந்து கொண்டுதான் இருந்தது. அதை அவள் அவர்களிடம் வெளிப்படையாகக் கூற வில்லே. ஆனுல் ஏற்படுகிறதா என்று ரகசியமாகக் கவனித்து வந்தாள்.

வீணு நிகழ்த்திய இந்த ரகசிய ஆராய்ச்சியில் சுந்தரம் இப்பொழுது வெற்றி பெற்று விட்டான்.

நாலேந்து நாட்களுக்கு முன் ஒருநாள் காலேயில் அவள் ஆஸ்பத்திரி வேலேயை முடித்துக் கொண்டு வீட்டுக்குத் திரும்பி ஞள். எப்பொழுதும் போல் சுந்தரத்தின் காரில்தான் வந்தாள். சாதாரணமாக அவன் வீணுவை அவள் வீட்டு வாயிலில் இறக்கி விட்டுப் போய்விட மாட்டான். தானும் இறங்கி வந்து, சச்சிதானந்தத் துடன் சிறிது நேரம் பேசிக் கொண்டு இருந்து விட்டுத்தான் போவான். அன்றும் அவன் அவ்வாறே அவளுடன் காரிலிருந்து இறங்கி வந்தான். ஆனுல் வீட்டுக் கூடம் வரையில் வந்தவன் அங்கே ஊஞ்சலில் சச்சிதானந்தத்துடன் தன் தந்தை அமர்ந்து சுவாரஸ்யமாகப் பேசிக் கொண்டிருந்ததைக் கண்டதும் திரும்பிப் போய்விட்டான்.

வீணு அவனுடன் கூடத்துக்கு வர வில்லே. அவள் உடை மாற்றிக் கொள்ளு வதற்காக நடையிலிருந்த தன் அறைக் குப் போய் விட்டாள். உடை மாற்றிக் கொண்டிருக்கையில் கூடத்தில் தன் தந்தையும் புஷ்பவனமும் பேசிக் கொண் டிருந்தது அவள் கவனத்தைக் கவர்ந்தது.

மகன் திரும்பிச் செல்வதைப் பார்த்துக் கொண்டே புஷ்பவனம், "இந்தப் பயல் செய்த கேலியைக் கேட்டீங்களா?" என்று பெருமூச்சு விட்டார்.

"ம்...என்ன செய்தான்?" என்று கேட்டார் சச்சிதானந்தம்.

"இவனேக் கலியாணம் கட்டிக்கடான்னு கெஞ்சு கெஞ்சுன்னு கெஞ்சினேம். அதெல்லாம் வேலே காயமான பிறகு தான்னு கண்டிப்பாச் சொல்லிவிட் டான். அப்படிச் சொன்னவன் இப்போ என்னடான்னு ஊருக்கெல்லாம் கலியா ணம் கட்டிவைக்கக் கிளம்பியிருக்கிறன். அதுவும் எப்படிப்பட்ட கலியாணம் என்கிறீங்க...?"

"எப்படிப்பட்ட கலியாணம்?"

"ஒரு மாசத்துக்கு முன்னே நம்ம நாட்டாண்மைக்காரன் சப்பாணி மக னுக்குப் பக்கத்துக் கோவிலூர்ப் பொண்ணு ஒருத்தியைக் கட்டி வைச்சு, கட்டின மறுநாளே அந்தப் பையன் பாம்பு கடிச்சுச் செத்துப் போனுன் இல்லேயா? போன வியாழக்கிழமை இவன் கோவிலூருக்குப் போய், அந்தப் பெண்ணின் அப்பன்காரனேப் பார்த்து, 'உன் மகளுக்குச் சூட்டோடுசூடா வேறே



தமிழ் மக்களின் கிராமியக் கலையான வில்லுப் பாட்டில் தேர்ச்சி பெற்ற சாத்தூர் டாக்டர் பிச்சைக்குட்டி குழுவினர் மலாயாவில் மூன்று மாதங்களாகச் சுற்றுப் பிரயாணம் செய்து தமிழ்க் கலையின் பெருமையைப் பரப்பி வருகிறார்கள். சிங்கப்பூர் விக்டோரியா தியேட்டரில் நடைபெற்ற வில்லுப் பாட்டுக் கதை நிகழ்ச்சிகளுக்குத் திரளாக மக்கள் விஜயம் செய்து, அக்கலையை ரஸித்து மகிழ்ந்தனர். ஜூன் 23-ந் தேதி நடந்த 'கண்ணகி' கதைக்குத் தமிழ்முரசு அதிபர் திரு சாரங்கபாணி அவர்களும், 24-ந் தேதி நிகழ்ந்த 'பாஞ்சாலி சபத'த்துக்குத் திரு பக்கிரிசாமி பிள்ளை அவர்களும் தலைமை வகித்துச் சிறப்பித்தார்கள். சிங்கப்பூர் தமிழர் பிரதிநிதித்துவ சபையினர் அளித்த தங்கப் பதக்கத்தை திரு கோவிந்தசாமி பிள்ளை அவர்கள் வில்லுப் பாட்டுக் குழுவினருக்கு வழங்கினர்.

---

கலியாணத்தை நடத்தி வைச்சுடணும். அதன் வாழ்வு பாழாப் போக விடக் கூடாது. நீ சரின்னு சொல்லு. நான் மாப்பிள்ளைக்கு ஏற்பாடு செய்யுறே'ன்னு உளறிட்டு வந்திருக்கிறான். இது எப்படியோ நம்ம சப்பாணி காதுக்கு எட்டியிருக்குது. அவன் நேற்று எங்கிட்டே வந்து, 'என்னங்க, உங்க மகன் இப்படிக் கட்டாயப் படுத்துறாராமே. அறுத்த பொண்ணுக்கு மறு தாலி போடுறது நியாயமா? அப்படிச் செய்யச் சொல்லி உங்களைப் போல் பெரிய மனுசங்க வீட்டுப் பிள்ளைகள் கட்டாயப்படுத்தலாமா?' என்று அழுதுட்டுப் போனான். 'ஏண்டா இந்த மாதிரி அடாபுடித்தனம் பண்ணுறே'ன்னு கேட்டால், 'பின்னே என்ன அப்பா, ஒருநாள்கூடப் புருஷனோடு வாழாமல் ஒரு பெண்ணின் வாழ்வு பாழாக விடுறதா?'ன்னு என்னையே திருப்பிக் கேட்கிறான். உலகம் போகிற போக்கைப் பார்த்தீங்களா?''

அதற்குப் பின் அவர்கள் பேசிக்கொண்டது எதையும் வீணா கேட்கவில்லை. சுந்தரம் அன்று தன்னிடம் தடபுடலாகச் சத்தமிட்டுச் சென்றதோடு நின்றுவிடவில்லை; தனக்கு அறிவிக்காமல், தன் விச்சையாக ஒரு பெண்ணின் மறுமலர்ச்சிக்கு முயன்றிருக்கிறான் என்பதே அவளுக்குப் போதுமானதாக இருந்தது. அப்படியானால் அவனுடைய எண்ணம் மனப்பூர்வமானது; நோக்கம் உயர்வானது. வெறுமனே தன் ஒருத்திக்காக மட்டுமே அவன் புரட்சி செய்ய முயலவில்லை. இத்தகைய தன்விச்சையான சுயநல நினைவற்ற முயற்சிகள் அவனைப் போன்ற இளைஞர்களிடம் இருக்கவேண்டும் என்றுதானே அவள் பிரார்த்தித்துக் கொண்டு வந்தாள்.

இவ்வாறு சுந்தரம் அவளுடைய ஆராய்ச்சியிலே புடம் போட்ட பொன்னாக மீண்டு விட்டான். விதவைகளின் இன்னல்களைப் போக்குவதில் ஒரு பொதுவான ஈடுபாடு உடையவன் என்பதை நிரூபித்து விட்டான். ஆனால் விகாஸ்? அவனுந்தான் தனது நோக்கம் குறுகிய சுயநல நோக்கமில்லை என்பதை அவளுக்கு மெய்ப்பித்து விட்டான். அவன் சுந்தரத்தைவிடத் தீவிரமானவன் இல்லையா? சுந்தரத்தை விட ஒரு படி மேலேகூடச் சென்று விட்டான்.

அந்தச் சம்பவம் இன்றுதான் நடந்தது. அது நடந்த பிறகுதான் வீணாவின் மனத்தில் முன்னிலும் அதிகமாக விரிசல் விழத் தொடங்கியிருந்தது; அது நடந்ததால்தான் அவள் இப்பொழுது கண்கள் உறங்காமல் சிந்தனைகளை அடுக்கிக் கொண்டிருந்தாள்.

இன்று மாலை புங்கனூற்று டிஸ்பென்சரியில் வீணா வைத்திய வேலையில் ஈடுபட்டிருந்தாள். அந்த டிஸ்பென்சரியைத் தொடங்கியதிலிருந்து ஒரு நாள்கூடத் தவறாமல் அவளுக்கு உதவி செய்து கொண்டிருந்த விகாஸ் இன்று வரவில்லை. வழக்கமாக வீணா மூன்று மணிக்குக் கேசவபுரத்திலிருந்து வண்டி

யில் புறப்பட்டு நாலு மணிக்குப் புங்க ளூற்றுக் காலனிக்கு வந்து சேருவாள். அதே தெருவில் வசித்து வந்த விகாஸ் அவள் வரும் வழிமேல் விழி வைத்துக் காத்திருந்து, வண்டி வந்ததும் டிஸ்பென் சரிக்கு ஓடி வருவான். ஆனால் இன்று ஐந்து மணி ஆகியும் அவனைக் காணவே காணோம். 'ஒருவேளை அவனுக்கு உடம்பு சரியாக இல்லாதிருக்குமோ?' என்ற நினைவுதான் டாக்டராகிய வீணு வுக்கு உடனே ஏற்பட்டது. அருகில் சில வீடுகள் தள்ளித்தான் இருந்தது விகா ஸின் வீடு. காத்திருந்த நோயாளிகளுக்கு மருந்து கொடுத்து அனுப்பிவிட்டு அவன் வீட்டுக்குப் போய்ப் பார்த்துவிட்டு வர வேண்டுமென்று அவள் நினைத்துக் கொண்டிருந்தாள்.

ஆனால் அவள் வந்திருந்த நோயாளிகள் எல்லாரையும் பார்த்து முடிக்குமுன்பே அவன் வந்து விட்டான். "மன்னித்துக் கொள், வீணு! நீ வந்ததைப் பார்த்துக் கொண்டுதான் இருந்தேன். ஆனால் வேறொரு முக்கியமான வேலையில் ஈடுபட் டிருந்ததால் வரக் கூடவில்லை" என்று அவன் உள்ளே நுழைந்ததும் சொன்னான்.

"உன் இன்றையச் சம்பளத்தை வெட்டிவிடப் போகிறேன். நீ என் உத்தரவு பெறாமல் வேலைக்கு ஒரு மணி நேரம் தாமதித்து வந்திருக்கிறாய்" என்று கூறி வீணு நகைத்தாள்.

ஆனால் விகாஸ் நகைக்கவில்லை. அவன் முகம் ஏதோ கலக்கத்தைக் காட்டியது.

அதைக் கண்டதும், "என்ன விஷயம், விகாஸ்? ஏன் ஒரு மாதிரியாக இருக் கிறாய்?" என்று அவள் கவலையோடு விசாரித்தாள்.

"எனக்கு நீ ஓர் உதவி செய்ய வேண் டும். உன் அப்பாவிடம் சொல்லி இரண் டாயிரம் ரூபாய் கடனாக வாங்கித் தர வேண்டும். என் சம்பளத்திலிருந்து மாதம் இருநூறு ரூபாய் வீதம் கொடுத் துப் பத்து மாதங்களில் அந்தக்கடனைத் தீர்த்து விடுவேன். செய்வாயா வீணு?" என்றான் அவன் இறைஞ்சும் குரலில்.

"நிச்சயமாக வாங்கித் தருகிறேன், விகாஸ்! ஆனால் உனக்கு எதற்காக இப் பொழுது இவ்வளவு பணம்? அதைச் சொல் முதலில்."

"அதை மட்டும் இப்பொழுது கேட் காதே! காரியம் நல்லதனமாக முடியட் டும்; பிறகு சொல்லுகிறேன்."

"அடேயப்பா! நான்கூட அறியக் கூடாத ரகசியமா அது?"

"ஆமாம்! அப்படித்தானென்று வைத் துக் கொள்ளேன். சரி, பணம் வாங்கித் தருவாயா, மாட்டாயா? அதைச் சொல் இப்பொழுது."

"வாங்கித் தருவதாகச் சொன்னேனே, விகாஸ்! இன்றே அப்பாவிடம் சொல்லி நாளைக்கு இங்கே வரும்போது வாங்கி வருகிறேன், போதுமா? இன்னும் முன்ன தாகத் தேவையானால் நீ வேண்டுமானால் என் பின்னோடு வீட்டுக்கு வா. இன்றே தரச் சொல்லுகிறேன்."

"வேண்டாம், வேண்டாம். நாளைக்குக் கொண்டு வந்தால் போதும். சரி, நான் வரட்டுமா? என்னை மன்னித்துக் கொள். என் வேலை முழுவதும் முடியவில்லை. அதற்குள் பணப் பிரச்னை எழுந்தது. உன்னைக் கேட்டுப் பார்க்கலாமென்று வந்தேன். வருகிறேன், வீணு! நன்றி, மிக்க நன்றி."

அவன் நடக்கவில்லை. குதித்தோடும் புரவி போல் பறந்தோடினான்.

'இவனுக்கு எதற்காக இப்பொழுது இவ்வளவு பணம்?' என்ற ஆலோசனை யில் மூழ்கியவளாக வீணு மீண்டும் தன் வேலையில் ஈடுபட்டாள்.

அரை மணி சென்றிருக்கும். விகாஸ் மறுபடியும் குதி போட்டுக் கொண்டு ஓடி வந்தான். "வெற்றி! வெற்றி! எதிர்பாராத வெற்றி! உன் அப்பா விடம் பணம் கேட்க வேண்டாம், வீணு! எங்கள் சீப் இன்ஜினீயரே தர முன் வந்து விட்டார். கடனாகக்கூட இல்லை. அவர் கைங்கரியமாக!" என்று அவன் களிக் கூத்திட்டான்.

"விஷயத்தைச் சொல், விகாஸ்!" என்று மீண்டும் வீணு அவனைக் கெஞ் சிக் கேட்டாள்.

"அப்பாடியோவ்! அதை இப்போது உன்னிடம் சொன்னால் குடி கெட்டது போ!" என்று கூறிவிட்டு அவன் மீண் டும் தலைதெறிக்கத் தன் வீட்டை நோக்கி ஓடி விட்டான்.

வீணுவுக்கு அவன் களிப்பின் கார ணத்தை உடனே அறிந்து கொள்ளும் துடிப்பு ஏற்பட்டது. 'சீப் இன்ஜினீயர் குலசேகர முதலியார் இவனுக்குப் பணம் கொடுக்க ஒப்புக் கொண்டிருந்தால் அவ ருக்கு இவ்விஷயம் நிச்சயமாகத் தெரிந் திருக்க வேண்டும். அவரிடம் போய்க் கேட்டு விடுவோம்' என்று எல்லா நோயாளிகளையும் பார்த்து அனுப்பிய பிறகு அவள் டிஸ்பென்சரியைப் பூட்டிக் கொண்டு குலசேகர முதலியாரின் வீட் டுக்குச் சென்றாள்.

குலசேகர முதலியார் அறிவித்த செய்தி இதுதான்:

விகாஸின் வீட்டில் ஏவின வேலைகளைச் செய்து கொண்டிருந்தான் பரமசிவம் என்றொருவன். அவன் முன்பு ராணுவத் தில் பணியாற்றியவன். ஹிந்தி நன்றாகப் பேசுவான். ஆதலால்தான் தமிழ் பேசத்

தெரியாத விகாஸ் குறிப்பாக அவனை வேலைக்கு அமர்த்திக் கொண்டிருந்தான்.

பரமசிவன் அனை ஸ்தலத்திலும் கூலியாளாக வேலை செய்து வந்தான். விகாஸின் 'ஷிப்டி'ல்தான் அவனுக்கு வேலை. பரமசிவத்தின் குடும்பம் பெரிது. கண் தெரியாத பெற்றோர், அவனுடைய நான்கு சிறு வயதுக் குழந்தைகள் ஆகிய அறுவரை அவன்தான் பாடுபட்டுக் காப்பாற்ற வேண்டும். அவன் மனைவி நான்கு மாதங்களுக்கு முன் பிரசவக் கோளாற்றில் காலமாகி விட்டாள். வீட்டில் சமையல், மற்றும் பெற்றோரையும், குழந்தைகளையும் பராமரித்தல், அனை ஸ்தலத்தில் கிட்டத்தட்ட ஏழு மணி நேரம் இடுப்பொடிய வேலை, போதாக்குறைக்கு விகாஸின் குற்றேவல்கள் ஆகிய அனைத்தையும் பொறுமையாகச் செய்து வந்த பரமசிவத்திடம் விகாஸ் அநுதாபம் கொண்டான். தன் வீட்டு வேலைகளையெல்லாம் அவன் இனிச் செய்ய வேண்டாமென்றும், ஆனால் தான் கொடுத்து வந்த சம்பளத்தைத் தொடர்ந்து கொடுத்து வருவதாகவும் அவன் ஒருநாள் கூறி, தனது வீட்டு வேலைகளுக்கு வேறு யாராவது ஒருவரை அழைத்துக் கொண்டு வருமாறு சொன்னான்.

சென்ற மாதத்தில் பரமசிவம் முத்தம்மாள் என்ற இளம் விதவை ஒருத்தியை வேலைக்காக அழைத்து வந்தான். மொழி தெரியாத விகாஸுக்கு அவள் உதவியாளாக வந்து உபத்திரவத்தை அளித்து விடலாகாதென்று அவனும் இந்த ஒரு மாத காலமும் அவளுடன் வந்து, அங்கே செய்ய வேண்டிய தினசரி அலுவல்களில் அவளுக்குப் பழக்கம் ஏற்படுத்திக் கொண்டிருந்தான்.

இந்த ஒருமாத காலத்தில் அவர்கள் பழகிய விதத்தைப் பார்த்தபோது, அவ்விருவரிடையே பாசம் ஏற்பட்டிருப்பதை விகாஸ் கண்டுகொண்டான். உடனே அவனுக்கு அவர்களை இணைத்து வைத்து விட வேண்டுமென்ற அவா உண்டாயிற்று. இன்று அவன் அவர்களை விளித்து, "நீங்கள் ஏன் மணம் செய்து கொள்ளக் கூடாது?" என்று கேட்டான்.

"செய்துக்கிடலாம் எசமான், எங்க சாதியிலேகூடப் பொண்ணுங்க மறுதாலி போட்டுக்கிற வழக்கம் உண்டு. ஆனால் பாருங்க, இப்போ இவள் என்னைக் கட்டிக்கிட்டா, இவள் புருசன் பங்கா இவளுக்குக் கிடைச்சிருக்கிற ஒரு வீடும், கொஞ்சம் நிலமும் இவள் கொழுந்தியானுக்குப் போயுடும். ஆமாங்க, ஒரு தடவை தாலி அறுத்த பொண்ணுங்க மறுதாலி போட்டுக்கிட்டால், முந்தின

புருசனின் சொத்து-சொம்பையெல்லாம் திருப்பிக் கொடுத்திடணுமின்னு எங்க சாதிக்காரங்க ஒரு சட்டம் போட்டு வைச்சிருக்கிறுங்க. முத்தம்மாளுக்குச் சொத்து சொம்பை விடப் பிரியமில்லே. அதனுலேதான் தயங்கிக்கிட்டிருக்கிறுள்'' என்று நிலைமையை உணர்த்திஞன் பரமசிவம்.

"அந்த வீடும், நிலமும் எவ்வளவு பெறும்?'' என்று கேட்டான் விகாஸ்.

"ரெண்டாயிரத்துக்குமேலே பெறுங்க, இன்னி விலேக்கு.''

"சரி, இரண்டாயிரத்துக்கு மூவாயிரம் கொடுத்தால் முத்தம்மாள் உன்னை மணந்துகொள்ளத் தடை இல்லேயே!''

"இது என்னங்க, கரும்பு தின்னக் கூலியா வேணும்? ஆனுல் யாருங்க ரெண்டாயிரமும் மூவாயிரமும் சும்மா கொடுப்பாங்க?''

"'நான் தருகிறேன்' என்று கூறிவிட்டு உடனே விகாஸ் உன்னிடம் ஓடி வந்திருக் கிறுன், அம்மா! அவன் தனது சம்பளத் தில் இதுவரை ஆயிரம் ரூபாய் வரையில் சேமித்து வைத்திருக்கிறுனும். மீதி இரண்டாயிரத்தை நீ கடனுக வாங்கித் தரச் சம்மதித்து விட்டதும் இச் சந்தோ ஷச் செய்தியை அறிவிக்க அவர்களேயும் அழைத்துக்கொண்டு என்னிடம் ஓடிவந் தான். உன்னிடம் அவன் இச் செய்தியை வெளியிட அஞ்சியதன் காரணம், நீ விதவைகள் மறுமணம் செய்து கொள்ளு வதை விரும்பாதவளாதலால், ஒருகால் முத்தம்மாளின் மனத்தைக் கலேத்து விடுவாய் என்று அவன் கருதியதே. விகாஸின் தன்னலமற்ற தொண்டை அறிந்தபோது அதில் பங்கு கொள்ள வேண்டுமென்ற விருப்பம் எனக்கும் ஏற் பட்டது. ஆதலால் நானே பாக்கி இரண்டாயிரத்தையும் போட்டு இந்தக் கலியாணத்தை முடித்து வைப்பதாகச் சொன்னேன். மனிதன் பணத்தை எப் போது வேண்டு மானுலும் சம்பாதித்துக் கொள்ளலாம் வீணு. ஆனுல் இதுபோல் ஒரு பெண்ணின் இழந்த வாழ்வை அவ ளுக்கு மீட்டுக் கொடுக்கும் வாய்ப்பு அத்தனே சுலபமாகக் கிட்டி விடாது'' என்று குலசேகர முதலியார் பெருமை மலரக் கூறி முடித்தார்.

"நீங்கள் பாராட்டுக்கு உரியவர்கள், சார்! உங்களைப் போல் தாரான உள்ள மும், தயாள சிந்தையும் உடையவர்கள் ஊருக்கு ஒருவர் இருந்தால் கூடப் போதும்; விதவைகளின் துயரங்கள் இவ் வுலகிலிருந்து அறவே துடைக்கப்பட்டு விடும்'' என்று நன்றிப் பெருக்கோடு சொன்னுள் வீணு.

"பாராட்டுக்கு உரியவன் நான் இல்லே, வீணு; அந்த முத்தம்மாள்தான். அவள் சற்றுமுன் என்னிடம் விடைபெற்றுச் சென்றபோது என்ன கூறிவிட்டுச் சென் ருள், தெரியுமா? 'எசமான்! எனக்கு ரெண்டாயிரமும் வேண்டாம்; மூவாயிர மும் வேண்டாம். ஒங்களேப்போலே பெரிய மனுசங்க எங்களேச் சேர்த்து வைக்க இத்தனே முயற்சி பண்ணுறீங் களே, அதுக்காக இந்தச் சொத்து— சொம்பு என்ன, என்னேயே நான் தியா கம் பண்ணிக்கிடலாம்' என்ருள். ஆகை யால் வீணு, என்போல் பணத்தாலும், விகாஸைப்போல் வெறும் உழைப்பா லும் மட்டும் விதவைகளின் துன்பத்தை அறவே துடைத்துவிட முடியாது, அம்மா! அதற்கு அந்தப் பெண்களுக் கும் தியாக உணர்ச்சியும், துணிவும் ஏற்பட வேண்டும்.''

இந்த இரண்டு சம்பவங்களுந்தாம் வீணுவின் உறுதியிலே விழுந்திருந்த சிறு விரிசலே மிகப் பெரிதாக்கி விட்டன. ஆம், வெறும் வாய்ப்பேச்சு வீரர்கள், வெறுமனே தன்னே அடைய வேஷம் போடுபவர்கள் என்று யாரைக் கருதியிருந்தாளோ, அந்த இரண்டு இளே ஞர்களும் இப்பொழுது தங்கள் பரந்த கொள்கையை நிரூபித்து விட்டனர்!

'இவர்களுக்கு இன்பமான வாழ்வு காத்திருக்கிறது. எனினும் அதை உதறி விட்டுப் பெண் குலத்தில் ஒரு சாராருக்கு ஏற்பட்டுள்ள துயரைத் துடைக்கத் துன்ப வாழ்வில் புகத் துணிந்திருக் கிறுர்கள். ஆனுல் அந்தத் துன்ப வாழ் வில் உழன்று கொண்டிருக்கும் நானே, அவ்வாழ்வை இன்ப வாழ்வாகக் கருதி விட முயன்று கொண்டிருக்கிறேன். குலசேகரம் கூறியதுபோல் எங்களுக்கே தியாக உணர்ச்சியும் துணிவும் ஏற்பட் டால் எங்கள் துயரம் நீங்குமா? அல்லது, என்னேப்போல் அதைப் பல்லேக் கடித்துக் கொண்டு பொறுத்திருக்கத் துணிந்தால் அது நீங்குமா?

'இல்லே, நான் கொண்டிருக்கும் முடிவு தவறு. என்னேச் சார்ந்தோருக்கு மனத்துன்பம் ஏற்படும் என்று நான் புரட்சிக்குப் பயந்து கொண்டிருந்தால் அது வடிகட்டிய சுயநலமே ஆகும். அது நான் என் சாராருக்கு இழைக்கும் மகத்தான துரோகம்.

'இந்தச் சுயநல நினைவை நான் களேய வேண்டும். எங்கள் துயரைத் துடைக்க விரும்புகிறவர்களுக்குக் கை கொடுத்து உதவ வேண்டும். எனக்காக இல்லா விட்டாலும் எங்கள் சமுதாயத்துக்காக எதையும் தியாகம் செய்ய வேண்டும்!'

இந்த முடிவுக்கு வந்தபிறகுதான் வீணு வின் உறங்காத கண்கள் அன்று உறக்கம் கொண்டன. அவள் சமூகப் போருக்குத் தயாராகி விட்டாள்! **(தொடரும்)**

சென்னை

ஜார்ஜ் டவுன்

வட்டாரத்தில்

ஏர் கண்டிஷன்

செய்யப்பட்ட



வரவேற்புக் கூடம் ★ சாப்பாட்டு அறைகள் ★ தங்கும் அறைகள்

குளிப்பதற்கான வசதிகள் இணைந்த அறைகள்

மற்றும் எல்லா நவீன வசதிகளும் உள்ள முதல்தரமான ஒரே ஹோட்டல்

# அம்பீஸ் கபே

போர்டிங் & லாட்ஜிங்

(புதுக் கட்டிடத்தில்)

6 & 7, பிராட்வே - - - சென்னை-1

---




## ஆபீஸ் மற்றும் வீட்டிற்கான ஆல்-ஸ்டீல் உபகரணங்கள்



**டீலூபுலர் மேஜை:**
மிடுக்கான தோற்றம். வேலை செய்ய சௌகரியமானது. ஆபீஸ்களுக்கு உபயோகமானது.



**ஸ்டாண்டர்ட் பீரோ:**
ரம்மியமான கலர்களில் கிடைக்கும். சாமான்களை சுத்தமாகவும் பத்திரமாகவும் இருக்க உதவுகிறது.



**மடக்கும் நாற்காலி:**
அழகானது. சுலபமாக மடக்கக் கூடியது. மற்றும் உறுதியானது.

**அடிஸன் & கோ., (பிரைவேட்) லிமிடெட்**
மதராஸ் - - - - - - பெங்களூர்

ஸ்டாக்கிஸ்டுகள்: விஜயலக்ஷ்மி & கோ., சேலம் ○ தண்டபாணி & கோ., ஈரோடு ○ கே. என். எ. குப்தா டிரேடிங் கோ., குடியாத்தம் ○ கோரனேஷன் மர்க்கன்டைல் இண்டஸ்ட்ரியல் கோ. மதுரை. லக்ஷ்மி பர்னிச்சர் மார்ட், தஞ்சை ○ ஏ. ராஜமாணிக்கம். அவிநாசி ரோடு. கோயமுத்தூர்

# வாழ்வுக்கு ஒரு வழித்துணை

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

சில வருஷங்களுக்கு முன் நான் கும்பகோணத்துக்கு வடமேற்கே பதினான்கு மைல் தொலைவில் உள்ள திருப்பனந்தாளுக்குச் சென்றிருந்தேன். என்னுடன் இலக்கிய நண்பர் ஒருவரும் வந்திருந்தார். அவருக்குக் கோயில் குளம், மூர்த்தி தலம் என்பதில் எல்லாம் நம்பிக்கை இல்லை. என்றாலும் என்னுடன் வந்தால் தமிழ் நாட்டின் கலை அழகைக் காணக்கூடும் என்ற நம்பிக்கை. இருவரும் அங்குள்ள தாடகேச்சரம் என்ற கோயிலுக்குச் சென்றோம். அங்குள்ள சடையப்பர் சந்நிதிக்கே வந்தோம். சந்நிதியில் வணங்கி எழுந்ததும் 'இத்தலத்தைப் பற்றி இரண்டு கதை இருக்கிறது தெரியுமா?' என்றேன். 'என்ன சொல்லுங்கள்' என்றார்.

தாடகை என்று ஒரு பெண் (இராமாயணத்தில் வரும் தாடகை அல்ல) நல்ல சிவநேசச் செல்வி. அவள் இந்தத் தலத்தில் இறைவழிபாட்டுக்கு உரிய புஷ்பக் கைங்கர்யம் செய்து வருகிறாள். ஒரு நாள் கட்டிய மாலையோடு இறைவனை அணுகும்போது மேலாக்கு நழுவியிருக்கிறது. அதைச் சரிசெய்ய மாலையையே கீழே வைக்க வேண்டியிருக்கும். இந்த நிலையில் தவித்துக் கொண்டிருக்கிறாள் அவள். அப்போது இறைவனே அவளது இக்கட்டான நிலையை உணர்ந்து தம் தலையையே சாய்த்து மாலையை ஏற்றிருக்கிறார். அன்று சாய்த்தவர் தலையை நிமிர்க்கவில்லை. இதனால் ஏதாவது உத்பாதம் விளையுமோ என எண்ணி, அந்த நாட்டு அரசன் சாய்ந்த தலையை நிமிர்த்தும் பணியில் ஈடுபட்டிருக்கிறான். யானை சேனையெல்லாம் கொண்டு கயிறு கட்டி இழுத்துப் பார்த்திருக்கிறான். இறைவன் அசையவில்லை. தாடகை என்ற பெண் மகளின் அன்புக்காகத் தலை சாய்த்த தலைவன் மற்றொரு ஆண்மகனின் அன்புக்காகக் காத்திருக்கிறான். அப்போது திருக்கடவூரிலே, கலையர் என்று ஓர் அன்பர். குங்கிலிய தூபம் போட்டுவந்த காரணமாகக் குங்கிலியக் கலையர் என்ற பெயரோடு வாழ்கிறார். அவர் ஒரு நாள் திருப்பனந்தாளுக்கு வருகிறார். தலை வளைந்து நிற்கும் இறைவனைக் காணுகிறார். பின்னர் கயிறு ஒன்றைத் தன் கழுத்தில் கட்டி, அதை இறைவனது லிங்கத் திருவுருவில் மாட்டி இழுக்கிறார். யானைக்கும் சேனைக்கும் அசைந்து கொடாத இறைவன் கலயரது அன்புக்குக் கட்டுப்பட்டு நிமிர்ந்து வருகிறார். மாலை சாத்தும் தாடகை மானங் காப்பான் தாழ்ந்த சடையப்பன் கச்சிட்டு ஈர்க்கும் கலையன் அன்பில் நிமிர்ந்திருக்கிறான்' என்றேன்.



மரகதவல்லி

அவர் இலேசாகச் சிரித்துவிட்டு, 'என்ன சார்! கதை அளக்கிறீர்கள். பிரதிஷ்டை செய்த போதிருந்த திருக்கோலத்தோடு ஆடாது அசையாது இருக்கும் இந்த லிங்கத் திருவுரு சாய்ந்ததற்கு ஒரு கதை, நிமிர்ந்ததற்கு ஒரு கதை. எல்லாம் உங்கள் கற்பனையோ?' என்றார். 'கற்பனையாகவே இருந்தாலும் அது என்னுடைய கற்பனை அல்ல; நம் முன்னோர்கள் கற்பித்த கற்பனையே. கற்பனையே யானாலும், மக்கள் அன்புக்கு இறைவன் எவ்வளவு கட்டுப்பட்டவன் என்பதை விளக்க எழுந்த கதை என்று விரித்துரைக்கவாவது நாம் தெரிந்து கொள்ளலாம் அல்லவா?' என்றேன். பின்னும் சொன்னேன்: 'உம்மைப் போன்றவர்கள், குனிந்ததையும் நிமிர்ந்ததையும் திருப்பனந்தான் மூர்த்தியைக் கண்டு நம்ப மாட்டார்கள் என்று தெரிந்தே, இன்னொரு தலத்தில் குனிந்தவர் தலையை நிமிர்த்தாமலேயே இன்னும் நின்று கொண்டிருக்கிறாரே!' என்று விளக்கினேன். அப்படித் தலை சாய்த்த தலைவராம் மார்க்க சகாயர் இருக்கும் தலம்தான் விரிஞ்சிபுரம். வட ஆற்காடு மாவட்டத்திலே வேலூருக்கு மேற்கே எட்டு மைல் தொலைவில் உள்ள ஊர். அந்த ஸ்தலத்துக்கே இன்று செல்கிறோம் நாம்.

இங்கு இறைவன் முடி சாய்த்ததற்கு ஒரு அழகான கதை. பிரம்மாவுக்கும் விஷ்ணுவுக்கும் ஒரு போட்டி தங்களில் யார் பெரியவர் என்று. இவர் தம் சிறுமையை உணர்த்த விரும்பிய சிவபெருமான் 'பொங்கழல் உருவனாக' அண்ணாமலையில் நிற்கிறான். இந்த அண்ணாமலையார் திருவுருவின் அடியையோ முடியையோ யார் முதலில் கண்டறிந்து வந்து சொல்கிறார்களோ அவர்களே பெரியவர் என்று தீர்மானிக்

கலாம் என்று திட்டமிட்டுக் கொள்கிறார்கள். வராகஉருவில் அதளபாதாளங்களை யெல்லாம் குடைந்து சென்று இறைவனது அடியைக் காணுமலேயே திரும்பி விடுகிறார் விஷ்ணு. அன்ன உருவில் வானுலகில் பறந்து சென்று முடி காணச் சென்ற பிரமனுக்கும் அதே நிலை தான். என்றாலும் பிரமன் தன் தோல்வியை ஒப்புக்கொள்ளாமல், தான் இறைவன் முடியைக் கண்டுவிட்டதாகவும். அதற்குஇறைவன் முடியில் உள்ள தாழம்பூவே சாக்ஷி என்றும் கூறுகிறார். பொய் சொல்லிய பிரமனைப் பூவுலகில் மனிதனுகப் பிறக்கும்படி சபிக்கிறார் இறைவன். அந்த விரிஞ்சனே இந்த விரிஞ்சிபுரத்தில் சம்பு சருமர் என்ற கோயில் அர்ச்சகருக்கும் நயனநந்தினி என்பவருக்கும் மகனுய்ப் பிறக்கிறான். **சிவசருமன்** என்ற பெயரோடு வளர்கிறான். சிவசருமனுக்கு ஐந்து வயது நிறையுமுன்பே சம்புசருமன் இறைவன் திருவடி சேர்கிறான். கோயிலில் பூஜை செய்யும் உரிமையைக் கைப்பற்ற தாயாதிகள் விரைகின்றனர், சிவசருமன் சிறுவன் என்ற காரணத்தால். ஆனால் இறைவன் அளப்பரிய கருணை உடையவன் ஆயிற்றே. வழித்துணை நாதனை அவன் வழி காட்டாமல் கை விடுவானு?

கார்த்திகை மாதம் கடைசிச் சனிக்கிழமை இரவு சிவசருமன் தாயின் கனவில் தோன்றி மறுநாட் காலையில், சிவசருமனைக் கோயிலுக்கு அனுப்பி வைக்கச் சொல்கிறான் இறைவன். கட்டளை இட்டபடியே சிவசருமன் கோயிலுக்குச் செல்கிறான். விருத்த வேதிய வடிவில் சிவபெருமானே வந்து சிவசருமனுக்கு உபநயனம் எல்லாம் செய்து வைக்கிறார். பின்னர் கோயிலுள் நுழைந்து பூஜா கைங்கர்யங்களை யெல்லாம் தவறுகள் செய்யாமலேயே நிறைவேற்றுகிறான். கடைசியில் இறைவனுக்கு அபிஷேகம் செய்ய மங்கள கலசத்தையே தன் கைகளில் எடுக்கிறான். நீண்டு உயர்ந்திருந்த லிங்கத் திருவுருவின் முடி பாலகனை சிவசருமனுக்கு எட்டவில்லை. 'என்ன சோதனை அன்றுதான் உன் திருமுடியைக் காணவில்லை. இன்றும் எனக்கு எட்டவில்லையே' என்று கதறுகிறான் பழைய விரிஞ்சனை புதிய சிவசருமன். அவ்வளவில் அன்பினுல் கட்டுண்ட இறைவன் அவன் தனக்கு அபிஷேகம் செய்யத் தன் தலையையே வளைத்துக் கொடுக்கிறான். அவனது அபிஷேகம் ஏற்ற பின்னும் தலையை நிமிர்த்தாமலேயே நின்று விடுகிறான். ஏன்? இன்றுமே அப்படித்தான் நின்று கொண்டிருக்கிறான்.

இந்த அற்புத நிகழ்ச்சியை நினைத்துத்தான், இன்றும் **கார்த்திகைக் கடைசி ஞாயிறு** உற்சவம் இக்கோயிலில் சிறப்பாக நடக்கிறது. பல அற்புதங்களும் நிகழ்கிறது. இந்த வட்டாரத்தில் உள்ளவர்கள், முக்கியமாகப் பிள்ளைப் பேறு கிட்டாதவர்களும், பில்லி சூன்யம், தீக்காற்று முதலியவைகளால் துயர் உறுகிறவர்கள் எல்லாம் பிரார்த்தனை செய்து கொள்கிறார்கள். அப்படிப் பிரார்த்தித்துக் கொள்கிற பெண்கள் ஒவ்வொரு கார்த்திகை மாதமும் கடைசிச் சனிக்கிழமை இரவு இக்கோயிலுக்கு வந்து **சிம்மக் குளத்தில்** முழுகி எழுந்து, நனைந்த உடையோடேயே அங்குள்ள மண்டபங்களில் குப்புறப்படுத்துக் கொள்கிறார்கள். தூங்கியும் போய் விடுகிறார்கள். அப்போது விருத்த வேதியராக ஒருவர் வந்து புஷ்பம், பழம், பாலடை எல்லாம் கொடுப்பதாகக் கனவு கண்டால், அடுத்த ஆண்டுக்குள்ளேயே எண்ணிய எண்ணியாங்கு எய்துகின்றார்கள். தூக்கம் வராமலோ, கனவு காணுமலோ இருப்பவர்களுக்கு இறைவன் அருள் இல்லை என்று தெளிகிறார்கள். அதற்காக அடுத்த வருஷமும் வருகிறார்கள். நோன்பு இருக்கிறார்கள். சிம்மக் குளத்தில் முழுகுகிறார்கள் விழுந்து வணங்கி அருள் பெறுகிறார்கள்.



சிம்மக்குளம்

சென்ற வருஷம் கார்த்திகைக் கடை ஞாயிறு அன்று நான் கோயிலுக்குச் சென்றிருந்தேன். அன்று இப்படிப் பிரார்த்தனை செய்த பெண்கள் இரண்டாயிரம் பேருக்குக் குறைவில்லை என்று கண்டேன். 'என்ன? எண்ணிப் பார்த்தீரோ?' என்று கேளாதீர்கள். சிம்மக் குளத்தில் முழுகி எழுவதற்கு உரிய சீட்டு நபர் ஒன்று எட்டணு கட்டணம் கட்டித்தான் பெறவேண்டும். இந்தச் சீட்டு விற்பனை உரிமையைக் குத்தகைக்கு விட்டிருக்கிறார்கள். அந்த வருஷத்துக் குத்தகைப் பணம் ரூபாய் ஆயிரம். விசாரித்ததில் குத்தகைக்காரருக்கு நஷ்டமில்லையாம். இப்போது என் கணக்கும் சரிதானே. இன்னும் சந்தேகம் உள்ளவர்கள் அடுத்த கார்த்திகைக் கடைஞாயிறு விழாவுக்கே சென்று பார்த்து விடலாமே.

இந்த விரிஞ்சிபுரத்திலே கோயில் கொண்டிருப்பவர் **மார்க்க சகாயரும்—மரகதவல்லியும். வழித்துணை நாதர், பச்சைப் பசுங்கொடி** என்ற நல்ல தமிழ்ப் பெயரைத்தான் மார்க்க

சகாயா — மரகதவல்லி என்று நீட்டி முழக்கிச் சொல்கிறார்கள். இந்தத் தலத்து இறைவன் குடகு நாட்டிலே இருந்து தொண்டை நாட்டுக்கு மிளகு விற்க வந்த **சிவநேசன்** என்னும் வியாபாரிக்கு வழித் துணையாக வந்து, வழிப்பறி செய்ய வந்த திருடர்களை யெல்லாம் விரட்டி அடித்தார் என்பது புராண வரலாறு. வழித்துணை என்ற பெயர்தான் எவ்வளவு அழகான பெயர். மக்கள் செல்லும் நெறியில் எல்லாம் வழித்துணையாக இறைவன் வருகிறான். செல்லும் வழியிலுள்ள காமம், குரோதம், லோபம் முதலிய திருடர்களை யெல்லாம் வெல்லுவதற்குத் துணைபுரிகிறான் என்று கற்பித்து இறைவனை வணங்குவதிலேதான் எத்தனை இன்பம். 'பயந்த தனி வழிக்குத் துணை, முருகனது வடிவேலும், செங்கோனது மயூரமுமே' என்று அருணகிரியார் தெரியாமலா பாடுகிறார்.



விரிஞ்சன், மார்க்கசகாயர்-மரகதவல்லி

இந்த வழித்துணை நாதர் பாலாற்றின் தென் கரையில் உள்ள சிறிய ஊரில் இருக்கிறார். இந்தச் சிறிய ஊரில்தான் மார்க்க சகாயரின் பெரிய கோயில் இருக்கிறது. நதி, தலம், மூர்த்தி, கிரி, காடு முதலிய அமைப்புகளோடும் நாளும் ஞாயிறு வழிபட நிற்கும் காரணத்தால் **பாஸ்கரத்தலம்** எனவும், பூகைலாய மெனவும் ஸ்தல புராணத்தில் கூறப்படுகிறது. சதுரங்க, பஞ்சாக்கர கோண அமைப்புடைய மாடவீதிகள், அஷ்டதிக்கு மண்டபங்கள் எல்லாம் நிறைந்து கோயில் உருவத்தில் இருக்கிறது. கோயிலில் உள்ள கல்வெட்டுகளால் 1239 ம் ஆண்டில் இரண்டாம் குலோத்துங்கன் பிரதிநிதியாய் இவ்வட்டாரத்தில் ஆண்ட ராஜராஜ சாம்புவராயரால் கோயில் கட்டி முடிக்கப் பட்டிருக்க வேண்டும் என்று தெரிகிறது. பின்னர் விஜய நகர சாம்ராஜ்யத்தை உருவாக்கிய கிருஷ்ண தேவராயரால், ராஜகோபுரம் கட்டப்பட்டிருக்கிறது. 1523ல், இந்த நாயக்க மன்னர்கள் மரபில் வந்த சின்ன பொம்மன் என்ற லிங்கப்ப நாயக்கரால், இக்கோயில் செப்பனிடப் பட்டிருக்கிறது. இக்கோயிலின் மதில் அழகாக அமைந்திருக்கிறது. 'திருவாரூர்த் தேரழகு, திருவிரிஞ்சை மதில் அழகு' என்பது பழமொழி. மதிலில் ஒரு வரிசை நல்ல சிற்ப வடிவங்கள் அமைந்துள்ளன. மலைநாட்டு வணிகராய் சிவசருமன் பொதி மாடுகளுடன் செல்லும் காட்சி ராமர் வாலியை மறைந்து நின்று அம்பெய்து வீழ்த்தும் நிலை யெல்லாம் சிற்பிகளால் உருவாக்கப் பெற்றிருக்கின்றன. ராஜ கோபுரத்தைக் கடந்து கோயிலுள் நுழைந்தால் முன்னால் சொல்லிய சிம்மக்குளம் வந்து சேருவோம். சிம்ம உருவில் வாயில் அமைத்துக் கட்டப்பட்டிருப்பதால் சிம்மக்குளம், சிம்ம தீர்த்தம் எனப் பெயர் பெற்றிருக்கிறது. இதனை அடுத்துள்ள மண்டபத்தைக் கடந்துதான் உள் பிரகாரம் செல்ல வேணும். அதையும் கடந்துதான் அர்த்த மண்டபம், கர்ப்பக்கிருஹம் எல்லாம். கோயில் பிராகாரத்திலே இரண்டு பிரசித்திபெற்ற மண்டபங்கள், தென் பகுதியில் கல்யாண மண்டபம். வட பக்கத்தில் வசந்த மண்டபம்.. இரண்டு மண்டபங்களிலும் உள்ள தூண்களில் எண்ணிறந்த சிற்ப வடிவங்கள். தசாவதாரக் காட்சிகள். சிவபெருமானது பல மூர்த்தங்கள். பஞ்சமுக விநாயகர் முதலிய எண்ணற்ற 'வடிவங்களைக் கண்டு மகிழலாம். இந்த மண்டபங்களிலே வேலூர் ஜலகண்டேசுவரர் கோயில் கல்யாண மண்டபம் கட்டிய சின்னபொம்ம நாயக்கன்— பெரிய பொம்ம நாயக்கன் என்பவர்களே இம் மண்டபங்களையும் கட்டி யிருக்கவேண்டும்.

இக்கோயிலுக்கும் பக்தி சிரத்தை உள்ளவர்கள் கடை ஞாயிறு காலையிலேயே சென்று வந்தித்து வணங்கலாம். இல்லை 'கூட்டம் என்றாலே எனக்குப் பிடிக்காது என்று சொல்லுபவர்கள் என்றைக்காவது வசதியான ஒருநாளில் சென்று காணலாம். கோயில், கோபுரம், சிம்மக்குளம், தலை தாழ்த்திய மார்க்கசகாயர் மரகதவல்லி முதலியோரைக் கண்டு வணங்கலாம். செப்புச் சிலை வடிவில் இருக்கும் **மரகதவல்லி** உண்மையாகவே அழகு கொஞ்சும் பச்சைப் பசுங்கொடி. ஞாயிறு காலை கோயிலுக்குச் சென்று,

முளைத்தவரை முளை இடத்தில்
முழுத்தவரை, மகிழ்ந்தவரை
முருகன் வேலால்
துளைத்தவரை, என எனது
பழவினையை அலைத்தவரை,
கடர்க் குன்றுகக்
கிளைத்தவரை, வளைத்தவரை
ஒரு சிறுவன் கிளையோடு
களரச் சென்னி
வளைத்தவரை, வணிகனுக்கு
வழித்துணையாய் நடந்தவரை
வழுத்துவோமே.

என்று பாடி மகிழலாம்.

## 95

**அமர்அகத்து வன்கண்ணர்
போலத் தமர்அகத்தும்
ஆற்றுவார் மேற்றே பொறை.**

யுத்தத்தில் வெற்றிகரமாகப் போரை நடத்தும் பொறுப்பு, வீரர்கள்மேல் நிற்கிறது. அதைப் போலவே ஒரு சமுதாயத்தைச் சேர்ந்த மக்கள் பலருள் சமுதாயத்தின் பாரத்தைத் தாங்கி நடத்தும் ஆற்றல் கொண்ட சிலர் மேல் அந்தப் பொறுப்பு நிற்கிறது. வீரர்களின் வீரமே அவர்கள்மேல் போரின் பொறுப்பை ஏற்றுகிறது. சமுதாய நிர்வாகத்தின் பொறுப்பும் அதைத் தாங்க வல்லார்மேல் நிற்கும். ஆற்றலுடன் பொறுப்பும் வந்து சேருகிறது. சமுதாயத்தின் காரியங்களைத் தைரியமாகவும் தளர்ச்சியில்லாமலும் செய்து நிறைவேற்றுவது, ஆற்றல் பெற்றவர்களின் கடமை.

* * *

**குடிசெய்வார்க்(கு) இல்லை
பருவம் மடிசெய்து
மானம் கருதக் கெடும்**

ஒரு காரியத்தைச் செய்து தீர்க்க வேண்டியதாயின் இதற்கு இது நல்ல பருவம் அல்ல, இதனால் தன் கௌரவத்துக்கு ஒரு நஷ்டம் ஏற்பட்டாலும் ஏற்படும் என்றெல்லாம் யோசித்துக் காலவிரயம் செய்யலாகாது. செய்தால் சமுதாயத்துக்குச் செய்யவேண்டிய சேவை கெட்டுப் போகும். இதை மற்றவர் செய்ய வேண்டும், தான் செய்வது தகாது என்று தன் சுயமரியாதையைக் காக்கப் பார்ப்பதும், தாமதித்துச் செய்யலாமே அப்போது இவ்வளவு கஷ்டம் இருக்காது என்றெல்லாம் எண்ணி ஒத்திப் போடுவதும், பொது நன்மைக்குக் கேடு விளைக்கும். சமுதாய சேவையில் தமது கடமையை உணர்ந்தவர்கள் இவ்வாறு செய்ய மாட்டார்கள்.

* * *

குடும்பம் அல்லது சமுதாயத்தில் இருக்கும் குற்றம் குறைகளைத் தீர்த்துச் சீர்திருத்தம் செய்யத் தீர்மானித்தவர்கள் எல்லையற்ற கஷ்டங்கள் அனுபவிக்கத் தயாராக இருக்க வேண்டும். துன்பத்துக்குக் கொள்கலமாகவே தன் உடலை அர்ப்பணம் செய்ய ஆயத்தமாக இருக்க வேண்டும்.

**இடும்பைக்கே கொள்கலம்
கொல்லோ குடும்பத்தைக்
குற்றம் மறைப்பான் உடம்பு.**

குற்றம் மறைப்பான் உடம்பு— குற்றத்தை விலக்கிச் சீர்திருத்தம் செய்வதற்காகப் பெற்ற உடல் சமுதாயத்தில் அல்லது குடும்பத்தில் உள்ள குற்றங்களை எடுத்துத் தன் உடம்பாகிய பாத்திரத்தில் போட்டு மூடிவிட வேண்டும்.

துன்பத்தை அனுபவித்தே சமுதாயச் சீர்திருத்தத்தில் இறங்கி வேலை செய்பவர்கள் வெற்றி பெற முடியும். பொதுஜன சேவைக்குக் கூலி துன்பம் தான். அதாவது துன்பங்கள் பொறுத்தே ஒரு குலத்தைத் திருத்த முடியும். இது நாம் கண்ணால் பார்த்து நேரில் அனுபவிக்கும் உண்மை. மூற்காலத்திலும் இப்படித்தான் இருந்தது என்பது குறளாசிரியர் சொல்லினின்று தெரிகிறது.

* * *

**இடுக்கண்கால் கொன்றிட
வீழும் அடுத்தூன்றும்
நல்ஆள் இலாத குடி.**

சமுதாயத்துக்கு ஆபத்தும் கஷ்டமும் நேரிட்ட காலத்தில் தைரியமாக முன்வந்து செய்ய வேண்டிய சேவையை ஆற்றலும் பெருந்தன்மையும் கொண்டு செய்யக் கூடியவர்கள் இல்லையாயின் அந்தச் சமுதாயம் அழிந்து போகும்.

வெட்டப்பட்ட மரம் தாக்கு கொடுக்காமற் போனால் விழுந்து போவது போல் சமுதாயத்துக்குத் துன்பம் வந்தபோது, தைரியமும் ஆற்றலும் கொண்டு சேவை செய்யக் கூடிய வீரர்கள் நின்று தாங்காமற்போனால் அந்தச் சமுதாயம் அழிந்து விழும்.

இடும்பையைக் கோடாலி யாக்கி, சமுதாயத்துக்குச் சேவை செய்யும் தீரர்களைத் தாக்குமரமாக்கி உவமை அமைந்திருக்கிறது. துன்பம் தோன்றியவுடனே குடி ஓம்புவார் இல்லாக்கால் அந்தக் குடி கெடும்.

அவள் எவ்வளவு அழகாயிருக்கிறாள்...

அவள் உபயோகிப்பது **பாண்ட்ஸ்**

நீங்களும் சருமத்தை மிருதுவாகவும், வழவழப்பாகவும், அழகாகவும் வைத்துக் கொள்ள **பாண்ட்ஸ்** வானிஷிங் க்ரீம் உபயோகியுங்கள்




இலேசானதும் பனிக்கட்டிபோல் மென்மையானதுமான பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உங்கள் சருமத்தின் மென்மையான அழகைப் பாதுகாத்து, அதை எழிலுடனும், பொலிவுடனும் இருக்கச் செய்யும். எண்ணெய்ப் பசையில்லாத இந்த க்ரீம் தேய்த்துக்கொண்ட மறு விநாடியிலேயே மறைந்துவிடுகிறது. பவுடர் போட்டுக் கொள்வதற்கு முன் இந்தக்ரீமை தடவிக்கொண்டால் பவுடர் மணிக்கணக்கில் படிந்திருக்கும்.

**சருமத்தை சுத்திகரிக்கும் சிறந்த க்ரீம்**
தினமும் இரவில் பாண்ட்ஸ் கோல்டு க்ரீமை முகத்தில் தடவுங்கள். அது உங்கள் மிருதுவான சருமத்தை சுத்தம்செய்து முக அழகைப் பாதுகாக்கும்

செஸ்ப்ரோ பாண்ட்ஸ் இன்கார்ப்பரேட்டட் (வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பெற்றது)

பாகவதமாகிய

# பக்தி வயல்

பௌராணிகர்

## 50. ருக்மிணியின் கடிதம்

"ஆனர்த்த தேசத்து அரசனுன ரைவதன் தன் புதல்வி ரேவதியைப் பலராமனுக்கு மணம் செய்து கொடுத்தான். கோவிந்தனும் சிசுபாலன் காலவன் முதலிய வேற்று மன்னர் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பீஷ்மகனுடைய மகளும் லக்ஷ்மிதேவியின் அவதாரமுமான ருக்மிணியை சுயம்வரத்தில் மணந்து கொண்டான்" என்று சுகர் பரீக்ஷித்து மன்னனிடம் கூறினார். "கண்ணன் ருக்மிணியை அரக்க முறையில் மணந்தான் என்றல்லவோ கேட்டிருக்கிறேன். நடந்ததைச் சரிவரக் கேட்க விரும்புகிறேன். கண்ணனுடைய கதை கேட்கக் கேட்க ஆச்சரியத்தை அளித்து அவாவை அதிகரிக்கிறதே யின்றிப் போதுமென்று தோன்றவே இல்லை" என்றான் பரீக்ஷித்து.

சுகர் பரீக்ஷித்துக்குக் கண்ணன் ருக்மிணியை மணம் செய்து கொண்ட சரிதையை எடுத்துரைக்கலானார்:

பீஷ்மகன் என்ற மகான் விதர்ப்ப தேசத்தை ஆண்டு வந்தார். அவருக்கு ஐந்து புதல்வர்களும் அழகு வாய்ந்த ஒரு புதல்வியும் பிறந்தனர். ருக்மி, ருக்மகேசரதன், ருக்மபாகு, ருக்மன், ருக்மமாலி என்பவை புதல்வருடைய பெயர்கள். பெண்ணுக்கு ருக்மிணி என்று பெயர்.

கண்ணனைக் குறித்தும் அரண்மனைக்கு வந்த பலபேரிடம் ருக்மிணி கேட்டிருந்தாள். உருவழகிலும், வீரியத்திலும், குணத்திலும், செல்வத்திலும் இணையற்றவனெனக் கேட்டுக் கண்ணனே தனக்கு இசைந்த மணாளன் என்று மனத்திலே எண்ணினள். கண்ணனும், புத்தியிலும், அழகிலும், குணத்திலும், சீலத்திலும் சிறந்தவளான ருக்மிணியை மணம் செய்து கொள்ள வேண்டும் என்று தீர்மானித்தார். ருக்மிணியின் தாய்தந்தையர் அவளைக் கண்ணனுக்கே விவாகம் செய்து கொடுக்க விரும்பினார்கள். ஆனால் அவளுடைய அண்ணன் ருக்மி, கண்ணனிடம் பகை கொண்டு, தன் தங்கையைச் சேதிநாட்டு அரசனான சிசுபாலனுக்கு மணம் செய்து கொடுக்க வேண்டும் என்று பிடிவாதம் செய்தான்.

தமையனின் மனப்போக்கைத்தெரிந்த கருவிழியாள் கலக்கம் கொண்டாள். ஆழ்ந்த யோசனை செய்து, தனக்கு ஆப்தனான ஒரு அந்தணனைக் கண்ணனிடம் தூது அனுப்பினள். அந்தணனும் விரைவிலே துவாரகையை அடைந்தான். அவரை வாயில் காப்போர் கண்ணனிடம் உடனே அழைத்துச் சென்றார்கள். பொன் சிங்காசனத்தில் வீற்றிருக்கும் பரம புருஷனை அந்தணர் கண்ணுற்றார். அவரைக் கண்டதுமே, கண்ணன் இறங்கி வந்து வரவேற்று உபசரித்தான். அவர் உணவருந்திக் களைப்பாறிய பிறகு கண்ணன் அவரிடம்



வந்த காரியத்தை வினவினன். "அந்தணரே! உமது தர்மம் தடையின்றித் தழைத்திருக்கிறதா? போதுமென்ற மனத்துடனிருக்கும் அந்தணனே உலகத்துக்குச் செழிப்பைத் தருவான். விருப்பம் மேலிட்டவனுக்கு விண்ணுலகும் போதாது. உமது தேசத்தில் அரசாட்சி குடிகளுக்கு நன்மையை நல்குகின்றதா? நாட்டைக் காக்கும் நல்லரசன் எனது பிரியத்துக்குப் பாத்திரமாகிறன். எக்காரணம் கொண்டு இங்கு வந்தீர்? எல்லாவற்றையும் என்னிடம் எடுத்துரைப்பீர். வேண்டியதை நான் செய்கிறேன்" என்றான். அந்தணனும் ருக்மிணி தன்னிடம் கூறியதைத் தெளிவாகத் தெரிவித்தான்.

ருக்மிணி கண்ணனை விரும்பிக் கூசாது மனம் துறந்து வாய்விட்டு வாவென்று அழைத்த ஏழு செய்யுட்களும் பாகவதத்தில் மிக்க மேன்மையானவை. அன்புருகிப் பாடிய பாடல்கள். கருத்தை மட்டும் கீழே குறிக்கிறோம்:—

1. மூவுலகில் முதலழகா! அச்சுதா! உமது குணங்கள் செவியுறுவோர் செவி வழியாய் உள்ளத்தின் உட்சென்று தாபத்தைத் தவிர்க்கின்றன. அதிசய அழகோ, கண்டவர் கண்ணுக்குச் செல்வமாகும். அச்சமின்றி ஆசைகொண்டுளேன்.

2. முத்தியளிக்கும் முகுந்தனே! நற்குலத்தில் பிறந்து, சித்தத்தில் தெளிவெய்தி, நற்குணங்கள் நிறைந்தவளாய் வாழ்ந்து வரும் கன்னிப் பெண் எவள் தான், குலத்திலும், சீலத்திலும், ரூபத்திலும், வித்தையிலும், வயதிலும் செல்வத்திலும் காந்தியிலும் தனக்குத் தகுந்த மணாளன் என்று உம்மை விரும்பி வரிக்காதிருப்பாள்?

3. ஆகவே, உம்மை நான் கணவனாய் வரித்தேன். உடலையும் மனத்தையும் உமதென்று தந்தேன். விரைந்து வந்தென்னைச் சொந்தமாய் ஏற்று அருள்வீர். தாமரைக் கண்ணா! முந்தியே வந்தென்னைச் சிசுபாலன் தீண்டுவதா? சிங்கத்தின் பலியை நரி அணுகுவதா?

4. கோயில் கட்டிக் குளம் வெட்டி, ஓமங்கள் பல செய்து, எளியோர்க்குப் பொன் கொடுத்து, புண்ணிய ஸ்நானாதி, விரதங்கள் மிக இருந்து, பக்தியுடன் பூஜைசெய்து நான் மாதவனை மகிழச் செய்தது உண்மையேல், கண்ணனே வந்தென்னை மாலையிடட்டும்; சிசுபாலன் முதலியோர் விலகட்டும்.

5. நாளை வதுவை மணமென்று நாளிட்டிருக்கிறார்கள். அங்கு நீர் வந்தருளி, சிசுபாலன் முதலியோர் சேனையைச் சிதறடித்து, வீரத்தைச் சுலபமாய்த் தந்தைக்குத் தந்துவிட்டு, என்னைப் பலாத்காரமாய் மணம் செய்து கொள்ள வேண்டும்.

6. இல்லை, சுற்றத்தாரிடம் போராடிக் கொல்வதிலே மனமில்லை என்றீரானால் அதற்குமோர் உபாயம் எடுத்துரைப்பேன். மணத்துக்கு முந்திய நாள் குல தெய்வமாகிய பார்வதியைத் தரிசிக்க நான் பரிவாரம் சூழப் பட்டணத்துக்கு வெளியில் இருக்கும் கோவிலுக்குச் செல்வேன். அச்சமயம் என்னைத் தூக்கிச் செல்வீர்.

7. செந்தாமரைக் கண்ணா! உமது தாளடித் தூளினை மூவரில் இருவரும் தேவரும் மெய்ஞ்ஞான அருளென்று காத்திருக்கின்றனர். அப்பெரும் அருளை நான் அடையாது போனால், விரதம் இருந்து மெய்மெலிந்து மாய்ந்து போவேன். பல தடவைகள் பிறந்தாகிலும் உம் திருவடியை அடைந்தே தீருவேன்.

யாதவத் தலைவா! இதுவே இரகசியமாய் ருக்மிணி என்னிடம் தந்த தூது. தாமதமின்றித் தகுந்ததைச் செய்வாய்" என்று அந்தணன் கூறினன்.

# தென்சிட்டு

## அத்தியாயம் 37

## தலைவலி

சுசீலா இன்பம் நிறைந்த தனிஉலகில் விடப்பட்டிருப்பவளைப் போல் நடந்து கொண்டாள். வண்ணச் சிறகுகள் முளைத்து வானத்து வீதிகளிலே பவனி செல்வது போன்ற மகிழ்ச்சியில் திளைத்தாள். துன்பமும் துயரமும் நிறைந்த இந்த உலகத்தில் இருப்பதாகவே அவளுக்குத் தோன்றவில்லை.

ஒரு நாளின் பெரும் பகுதியும் கண்ணபிரானுடன் உரையாடிக் கொண்டிருப்பதிலேயே கழிந்தது. இருவரும் இணை பிரியாமல் எங்கும் சேர்ந்துதான் போனார்கள்; சேர்ந்துதான் ரசித்தார்கள்; சேர்ந்துதான் சிரித்தார்கள். எதிலும் அவர்களுக்கு அலுப்போ, சலிப்போ உண்டாகவில்லை. இருவருடைய கருத்தும் ருசியும் பல விஷயங்களில் ஒன்று போலவே இருந்தன.

கண்ணபிரான் அருகில்இருந்தபோதும், அருகில் இல்லாத போதும் அவளுடைய கோமளமான உள்ளத்தில் ஒருவிதமான பரபரப்பு ஊர்ந்துகொண்டே யிருந்தது. இரவிலும் பகலிலும் எந்த வேளையிலும் அவள் அவன் நினைவாகவே இருந்தாள். ஆசை பொங்கி வழியும் அவனுடைய செவ்வரி விழிகள் தன்னையும் தன்னுடைய செய்கைகளையும் எப்போதும் மறைமுகமாகக் கவனித்துக் கொண்டிருப்பதைப் போன்ற கற்பனையில் அவள் ஆழ்ந்திருந்தாள். அது உள்ளத்துக்கு உவப்பைக் கொடுத்தது. வேறு சில வேளைகளில் வெட்கத்தைக் கொடுத்தது. கற்பனையிலேயே அவள் பிணங்கினாள்; ஊடினாள்; இணங்கினாள்; மறுத்தாள்; தடுத்தாள்; வெகுண்டாள். ஒருபொழுதில் அவனோடு பேசியவை யெல்லாம் மற்றொரு பொழுதில் நினைவில் வந்து நின்று இனித்தன. அந்த இனிப்பின் சுவை நெடு நேரம்வரையிலும் நெஞ்சை விட்டு நீங்காமலே நின்றது.

இந்தச் சில ஆண்டுகளில் கண்ணபிரான் உருவத்திலும் உள்ளப் பாங்கிலும் எவ்வளவோ மாறி யிருப்பதாகத் தான் அவளுக்குத் தோன்றியது. அவனுடைய அன்பிலே கூட அவள் அந்த மாறுதலைத் தெளிவாகக் கண்டாள். ஆம்; அது மேலும் பன்மடங்கு விரிந்து, பலவிதத்திலும் கவர்ச்சியைக் கொண்டிருந்தது. அன்பின் நயமான குறிப்புக்களை மிக மிக நுட்பமாக உணர்த்தும் பக்குவம் அவனுக்கு நன்றாக உண்டாகி யிருந்தது.

முன் தடவை பார்த்ததைவிட அவன் இப்போது சற்று மெலிந்து காணப்பட்டான். ஆனால் சற்று உயர்ந்திருப்பதனால் அப்படித் தோன்றுகிறதோ? இந்தத் தடவை அவன் இன்னும் சிறிது அழகாகச் சிவந்து போயிருப்பது போல் அவனுடைய முகத்திலிருந்து தெரிந்தது. ஆனால் பல வருஷங்களின் இடைவெளி இப்படிஅவள் கண்களை ஏமாற்றுகிறதோ? இளமையின் செழிப்பும், மினுமினுப்பும் முன்பு இல்லாமலா இருந்தன? எப்படி யிருந்தாலும் முன்பு எந்த அம்சமெல்லாம் அவள் உள்ளத்தைக் கவர்ந்தனவோ, அதெல்லாம் இன்று புது மலர்ச்சி பெற்று விளங்குவதாக அவளுக்குத் தோன்றின.

அப்போது அவன் முகத்தில் இள மீசை அரும்பு கட்டி யிருந்தது. ஆனால் இன்று அது பாத்தி வெட்டியது போல் ஒழுங்கு செய்யப்பட்டிருந்தது. இதைப் பார்த்து விட்டு அவள் குறும்புக்காக, "இந்த மீசை எதற்கு?" என்றாள்.

"அழகுக்குத்தான்!" என்றான் அவன்.

"இது இல்லாமலே நீங்கள் அழகாகத் தான் இருப்பீர்கள்!"

"உனக்கு அப்படித் தோன்றுகிறது. ஆனால் எல்லாருக்கும் அப்படித் தோன்ற வேண்டுமே!"

அவன் இதைச் சொன்னதும், சுசீலாவின் முகம் சிவந்து முருகியது. சிக்கி முக்கிக் கல்லைத் தட்டியது போல் சட்டென்று சிறு பொறி ஒன்று தோன்றி, அவள் உள்ளத்தைத் தீண்டிச் சென்றது. நாட்டிய அரங்கில் அனைவரது கருத்தையும் கவர்ந்த உஷாவின்



எழில் வடிவமே அவளுடைய அகக் கண் முன்னால் வந்து நின்றது. இதயத்துக்குள்ளாகவே அவள் தன்னையும் உஷாவையும் ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டாள். பொறுமை மெல்லக் கனிந்தது. 'அந்த உஷாவின் கண்களுக்கு அழகாகத் தோன்ற வேண்டும் என்று இவர் எண்ணிக் கொண்டிருக்கிறாரோ?' என்று அவள் நெஞ்சு பொருமியது.

பொறுமையின் இந்தச் சிறிய பொறி அவளைத் தீண்டிய பிறகுதான் பாரிஸ்டர் வரும் போதெல்லாம் கண்ணபிரான் தன்னை அவர் எதிரே வரவொட்டாமல் தவிர்ப்பது அவளுக்குப் புரிந்தது. அவர் வருவதை மட்டும் முன்னறிந்து கூற அவன் ஏற்பாடு செய்திருந்ததும் நினைவுக்கு வந்தது.

"ஷீலா! அந்தப் பாரிஸ்டர் வந்திருக்கிறாராம். நான் போய்ப் பார்த்து விட்டு வந்து விடுகிறேன். நீ இங்கேயே இரு. அவருக்கு நீ இங்கே வருவதும் போவதும் எதற்காகத் தெரிய வேண்டும்? என்னுடைய பெரியப்பாவுக்கு விபரீதமாக எதையாவது எழுதி நம்முடைய காரியத்தை யெல்லாம் வீணாக்கி விடுவார். கொஞ்ச நாளைக்கு இப்படி நடந்து கொள்வதுதான் நமக்கு நல்லது!" என்று அவன் சுசீலாவிடம் எச்சரிக்கை செய்து வைத்திருந்தான். அவளுக்கும் அது சரியாகவே பட்டது. ஆனால் இப்போதுதான் அதற்கெல்லாம் ஒரு புதிய பொருள் இருப்பதாக அவளுக்குத் தோன்றியது.

சுசீலாவின் முக மாறுதலைக் கண்ட கண்ணபிரான் அவள் நெஞ்சிலே பாய்ந்த எண்ணங்களை ஒருவாறு ஊகித்துக் கொண்டவனாய் மெதுவாகச் சிரித்து, "அதற்குள் உன் முகம் வாடி விட்டதே! பெண்களுக்குக் கோபத்தைப் போல் ஆண்களுக்கு மீசைதான் அழகு என்றே சொல்ல வருகிறேன். வேறு ஒன்றும் இல்லை!" என்றான்.

"எல்லாம் தெரியும். இதற்கு விளக்கமும் விரிவுரையும் வேண்டியதில்லை" என்று சிணுங்கினாள் அவள்.

அவளுடைய அழகிய விழிகளில் அனலின் சாயல் பரவிவந்ததைக் கண்டு அவன் சிறிது தடுமாற்றம் அடைந்தான். மிக அருகில்இருந்தும் வெகுதொலைவில் இருப்பவளைப் போல் இன்னமும் நடந்து கொண்டு வந்த அவளிடம் அவனுக்கு இதுவரையிலும் தோல்விதான் கிடைத்து வந்திருக்கிறது. ஆனால் அதற்காக அவன் பின் வாங்கிவிடவில்லை. வெற்றியின் படிகளைப் போலவே தோல்வியின் படிகளும் சுற்றிச் சுற்றிக் கொண்டுதான் போயின; பெண்களிடம் வெளிப்படையாகத் தோல்வி பெறுகிறவன் உள்ளூற வெற்றியின் படிகளில் முன்னேறுகிறான். ஆகவே லட்சியத்தை எட்டுவது எளிதாகி விடுகிறது. ஒவ்வொரு தோல்வியின் போதும் அவன் படிப்படியாக முன்னேறி வருவதை உணர முடிந்தது. பெண்கள் நம்ப மறுத்துப் பிணங்குவது இணக்கத்தின் குறிப்புத்தானே? அன்றைக்கு எப்படியோ அவளைச் சமாதானப்படுத்தி விட்டான்.

தன்னைப் பாராட்டி உபசரித்துக் கௌரவித்த பாரிஸ்டர் குடும்பத்தாருக்குப் பதில் மரியாதையாக அவன் விருந்து ஒன்றுக்கு ஏற்பாடு செய்திருந்தான். அந்த விருந்துக்கு வேண்டுமென்றே சுசீலா வரவில்லை. முதல் தடவை கிடைத்த அநுபவங்களே அவள் கலந்து கொள்ள விரும்பாததற்கு முதல் காரணம். உஷாவின் உண்மையான மதிப்பையும் சிறப்பையும் அவ்வளவு நேருக்கு நேராகப் பார்க்கவும் அவள் விரும்பவில்லை. பொறுமை என்னும் இந்தச் சிறிய பொறி பெரிதாகப் பரவி, தன்னைச் சுட்டுப் பொசுக்கிவிடுமோ என்று அவள் அஞ்சினாள். கண்ணபிரானும் இவற்றை உணர்ந்தவன் போல் அவளை அதிகமாக வற்புறுத்தவில்லை. விருந்துக்கு வந்த பாரிஸ்டரின் கண்கள் அப்படியும் இப்படியும் அலைபாய்ந்து யாரையோ தேடுவதைக் கண்டு கண்ணபிரான் மனத்துக்குள் சிரித்துக் கொண்டான்.

"எங்கே தம்பி, அந்தப் பெண் இன்றைக்கு வரவில்லையோ?" என்று வாயை விட்டே கேட்டார் அவர்.

"இல்லை!" என்றான் அவன்.

"வந்திருப்பாள் என்று நினைத்தேன்."

"அப்படியா?"

"ஆமாம்."

"இது தெரிந்திருந்தால் அவளைக் கட்டாயம் அழைத்துவரச் சொல்லியிருப்பேனே! உங்களுடைய பெண்ணுக்குப் போன் செய்தபோதுதான் அவளுக்கும் போன் செய்தேன். ஆனால் இரண்டு பேருமே வரவில்லை! உங்களுடைய பெண்ணுக்கு உடம்பு சரியில்லை என்பதுபோல் அவளுக்கும் உடல் நலம் சரியாக இல்லையோ என்னவோ, தெரியவில்லை!" என்றான் கண்ணபிரான். இப்படி நேரும் என்று தெரிந்திருந்தால் சுசீலாவை அழைத்துவரச் சொல்லியிருக்கலாமே என்றுதான் அவனுக்குத் தோன்றியது.

உஷா வராததைச் சுட்டிக்காட்டியதுமே, பாரிஸ்டர் அந்தப் பேச்சை அத்துடன் நிறுத்திக் கொண்டுவிட்டார். அதிலிருந்தே உஷாவைப் பற்றி அவர் கூறியது எவ்வளவு தூரம் உண்மை

என்பது அவனுக்குச் சந்தேகமாக இருந்தது. உஷா தன்னை ஒரு பொருட்டாக எண்ணவில்லையோ என்று கூட அவனுக்குத் தோன்றியது. அவளைப் போலவே அவனும் இதை ஒரு பொருட்டாகக் கருதவில்லை. ஆனால் பாரிஸ்டரும் அவர் மனைவியும் கண்ணபிரானுடைய உறவு அநேகமாக முடிவாகிவிட்ட நிச்சயத்துடன் நடந்து கொள்வதாகவே தோன்றியது. ஒருகால் தனக்குத் தெரியாமல் தன் பெரியப்பா இவர்களுக்கு நம்பிக்கையூட்டும் விதமாக ஏதாவது எழுதியிருப்பாரோ என்றுகூட அவன் சந்தேகப்பட்டான். எப்படியிருந்தாலும் பாரிஸ்டர் அந்த எண்ணத்தோடு அடிக்கடி வருவதும் அக்கறையோடு ஒவ்வொன்றையும் விசாரிப்பதும் அவனுக்குச் சிறிது வெறுப்பையே தந்தது. பாரிஸ்டரைத் திருப்திப்படுத்துவதற்காக அவனுடைய பெரியப்பா அவர் கோரிக்

கைக்கு இணங்கினாலும் இணங்கிவிடக் கூடும். அப்படியானால் அவன் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும்? சுசிலாவுக்கு இதனால் மனக்கசப்பும் ஏமாற்றமும் நேர இடம் கொடுக்கலாமா? இதைப் பற்றி யோசிக்க அவன் விரும்பினான். முத்தையாவின் குணம் அவனுக்கு நன்றாகத் தெரியும். அவர் பழைய தலைமுறையைச்சேர்ந்தவர். பிள்ளைகளுடைய விருப்பத்தையும் நோக்கத்தையும் கேட்டுக் கொண்டு பெண்ணைத் தேர்ந்தெடுப்பதில் நம்பிக்கையில்லாதவர். அநுபவமற்ற இளைஞர்களின் ஆசைக்கு இணங்குவது ஆபத்தாக முடியும் என்ற எண்ணமுள்ளவர். பெரியவர்கள் பிள்ளைகளுக்கு ஆஸ்திபாஸ்திகளைத் தேடிவைப்பதைப் போல், குலவொழுக்கமும் குணமும் உள்ள பெண்களையும் தேடி வைப்பது அவர்களுடைய கடமை என்ற கொள்கையுடையவர் அவர். அவர் தன் விஷயத்தில் ஒரு முடிவுக்கு வருவதற்கு முன்பாக அவரை எப்படிச் சரிப்படுத்துவது? இந்த எண்ணமே அவனுக்கு விருந்து நடைபெறும்போது மேலோங்கி நின்றது.

விருந்து என்னவோ விமரிசையாகத் தான் நடைபெற்றது. ஆயினும் அவன் வரையில் அது சுவையற்றதாகத் தோன்றியது. விருந்தினர்கள் அனைவரும் விரைவில் விடைபெற்றுக் கலைந்து சென்றால் தேவலை என்றுகூட அவனுக்கு இருந்தது. ஆனால் அது சாத்தியமற்றதாகத் தோன்றியதால், நெற்றிப் பொட்டை இரு கைகளாலும் பிடித்துக்கொண்டு, "மன்னிக்க வேண்டும்; தலைவலி என்னவோ பொறுக்க முடியவில்லை. சிறிது நேரம் தனியே போய்ப் படுத்துக் கொண்டால் சரியாகி விடும்" என்று அவர்களிடம் கூறிவிட்டு, தன்னுடைய அறைக்குள்ளே சென்று கதவை இறுகத் தாளிட்டுக் கொண்டான்.

மாடிப் பூங்கா, நிலவொளி வீசும் மணி மண்டபம் போல் அழகுற விளங்கியது. விருந்துக்கு வந்திருந்தவர்களில் பலர் அங்கங்கே நின்று இன்னும் உரையாடிக் கொண்டுதான் இருந்தார்கள். தன்னுடைய அறைக்குள் சென்ற கண்ணபிரான் பின்புறப் படிக்கட்டுகள் வழியாகக் கீழே இறங்கி, தோட்டக்காரப் பழனியை அழைத்தான்.

"இதோ பார்! நான் வெளியே போவது யாருக்கும் தெரியக் கூடாது. நான் தலைவலியோடு படுத்திருப்பதாக எல்லாரும் எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். உன்னைக் கேட்டால் அப்படியே சொல்லிவிடு!" என்று சொல்லிவிட்டு, வண்டியைப் பின்புறமாகவே எடுத்து வரச் சொன்னான். வண்டி வந்ததும் அதில் ஏறிக்கொண்டு புறப்பட்டான்.

வண்டியை அனுப்பி விட்டுப் பழனி படியேற வந்தபோது எதிரே பாரிஸ்டர் வருவதைக் கண்டு திகைத்தான்.

"யார், தம்பியா வண்டியில் போகிறது?" என்று அவனைப் பார்த்துக் கேட்டார் அவர்.

பழனி சட்டென்று சமாளித்துக் கொண்டு, "அதுவா, டாக்டரை அழைத்துக்கொண்டு வரப்போகிறான் டிரைவர். புது எசமானுக்குத் தலைவலியாம்!" என்று கூறினான்.

பாரிஸ்டர் சிறிது தயங்கினார். "சரி, அப்படியானால் நான் டாக்டர் வந்ததும் அவரைப் பார்த்துவிட்டுப்போகிறேன்!" என்று அவ்வளவு தூரம் இறங்கி வந்தவர் மேலே திரும்பிச் சென்றார். திருடனுக்குத் தேள் கொட்டியதுபோல் விழித்துக்கொண்டு நின்றான் பழனி.

## அத்தியாயம் 38
## அந்த விழிகள்

காரின் குழல் சத்தம், "பாம், பாம்!" என்று கேட்டது. சுசிலா திடுக்கிட்டு எழுந்து கடிகாரத்தைப் பார்த்தாள். மணி பதினொன்று பத்து. இருட்டில் தூக்கம் பிடிக்காமல் புரண்டு புரண்டு படுத்துக் கொண்டிருந்த அவளுக்கு வந்திருப்பது யாருடைய வண்டி என்பது தெரிந்து விட்டது.

தேன் கூட்டில் நடக்கும் விருந்தையும் தன்னை வற்புறுத்தி அழைக்காத கண்ணபிரானையும் எண்ணி, விபரீதமான கற்பனைகளினால் கண் கலங்கியவாறு படுத்திருந்த அவள், அந்த அதிர்ச்சியிலிருந்து மீளச் சிறிது நேரம் பிடித்தது.

"பாம், பாம்—"

அவனுடைய அழைப்புக்கு விடையளிப்பதுபோல் வாசல் பக்கத்து விளக்கு பளிச்சென்று ஒளியை உமிழ்ந்தது. அடுத்த கணமே மெத்தை அறையிலிருந்து சுசிலா ஜன்னல் வழியாக எட்டிப் பார்ப்பது தெரிந்தது. இருளில் பூத்த சரக்கொன்றை மலரைப்போல் விளங்கிய அவள், வண்டியில் கண்ணபிரான் வந்திருப்பதை அறிந்து துள்ளி ஓடி மறைந்தாள். இன்பமும் துன்பமும் கலந்த ஒரு பரவச உணர்ச்சியில் அவளுக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. அந்த அறையில் குறுக்கும்



சுவை மிகுந்தது மற்றும்
ஆரோக்கியமானது!

ஜே. பி. மங்காராமின்

# இனர்ஜி புட்

பிஸ்கட்டுகள்

ஜே.பி. மங்காராம் & கோ.
குவாலியர் : இந்தியா



"வருங்கால சந்ததிகளை வளமுடன் காக்கிறது"

---

# 'அனஸின்'

## தலைவலி, ஜலதோஷம், ஜுரம் மற்றும் தசைவலிகளிலிருந்து

நிவாரணமளிப்பதில் **சிறந்தது**

ஏனெனில் அதில் **நான்கு மருந்துகள்** சேர்ந்துள்ளன.




வைத்திய விஞ்ஞானிகள், 'அனஸின்' என்பது வலியை அகற்றும் தீவிர சக்திவாய்ந்த அநேக மருந்துகளின் சரியான விகிதாச்சார கலவை என்று கூறுகிறார்கள். அது வேறெந்த ஒரே மருந்து கலவையைவிட அதிதுரிதமாயும், அபாயமின்றியும், நிச்சயமாயும் நிவாரணமளிக்கிறது என்று ஞாபகத்தில் வையுங்கள்! 'அனஸின்' ஒரு டாக்டரின் குறிப்பிற்கு ஒப்பான விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலவையாகும். ஆகவே 'அனஸின்', தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி மற்றும் தசைவலிகளிலிருந்து துரிதமாயும், முற்றிலும் குணமளிப்பதில் சிறந்தது. எப்பொழுதும் வீட்டில் 'அனஸின்' வைத்திருங்கள்.

GEOFFREY MANNERS & CO. PRIVATE LTD. REGISTERED USER

47 (R) TA

நடுக்குமாக ஓடினாள். கண்ணாடி முன்னால் போய் நின்று கண்ணீரில் நனைந்த கயல் விழிகளைத் துடைத்துக் கொண்டாள். கலைந்து கிடந்த தலையையும் ஆடைகளையும் சரி செய்துகொள்வதாக எண்ணிக்கொண்டு மேலும் கலைத்துக் கொண்டாள். அப்படியே அதே கோலத்தில் கீழ்த் தளத்துக்கு ஓடி வந்து கதவைத் திறந்துகொண்டு, தந்தப் பதுமையென அசையாது நின்றாள்.

கண்ணபிரான் இந்த வேளையில் எப்படி இங்கே வர முடிந்தது? விருந்து என்ன ஆயிற்று? விருந்தினர்கள் என்ன ஆனார்கள்? சுசீலா ஒன்றையும் கேட்க முடியாமல் வாயடைத்து நின்றாள். உஷாவுடன் உல்லாசமாகப் பேசிக்கொண்டிருக்கும் கண்ணபிரானை எண்ணி வேதனைப் பட்டுக்கொண்டிருந்ததெல்லாம் அளவிட முடியாத அசட்டுத்தனமாகத் தோன்றியது. அவனிடம் சற்று முன்பு வரை கொண்டிருந்த கோபமெல்லாம் புகையெனப் பறந்து மறைந்துவிட்டது. இனம் விளங்காத பெருமையும் மகிழ்ச்சியும் அவளைத் திணற வைத்தன. அவன் ஆயிரமாயிரம் குற்றங்கள் புரிந்திருந்தாலும் அத்தனையையும் அந்த நொடியிலே மறந்து மன்னித்துவிட அவள் சித்தமாக நின்றாள். அடக்கி அழித்த கண்ணீர், இன்பம் தாளாமல் மீண்டும் பொங்கிக் கொண்டு துளித்தன. மூச்சு, பேச்சை வரவொட்டாமல் தடை செய்து நிறுத்தியது. வந்தவனை அழைக்கக்கூடத் தோன்றாமல் அவனை விழுங்கி விடுபவள் போல் கண்ணால் பார்த்துக் கொண்டு நின்றாள்.




வானுலகிலிருந்து இறங்கி வந்த அமரன்போல் அவன் எதிரே வந்து நின்றான். பெரிய சாதனை ஒன்றைச் செய்து விட்டது போன்ற புன்னகை அரும்ப, "என்ன பார்க்கிறாய்?" என்று மெல்லக் கேட்டான்.

சுசீலா அவனுக்கு வழியைவிட்டு ஒதுங்கிக் கொண்டாள். வாய் வரவேற்பதற்குப் பதிலாகக் கண்கள் வரவேற்றன.

"என்னை எதிர்பார்க்கவில்லையே நீ?"

அவள் பேசாமலே நின்றாள். பெருமை பெருமூச்சாக வெளிப்பட்டது.

"ஓடி வந்து விட்டேன், ஷீலா! உன்னைப் பார்க்க, ஓடியே வந்து விட்டேன். ஆமாம்; இதெல்லாம் என்ன? கண்களில் ஏன் இந்தக் கண்ணீர்? அழுது கொண்டிருந்தாயா என்ன? எனக்குத் தெரியும். அதற்காகத்தானே நான் ஓட்டமாய் ஓடி வந்தேன்!" என்று அவன் அவளை மெல்ல நெருங்கி வந்தான்.

சுசீலா சட்டென்று விலகி, திறந்து கிடந்த கதவைச் சிறிது மூடினாள். தன்னைப் போலவே அவனும் உணர்ச்சி மீறிய நிலையில் வந்திருப்பது அவளுக்குச் சிறிது அச்சத்தைக் கொடுத்தது. எத்தனையோ நேரங்களில் அவர்கள் தனியே சந்தித்திருக்கிறார்கள்; பேசியிருக்கிறார்கள். ஆயினும் இன்று இந்தத் தனிமை அவளுடைய உள்ளுணர்வைப் போய்த் தட்டி அவளை நடுங்கச் செய்தது. தன்னுடைய கைகளும் விரல்களும் அவனுடைய பிடியிலே நடுங்குவதை உணர்ந்து அவள் மெல்லத் தன்னை விடுவித்துக் கொள்ள முயன்றாள்.

"என்ன ஷீலா!"

"கையை விடுங்கள். ஊஹூம், விட்டு விடுங்கள்!" — வேதனையோடு வேண்டியது அவள் குரல்.

அவனுக்கு அவளுடைய போக்கு விசித்திரமாகப் பட்டது. மென்மையும் நளினமும் கொண்ட பெண் என்பவள் எத்தனை



அட்வகேட் திரு ஜி. ஆர். ஜகதீசன் அவர்களின் புதல்வர் திரு பாலசுப்பிரமணியம் சௌ. லக்ஷ்மியை மணந்தார்.



பம்பாய் ஸ்ரீ ராமமூர்த்திக்கும் சௌ. குமுதினிக்கும் திருமலையில் சிறப்பாகத் திருமணம் நடந்தது.

திடமும் உறுதியும் பெற்று விளங்குகிறான்! எப்பொழுதும் தொட்டுப் பேசிப் பழகும் அவளுக்கு இந்தத் தடவை மட்டும் என்ன வேற்றுமை தெரிந்து விட்டது? இந்தத் தடவை மட்டும் கைகள் ஏன் நடுங்குகின்றன? உடல் ஏன் கூசுகிறது? குரல் ஏன் இப்படிக் கெஞ்சுகிறது? கண்ணபிரானுக்கு வியப்போடு இது குறுகுறுப்பாகவும் இருந்தது.

அவள் விருந்தைப் பற்றி எதுவும் கேட்கவில்லை. அவன் வந்த காரணத்தைப் பற்றியும் கேட்கவில்லை. அவன் இந்த அகாலத்தில் வந்ததைத் தடுக்கவுமில்லை; வரவேற்கவுமில்லை. அவள் தன் உள்ளத்திலே மூண்டெழுந்த உணர்ச்சிகளோடு தீவிரமாகப் போராடிக் கொண்டிருந்தாள்.

எவ்வளவு நேரம்தான் இப்படிப் பேச்சற்று இருப்பது?

"நான் வந்தது பிடிக்காவிட்டால் போய் விடட்டுமா?" என்று மெதுவாகக் கேட்டான் அவன்.

அவள் தலையை ஆட்டினாள். "பிடிக்காமல் என்ன? ஆனால் உங்களுக்குத் தூக்கம் கெடவில்லையா?" என்று மிகுந்த பிரயாசையோடு கூறினாள்.

"அப்படியென்றால் போய்விடு என்று தானே சொல்கிறாய்? தூங்குவதற்குத் தெரியாமல்தான் அத்தனை பேரிடமும் தலைவலி என்று சொல்லிவிட்டு, ஒருவரும் அறியாமல் உன்னைப் பார்க்க ஓடி வந்தேனா?" என்று நொந்துகொண்டு பேசினான் அவன்.

அவள் இதற்குப் பதில் சொல்லத் தோன்றாமல் அவனையே பார்த்துக் கொண்டு நின்றாள். ஓடி வந்ததற்கான காரணத்தையும் அவனே சொல்லட்டும் என்று நிற்பது போலிருந்தது, அவள் நின்ற நிலை. சுசீலா இப்படிச் சிலையாக உறைந்து போய் நிற்பாள் என்று தெரிந்திருந்தால் அவன் வந்திருப்பானா?

"உனக்கு உடம்புக்கு என்ன, ஷீலா?"

"ஒன்றுமில்லை" என்றாள்.



சென்ட்ரல் ரயில்வே எக்ஸிக்யூடிவ் என்ஜினியர் ஸ்ரீ டி. எஸ். ராஜகோபால் அவர்களின் புதல்வி சௌ. மங்களத்தைத் திரு ராமநாதன் மணந்து கொண்டார்.



திரு ஏ. வி. எஸ். ஹரிஹரன் அவர்களின் மருமாள் சௌ. ராஜலக்ஷ்மிக்கும் டில்லி அட்வர்டைசிங்கைச் சேர்ந்த திரு ராமனுக்கும் திருமணம் நடந்தது.



திரு பெத்தபெருமாள் முதலியாரின் புதல்வர் திரு ராஜகோபாலன் சௌ. லலிதாவை வாழ்க்கைத் துணைவியாக ஏற்றார்.



பம்பாய் திரு ஆர். கே. சுந்தரத்துக்கும் சௌ. சரஸ்வதிக்கும் வெகு விமரிசையாகத் திருமணம் நடைபெற்றது.

"பின்னே ஏன் ஒன்றுமே பேச மாட்டேன் என்கிறாய்?"

"என்ன பேசுவது?"

"பேசுவதற்கு ஒன்றுமே இல்லையா?"

சுசீலா வேதனைக்கிடையே சிரிக்க முயன்றாள். பேசுவதற்கு எத்தனையோ விஷயங்கள் இருந்தன என்பது உண்மைதான். ஆனால் அதற்கு இதுவா நேரம்?

"நீங்கள் வந்தது ஒருவருக்கும் தெரியாதா?" என்று கேட்டாள்.

"தெரியாது, ஷீலா, தெரியாது!"

"அப்படித் தெரியாமல் எதற்காக இப்பொழுது ஓடி வந்தீர்கள்? காலையில் நான் எங்கே போய்விடப் போகிறேன்!"

கண்ணபிரானுக்கு இது சம்மட்டியால் அடிப்பதுபோல் பட்டது. அவள் இதோ வெகு அருகில்தான் நின்றாள். ஆனால் அவளுடைய உள்ளத்தில் எழும் எண்ணங்களோ எங்கோ எட்டாத தொலைவில் இருந்தன. அவள் அவனைப் புரிந்து கொள்ள மறுப்பதாகவே தோன்றியது.

"சரிதான்; இப்பொழுதுதான் அதைப் புரிந்து கொண்டேன். நாளைக் காலையில் நீ எங்கேயும் போய்விட மாட்டாய் என்பது எனக்குத் தெரியும். ஆனால் நான் எங்கேயும் போய்விட மாட்டேன் என்பது என்ன நிச்சயம்?" - பாதி மிரட்டலாகவும் பாதி இகழ்ச்சியாகவும் கூறிவிட்டுக் கண்ணபிரான் மூடிய கதவைத் திறக்க முயன்றான்.

அப்பொழுதும் சுசீலா இருந்த இடத்தை விட்டு அசையவில்லை. முன்பு உறுதியோடு அசையாமல் நின்றாள். ஆனால் இப்பொழுது உறுதியை அடியோடு இழந்த நிலையில் நின்றாள். ஓர் அடி எடுத்து வைத்தால் உருண்டு விழுந்து விடுவோமோ என்ற பயத்தோடு அவள் நின்றாள்.

கண்ணபிரான் கதவைத் திறந்து கொண்டு தயக்கத்தோடு வெளியே நடந்தான். காத்து நின்ற வண்டியில் போய் அவன் ஏறிக் கொண்டான்.



சென்னை சாது அச்சக நிர்வாகியும் திரு வி. க. வின் தொண்டருமான திரு மு. நாராயணசாமியின் புதல்வர் திரு அண்ணாமலை எம். ஏ. சௌ. அம்பிகாவை மணந்தார்.



திரு ஏ. சண்முக முதலியாரின் புதல்வர் திரு உமாமகேசுவரனுக்கும் தஞ்சை டி. ஜி. பால சுப்ரமண்ய முதலியார் புதல்வி சௌ. பிரம்ம வித்யாம்பாளுக்கும் திருமணம் நடந்தது.

சுசீலா இவ்வளவு எளிதில் தன்னைப் போக விடுவாள் என்று அவன் எதிர் பார்க்கவில்லை. வண்டி புறப்படுவதற்கு முன் அவள் நிச்சயம் ஓடி வந்து தடுப்பாள் என்றுதான் அவன் எண்ணினான். அவள் அப்படித் தடுக்கவேண்டும் என்று அவன் நெஞ்சு தவித்தது. ஆனால் சுசீலாவை ஏன் இன்னும் காணோம்!

அவன் குறிப்பின்றி, இலக்கு இன்றி, அவன் திரும்பி வந்து எதிரே நிற்பதைக் கூட உணராமல்தான் நின்றாள். இரு கன்னங்களிலும் கண்ணீர் மின்னி வடிந்து கொண்டிருந்தது.

"ஷீலா!" என்று அன்பொழுக அவள் கைகளைப் பற்றினான் கண்ணபிரான்.

அவள் கண்கள் தீனமாக அவனைப் பார்த்தன.

"உன்னை மேலே கொண்டு போய் விட்டு விட்டுப் போகிறேன், வா!" என்று அவளை மெல்ல நடத்திச் சென்றான் அவன். அவள் சாதுவான பசுவைப்போல் அவனோடு சென்றாள். அவள் தயங்கவில்லை; அவனுடைய பிடியில் மிரளவில்லை.

அவளுடைய அறையினுள்ளே ஒளியில்லை. வெளிநடையில் இருந்த வெளிச்சத்தின் எதிரொளிதான் இலேசாகப் பரவியிருந்தது. அவளுடைய படுக்கையை நெருங்கியதும் கண்ணபிரான் தயங்கி நின்றான். அவளும் யந்திரம் போல் அப்படியே ஓய்ந்து நின்றாள்.

"ஷீலா!"—அவன் குரல் கம்மியது.

"போய் விடுங்கள்! ஆமாம், போய் விடுங்கள்!" —அவள் குரல் நடுங்கியது.

"கோபமா, ஷீலா?" என்றவாறே அவன் அவளுடைய கன்னங்களைப் பற்றி அவள் முகத்தை நிமிர்த்தினான். கண் விழிகள் இரண்டும் அவன் விழிகளைச் சந்தித்தன. அவனைத் தடுக்கவோ மறுக்கவோ திறனற்ற அவளுடைய விழிகள் இரண்டும் அவனிடம் எதையோ மன்றாடி யாசிப்பதுபோல் பரிதாபமாய்க் கெஞ்சின: "என்னை விட்டு விடுங்கள்!"

ஆனால் கண்ணபிரான் அவற்றைப் பார்க்கக் கூசியவனாய், தன் கண்கள் இரண்டையும் இறுக மூடிக்கொண்டான். தன்னுடைய உயிரினும் மேலான ஒன்றை மதித்துக் காப்பாற்றும்படி கெஞ்சின அவள் விழிகள். அவற்றை நேருக்கு நேராகக் கண்ணைத் திறந்து பார்த்திருந்தால், அவன் மனம் மாறி நெகிழ்ந்திருக்குமோ, என்னவோ? அவன் கண்களை விழித்து அந்த அபலையின் முகத்தை ஏறிட்டுப் பார்க்கவேயில்லை! இருட்டு அவன் கண்களைக் குருடாக்கி விட்டது. **(தொடரும்)**

# கால்கேட்டின் மூலம் பற்கள் சொத்தையாவதைத் தடுப்பதோடு

## நாள் முழுவதும்

# வாய் துர்நாற்றத்தையும் அகற்றுங்கள்!



ஏனெனில், கால்கேட் பற்பசை சொத்தையையும் துர்நாற்றத்தையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சதவிகிதத்தை ஒரேதேய்ப்பில் **ஒழிக்கிறது!**

உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், பற்பசை வரலாற்றிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமானவர்களுக்குச் சொத்தை ஒழிக்கப்படுகிறது என்பதையும் கால்கேட் உடனடியாக வாய் துர்நாற்றத்தை 10-ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், விஞ்ஞான பரிட்சைகள் நிரூபித்துள்ளன: இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத் தான் உண்டு.

இதன் விசேஷம், ஊடுருவும் தன்மையுள்ள நுரை பற்களின் இடைவெளிகளிலே புகுந்து, சொத்தைக்கும், துர்நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழுகிய பதார்த்த அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் சிறந்திருக்கும் அதன் நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயே பல்துலக்க விரும்புகிறார்கள்.

வழக்கமாக கால்கேட் உபயோகித்தால், அது:

- ✔ சொத்தையைத் தடுக்கிறது
- ✔ துர்நாற்றத்தை அகற்றுகிறது
- ✔ பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது




நீங்கள் பற்பொடியை விரும்பினால், இந்த பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர்மூலம் அடையலாம்-ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.




வெண்ணிற பற்களைப் பெறவும், வாயில் நறுமணம் கமழவும், உலகிலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையும் விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிறார்கள்.

DCG 3127 TAN

# ஒத்திகை



பிலஹரி

பட்டாம் பூச்சிபோல், பத்துப் பதினைந்து படிகளையும் நொடி நேரத்தில் பறந்து கடந்து விட்ட குழந்தை, மேலே நின்றுகொண்டு எக்களிப்புடன் என்னை அண்ணாந்து பார்த்தாள்.

இமயத்தின் சிகரத்திலே முதன் முதல் தன் காலடியைப் பதித்த மனிதனின் முகத்தில் கூட அவ்வளவு பெருமிதம் இருந்திருக்காது. குழந்தையின் முகத்தில் அத்தனை மலர்ச்சி!

''ஐயையே! என்னப்பா இது? இன்னும் இறங்கல்லியே! என்னைப்பாரு...ஓடி வந்துட்டேனே!'' என்று கொக்கரித்தாள் குழந்தை.

''நான் அசடு; நீ கெட்டிக்காரி. அதான் சுருக்க இறங்கிட்டே!'' என்று சிரித்தபடியே கூறினவன், குழந்தையின் கையை வாஞ்சையுடன் பற்றிக் கொண்டேன்.

ஒரு வழியாக நூற்றுக்கால் மண்டபத்தைக் கடந்தாகி விட்டது. இன்னும், மூன்றில் ஒரு பங்கு தூரத்தைத் தாண்ட வேண்டுமே, எனக்கு என்னவோ பெருமூச்சு வாங்கியது.

''உம்...அப்படியே நின்னுட்டா? வா! இறங்கலாம்!'' என்று உற்சாகத்துடன் கையைப் பிடித்து இழுத்தாள் குழந்தை.

''கொஞ்சம் பொறு, அம்மா! காலை வலிக்கிறது!'' என்று கெஞ்சினேன்.

''அப்போ ஏன் வந்தே?''

''உனக்காகத்தான்!''

''எனக்கென்னவாம்?''

''பாவம், ஊரிலிருந்து வந்திருக்கே! மலைக்கோட்டையைக் காட்டலாமேன்னுதான் அழைச்சுண்டு வந்தேன்!''

சற்று நேரம் குழந்தை மௌனம் சாதித்தாள்.

''ஏம்ப்பா! நீ எப்போவாவது இந்த மலைக்கு வந்திருக்கியோ?'' மறுபடியும் ஆரம்பித்து விட்டாள் குழந்தை.

''ஓ! வந்திருக்கேனே!''

''எப்பவாம்?''

''உன்னைப்போல இருக்கச்சே!''

''அப்போவெல்லாம் கால் வலிக்காது?''

''கால் வலிக்கவாவது! நினைச்சவுடனே, மலைமேலே ஓடிப் போய், கால் மணியிலே திரும்பி வந்து விடுவேனே!''

''இப்போ மாத்திரம் உனக்கு ஏன் கால் வலிக்கறதாம்?''

''வயசாயிடுத்தே!''

''பெரிய தாத்தாவோ?''

''தாத்தா இல்லாட்டாலும், உனக்கெல்லாம் அப்பாவாயிட்டேனே, இல்லியோ!'' என்னையும் அறியாமல் சிரித்து விட்டேன்.

முப்பது வயதுதான் ஆகிறது என்றாலும், மூன்று குழந்தைகளைப் பெற்று விட்டதால், உள்ளத்துடன் உடலும் முதிர்ந்து விட்டதாக எனக்குள் ஒரு பிரமை.

''என்னைப்பாரு! கொஞ்சம் கூடக் கால் வலிக்காமல் எவ்வளவு வேகமாகக் கீழே இறங்கிட்டேன்!''

''நீ குழந்தை! அதான்.''

''போப்பா! நான் ஒன்னும் குழந்தை இல்லே, தெரியுமா?''

பச்சைக் குழந்தை தனக்கு வயதாகி விட்டதாக எண்ண ஆசைப்படுகிறது. பல் விழுந்தவன், தன்னைப் பச்சைக் குழந்தையாக எண்ணி இறுமாப்பு அடைய விரும்புகிறான். இந்த நேர் எதிரான இரு உணர்ச்சி பேதங்களுக்குமிடையே, மனித இனம் வளர்ந்து கொண்டு வருவது விந்தை அல்லவா?

மறுபடியும் குழந்தையும் நானும் கைகோத்துக்கொண்டு, படி இறங்கத் தொடங்கினோம்.

வழக்கம் போல், பத்துப் படிகள் முன்னே கடந்து, நின்று நிதானித்து வரும் என்னைப் பார்த்துக் குழந்தை கைகொட்டிச் சிரிக்க, ஒரு வழியாக அடிவாரத்துக்கு வந்தோம்.

இரு வரிசையிலும் அமைந்திருந்த பொம்மைக் கடைகளைக் கடந்து சென்றபோது, குழந்தை நின்றாள்.

''என்னம்மா வேணும்?'' என்றேன்.

''ஏதாவது பொம்மை வாங்கித் தாயேன்!''

எதிரே யிருந்த பொம்மைக் கடைக்குச் சென்றோம்.

சென்னை சைனாபஜார் நடைபாதையில், 'எதை யெடுத்தாலும் இரண்டரை அணா' பிளாஸ்டிக் பொம்மைகளைப் பார்த்துப் பார்த்துச் சலித்துப் போன கண்களுக்கு, வெகு இதமாக இருந்தன கடையிலிருந்த பொம்மைகள்.

எல்லாம் சின்னச் சின்னவைதான். மரத்தால் செய்யப்பட்ட யானை, குதிரை, மாட்டு வண்டி, கோபுரம், செட்டியார் - இப்படிப் பலபல. ஊருக்கேற்ற விளையாட்டுக் கருவிகள். ஐந்தே நிமிஷங்களில் நான்கு பொம்மைகளை விற்றுவிட்டார் கடைக்காரர்.

சில்லறையைக் கொடுத்துவிட்டுத் திரும்பிய சமயம்.... ''அப்பா!'' என்று அழைத்தாள் குழந்தை. திரும்பினேன்.

''அதோ அது வேணும் அப்பா!''

குழந்தையின் குஞ்சு விரல் காட்டிய இடத்தைப் பார்த்தேன்.

ஒரு நீண்ட கயிற்றில், பலவித நிறக் காகிதங்களில் குழந்தைகள் விளையாட்டுக்காகப் போட்டுக் கொள்ளக்கூடிய மூக்குக் கண்ணாடிகள் தொங்கிக் கொண்டிருந்தன.

ஏனோ என்னையும் அறியாமல் என்னுள் அருவருப்பு எழுந்தது.

''அதெல்லாம் வேண்டாம்மா! இவ்வளவு பொம்மை வாங்கியிருக்கேனே! போதாதா?'' என்றபடியே, குழந்தையின் கையைப் பிடித்தேன். 'வெடு'க்கென்று கையை உதறிக் கொண்டாள் குழந்தை.

''எனக்கு அந்தக் கண்ணாடிதான் வேணும்!'' சிணுங்கியபடியே கூறினாள் அவள்.

பிறந்ததற்கே இவ்வளவு பிடிவாதம் இருந்தால், பெற்றவனுக்கு எவ்வளவு இருக்கும்?



" உஸ், அப்பாடா ! ஆறு மாதங்களாக அலைந்து கடைசியில் ஒரு வழியாக வீட்டைப் பிடித்தாயிற்று." — குடும்பஸ்தர்

(ஆறுமாதங்கள் கழித்து)

" உஸ் அப்பாடா ! ஆறு மாதங்களாக அலைந்து கடைசியில் ஒரு வழியாக ஒரு மாத வாடகையை வசூலித்தாயிற்று !"

— வீட்டுச் சொந்தக்காரர்.

" இதோ பார் ! நீ என்னதான் அடம் பிடிச்சாலும், அந்தக் கண்ணாடியை வாங்கித் தரமாட்டேன் !" என்றேன் ஆத்திரத்துடன்.

" என்ன சாமி ! பாவம், குழந்தை ஆசைப் பட்டுக் கேட்குது ! வாங்கித்தான் கொடுங்களேன் ! விலை ஒரணாதாங்க !" என்றார் கடைக்காரர்.

" காலணாவாக இருக்கட்டும் ஐயா ! நான் அதை வாங்க மாட்டேன் ! குழந்தைன்னா, யானை, குதிரை பொம்மையெல்லாம் வாங்கித் தர வேண்டியதுதான். மூக்குக் கண்ணாடி ஒரு விளையாட்டா, ஐயா? எவன் ஐயா கண்ணாடி போட்டுப்பான்? குறுகுறுன்னு ஓடி விளையாட வேண்டிய குழந்தைக்கு, கண்ணாடி மாட்டியா ஒருத்தன் வேடிக்கை பார்க்கணும் ?"

என்னையும் அறியாமல் சற்றுப் பலமாகவே கூவிவிட்டேன். கடைக்காரர் என்ன, குழந்தை கூடக் 'கப்சிப்' என்று அடங்கி விட்டாள்.

தெப்பக் குளம் வழியாக பஸ் நிற்குமிடம் சென்று கொண்டிருந்தோம்.

" அப்பா !..."

மலைக் கோட்டையை விட்டுப் புறப்பட்டதிலிருந்து இதுவரையில் வாய் திறவாமல் பின் தொடர்ந்த குழந்தை அழைத்தாள்.

" என்ன வேணும் ?" என்றேன்.

" ஏம்பா, அவ்வளவு கோவிச்சுண்டே ?" தயங்கியபடியே கேட்டாள் குழந்தை. என் உள்ளம் நெகிழ்ந்தது.

" உன் மேல் ஒண்ணும் கோபம் இல்லேம்மா ! நீ சின்னவளா இருக்கே பாரு, உனக்கென்னத்துக்குக் கண்ணாடி, சொல்லு."

" எதிர்த்த வீட்டுத் தாத்தா போட்டுண்டிருக்காரே !"

" அவர் தாத்தா ! போட்டுண்டிருக்கார் !"

" என் சிநேகிதியோட அக்காகூடத்தான் போட்டுண்டிருக்காள் !"

" அதெல்லாம் 'பாஷன்' அம்மா !"

" அப்படின்னா ?"

" அதெல்லாம் உனக்குப் புரியாது. இதோ சொல்றேன் கேளு. 'கண்ணு கெட்டுப் போனவர்கள்தான் கண்ணாடி போட்டுக்கணும்' அதாவது, பொட்டையா இருக்கா பாரு !"

" புரிஞ்சு போச்சு !" என்றாள் குழந்தை! அதன்பிறகுதான் என்னையும் அறியாமல் உள்ளத்தில் நிம்மதி பரவியது.

" அப்போ உனக்குக் கண்ணாடி வேண்டாமே ?" என்றேன்.

" ஊஹூம் ! எனக்கெதுக்காம்? எனக்குத்தான் கண்ணு நன்னு இருக்கே !"

எனக்கு ஏற்பட்ட உற்சாகத்தில் குழந்தையை அலாக்காகத் தூக்கிக் கொண்டு, நடக்கத் தொடங்கி விட்டேன்.

வீட்டில் காலடி வைக்கும்போது, இரவு மணி ஏழாகி விட்டது.

எங்கள் வரவுக்காக வழி மேல் விழிவைத்து, திண்ணையிலேயே காத்திருந்தாள் அம்மா.

" ஏண்டாப்பா, இவ்வளவு நேரம் ? பெண்ணுக்கு எங்கே யெல்லாம் சுத்திக் காண்பிச்சே?" என்று கேட்ட பாட்டியிடம் ஓடி ஒண்டிக் கொண்டாள் குழந்தை.

" எங்கே போயிருப்பேன், நீதான் சொல்லேன் ! கம்மா மலைக்கோட்டை மேலே ஏறி ஒரு ரவுண்டு அடிச்சோம்; அவ்வளவுதான் !" என்றபடியே கால்களைத் தடவி விட்டுக் கொண்டேன்.

" அதெல்லாம் சரிதாண்டா ! டாக்டர் கிட்டே போனியோ ? அதைச் சொல்லு முதல்லே !" என்று கேட்டாள் தாயார்.

"அடடே ! மறந்தே போயிட்டேம்மா ! நாளைக்குக் கட்டாயம்..."

" என்ன பிள்ளைடா நீ ! இன்னும் விளையாட்டுப் புத்தி போகல்லியே ! ஊரிலிருந்து வந்து விளையாட்டுப் போல் பத்து நாளாச்சு. இன்னும் ரெண்டு நாளில் புறப்பட்டுப் போயிடப் போறே ! அதுக்குள்ளே டாக்டர் கிட்டே குழந்தையைக் காட்டிவிட்டு வர வேண்டாமோடா ?"

" நீ ஏம்மா கவலைப்படறே ? குழந்தைக்கு ஒரு கோளாறும் கிடையாது ! எனக்கு என்னவோ துளிக்கூடச் சந்தேகமில்லே! வேணும்னு உனக்காக டாக்டர்கிட்டே நாளை அழைச்சுண்டு போயிடறேன் !"

" நீ என்ன சொன்னாலும் சரிதான் ! டாக்டர் வாயைத் திறந்து 'ஒண்ணும் தப்பு இல்லை'ன்னு சொல்லி விட்டால், எனக்குப் போதும்டாப்பா ! பெண் குழந்தை ஆச்சே ! நாளைக்கு முதல் பஸ்ஸிலே கிளம்பற வழியைப் பாரு ! சொல்லிட்டேன் !"

விஷயம் இதுதான்.

என் மூத்தபெண் பத்மினிக்கு இப்போது நடந்து கொண்டிருப்பது ஆறாவது பிராயம். வெகு நாட்கள் குழந்தையின் குரலையே கேட்டறியாத எங்கள் குடும்பத்தில், முதன் முதல்

பிறந்ததால், எல்லோருடைய அபிமானத்துக்கும் செல்வத்துக்கும் பாத்திரமான குழந்தை.

பிறக்கும்போது குழந்தை கொஞ்சம் இரட்டை நாடிதான். நல்ல சிவப்பு இல்லா விட்டாலும், அவளது மஞ்சள் நிறமேனியில் ஓர் அபூர்வ பளபளப்பு. சிரிக்கும்போது, இரு கன்னங்களிலும் இரு கோலிக் குண்டு களைப் பதிக்குமளவு குழிவு விழும். தலை கொள்ளாத கேசம். எல்லாவற்றையும்விட மற்றவர் கவனத்தை உடனே கவர்ந்தது, குழந்தையின் கண் அமைப்புத்தான்.

வெள்ளை வெளேரென்ற பாலில், ஒரு கறுப்புத் திராட்சை மிதப்பதுபோன்ற விழி. கரு வண்டுபோல், ஒரு விநாடிகூடச் சோம்ப லின்றி, வெகு அழகாகச் சுழன்று சுழன்று வரும் அந்தக் கயல் விழிகளின் பார்வையில், மானின் மருட்சி, பண்படைத்த ஞானிகளுக் குரிய சாந்தப்பார்வை, தலை தெறித்தோடும் பச்சிளம் குருத்துக்களுக்கே உரித்தான பர பரப்பு- இவை யெல்லாம் மாறி மாறித் தோன்றும். விரக்தியின் எல்லைக்கே சென்று விட்ட மனிதன்கூட ஒருசில நிமிஷம் தன்னையும் அறியாமல் உள்ளத்தில் கிளுகிளுப்பு அடைவான்.

''ஊரார் கண் பொல் லாதுடா அப்பா! குழந் தையை இப் படி. உன்னோ வரச் சொல்! திருஷ்டி சுற்றிப் போட றேன்!'' என்று அம்மா சொல்லாத நாட்களே கிடையாது.

குழந்தைக்கு ஏழெட்டு மாதங்களுக்கு முன்பு கண் ணில் ஒரு சிறு கட்டி கிளம் பியது. ஒருவாரம் மருந்து போட்டதில், கட்டி கரைந்து விட்டது. பிறகு எவ்வித மான கெடுதலும் இல்லை. ஆனால், குழந்தை பார்க்கும் விதம் மாத்திரம் இலேசாக மாறி யிருப்பதாக எங்க ளுக்குத் தோன்றியது. 'ஒன்றரைக் கண்' என்பார்களே, அது மாதிரி.

''தென்னூரிலே ஒரு புது டாக்டர் வந்திருக் காராம்! கண் வைத்தியத்திலே மிகவும் கெட்டிக்காரராம்! முதல்லே குழந்தையை அழைச்சுண்டு போய்க் காண்பிச்சு விட்டு, மறு காரியம் பார்!'' என்று அம்மா உத்தரவு போட்டுவிட்டாள்.

அம்மாவின் ஆசையை ஏன் கெடுக்க வேண் டும்? வைத்தியர் வாயால் நல்ல வார்த்தை வந்துவிட்ட பிறகாவது, மன அமைதியுடன் இருப்பாளல்லவா?

**ம**றுநாள். காலை முதல் பல்லைப் பிடித்து, சரியாக ஏழு மணிக்கெல்லாம் குழந்தையை அழைத்துக்கொண்டு, தென்னூர் டாக்டரிடம் போய் விட்டேன்.

எங்களுக்கு முன்பிருந்தே, அங்கு கூடி யிருந்த பலத்த கூட்டம், டாக்டரின் கியாதியை உணர்த்தியது.

என்னுடைய முறை வந்ததும் குழந்தையை அழைத்துக்கொண்டு டாக்டரின் அறைக் குள் சென்றேன்.



ஐந்தே நிமிஷங்களில் குழந்தையைப் பற்றிய விவரத்தை யெல்லாம் சுருக்கமாகச் சொல்லி முடித்தேன். வெகு கவனமாகக் கேட்டுக் கொண்ட டாக்டர் தம் பரிசோதனையை ஆரம்பித்தார்.

வழக்கம்போல், சற்றுத் தொலைவில் கார்டு தங்களில் எழுதப்பட்டிருக்கும் பெரிய பெரிய எழுத்துக்களை யெல்லாம் படிக்கும் படலம் முடிந்தது. 'டக் டக்'கென்று குழந்தை படித்து விட்டாள்.

''பார்வையில் ஒரு கோளாறும் கிடையாது, சார்!'' என்றார் டாக்டர்.

''அது வாஸ்தவம்தான், சார்! ஆனால், பார்க்கும் விதம் மாத்திரம்....''

"கொஞ்சம் மாறு கண்ணாகத் தெரிகிறது. அப்படித்தானே?"

மௌனமாகத் தலையசைத்தேன்.

மேலும், பத்து நிமிஷங்கள் தொடர்ந்து பரிசோதனை நடத்திய டாக்டர், கடைசியில் நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டார்.

"அப்படிப் பயப்படும்படியாகப் பெரிய குறை எதுவும் கிடையாது, சார்! கண்ணின் உள் பாகத்தில் நுண்ணிய நரம்பு ஒன்றிரண்டு கொஞ்சம் பலவீனமாக இருக்கின்றன! நாளைக்கு வாருங்கள்! மருந்து போடலாம்!" என்றார்.

"நாளைக்கு மட்டும் போட்டால் போதுமில்லையா?" என்று பச்சைக் குழந்தை மாதிரி கேட்டேன்.

"அது எப்படிப் போதும்? செப்பிடு வித்தையா இது? பத்து நாட்கள் தவறாமல் மருந்து போட்டுக்கணும்! அப்போதான் நரம்புகளைப் பற்றி நமக்கும் ஒரு நிதானம் புரியும். அதைப் பார்த்துக்கொண்டு, ஏதாவது கண்ணாடி...."

கருந்தேள் ஒன்று உள்ளங்காலில் கொட்டிவிட்டாற்போல் ஒரு துள்ளுத் துள்ளினேன்.

"என்ன? என்ன? கண்ணாடியா?" என்றேன் பதற்றத்துடன்.

"ஆமாம், சார்! இதற்கு ஏன் சார் இவ்வளவு பதற்றம்? கண்ணாடி போட்டுக் கொள்ளக் கூடாதா? அது போட்டுக் கொண்டால்தான், நரம்பெல்லாம் ஒரு கட்டுப்பாட்டுக்கு வரும்!" என்றார் டாக்டர்.

விக்கித்து நின்று விட்டேன்.

கடையிலே விற்கும் வர்ணக் கண்ணாடியை வாங்கித் தன் கண்களில் அணிந்துகொண்டு விளையாட விரும்பும் பருவமுடைய பச்சைக் குழந்தைக்கு உண்மையிலேயே கண்ணாடி போட வேண்டுமா? தெருவில் நடக்கும்போது, என் கைகளைப் பிடிக்காமல் நாலடி தூரம் தனித்துச் செல்லத் துணிவு இல்லாத அந்தப் பச்சைக் குருத்துக்கு ஒரு வேலியா? என் இதயமே சுக்கு நூறாக வெடித்துவிடும் போலாகிவிட்டது.

"என்ன சார்! கண்ணாடிக்கா இவ்வளவு பயம்?" என்று கேட்ட டாக்டரின் வியப்புக் குரல் என் பிரமையைத் தகர்த்தது.

"அதுக்கில்லை, சார்! இந்தச் சின்னக் குழந்தைக்குக் கண்ணாடி மாட்டிப் பார்ப்பதென்றால்..." மேற்கொண்டு என் வாய் அசையவில்லை.

டாக்டர் பரிவுடன் என் கைகளைப் பற்றினார். "இதிலே எனக்கு ஒன்றும் ஆச்சரியம் இல்லாவிட்டாலும், உங்கள் அன்பு உள்ளம் இதை ஏற்பதற்கு எவ்வளவு தயங்குகிறது என்று நான் உணராமல் இல்லை!" என்றார்.

## சிரிக்காதே!

### ஆனந்தம் எங்கே?

"ஏண்டாப்பா! வேலை செய்யாமல் சும்மா இருக்கிறாயே! வேலை செய்வதில் எவ்வளவு ஆனந்தம் இருக்கும் என்று உங்க அப்பா உனக்குச் சொல்லித் தரவில்லையா?"

"வேலை செய்யணும் என்றுதான் சொன்னார்... ஆனால் அதில் ஆனந்தம் இருக்கும் என்பதைச் சொல்லாமப் போய் விட்டார் சார்!"

### இரண்டும் கெட்டான்!

வாழ்க்கையில் தோல்வியுற்ற இரண்டு பேர்கள் ஒரு பார்க் பெஞ்சியில் உட்கார்ந்து கொண்டிருந்தார்கள்.

ஒருவர்: உங்கள் தோல்விக்குக் காரணம் என்ன?

மற்றவர்: நான் ஒருவர் பேச்சையும் கேட்பவன் அல்ல. என் இஷ்டப்படியே நடந்தேன். அதுதான். ஆமாம். உங்க சமாசாரம் என்ன?

ஒருவர்: நான் எல்லோருடைய பேச்சையும் கேட்பேன். அவர்கள் இஷ்டப்படியே நடந்தேன். அதுதான் காரணம்!

### மாற்று மருந்து!

ஆஸ்பத்திரியில் ஒரு படுக்கையின் பக்கத்தில் வந்த டாக்டர்: பேஷ்! நேற்றைக்கு இந்த ஆள் இருந்த நிலை என்ன? இன்றைக்கு நன்றாக மாறிப் பிழைத்து விட்டாரே! என் மருந்து ஆளையே மாற்றி விட்டதே!

நர்ஸ்: ஆமாம், டாக்டர்! இவர் இன்றைக்குப் புதிதாக 'அட்மிட்' ஆன புது நோயாளி.

### வஜ்ராயுதம்!

"பயலுக்கு ஒரு தடவை சொன்னால் போதும், அப்படியே பிடித்துக்கொண்டு விடுவான்!"

"என்ன இருந்தாலும் வஜ்ரக் கடைக்காரர் பிள்ளை இல்லையா?"

### பதில் கேள்வி!

மோசமாகக் காரை ஓட்டிக் கொண்டு போன ஒருவரைப் பார்த்துப் போலீஸ்காரர்: லைசென்ஸ் இருக்கா?

காரோட்டி: இது என்ன கேள்வி? இந்த மாதிரி மோசமாய்க் கார் ஓட்டுகிறவர்களுக்கு யாரேனும் லைசென்ஸ் கொடுப்பார்களா?

### சமாதானம்!

ரிக்ஷாக்காரன்: என்ன சார்! இவ்வளவு குறைச்சலாக் கொடுக்கிறீங்களே! நீங்கள் கல்யாணம் செய்து கொள்வதற்கு முன்னால் அரை ரூபாய் கொடுப்பீங்களே!

அவர்: அப்போது என்கிட்டே அரை ரூபாய் இருந்தது!




நாவலர் சோமசுந்தர பாரதியாரின் 80-வது ஆண்டு நிறைவு விழாவைச் சமீபத்தில் (27—7—59ல்) மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் மிகச் சிறப்பாகக் கொண்டாடினார்கள். இராமநாதபுரம் மாவட்ட நீதிபதியும் தமிழறிஞருமாகிய திரு. எஸ். மகராஜ பிள்ளை விழாவுக்குத் தலைமை வகித்தார். பேராசிரியர்கள் தெ. பொ. மீனாட்சிசுந்தரனாரும், இலக்குவனாரும் பாரதியாரைப் பாராட்டிப் பேசினார்கள். மதுரைத் திருவள்ளுவர் கழகத் தலைவர் திரு. கி. பழநியப்பன் 80 ஆண்டுகள் முதிர்ந்த நாவலர் பாரதியாருக்கு அழகிய வேலைப்பாடு அமைந்த கைத்தடி ஒன்றை அன்பளிப்பாக வழங்கினார். விழாவுக்குத் தமிழகத்தின் பல பாகங்களிலிருந்தும் புலவர்கள் வந்திருந்தனர்.

---

நான் பதில் கூறவில்லை. "சரி, சார்! அப்புறம் உங்கள் இஷ்டம்!" என்றார் டாக்டர்.

"என் இஷ்டம் என்ன சார்? உங்களுக்குத் தெரியாதது ஒன்றுமில்லை! நீங்களே சொல்லி விட்ட பிறகு, நான் ஏன் தயங்க வேண்டும்? நாளையிலிருந்து சிகிச்சையைத் தொடங்கிவிடலாம், சார்!" என்றேன்.

தழுதழுத்த குரலில் வார்த்தைகளை உதறி விட்டுக் குழந்தையுடன் ஆசுபத்திரிக் கட்டடத்தை விட்டு வெளியேறினேன்.

அடுத்த அரை மணிக்கெல்லாம், முதல் நாள் பொம்மைகள் வாங்கிய அதே கடைக்குள் நுழைந்து கொண்டிருந்தேன்.

எங்களைப் பார்த்ததும், கடைக்காரருக்குக் கொஞ்சம் ஆச்சரியம் ஏற்பட்டிருக்கவேண்டும்.

"வாங்க, சாமி! வாங்க! ஏது மறுபடியும்? ஏதாச்சும் பொம்மை வேணுங்களா?" என்று பவ்யமாக விசாரித்தார்.

நான் வாய் திறக்கவில்லை. நேற்று குழந்தை கை காட்டியது போலவே, நானும் அதே இடத்தை நோக்கி ஜாடை காட்டினேன்.

"கண்ணாடிங்களா!" என்று கேட்டார் கடைக்காரர் வியப்புடன்.

"ஆமாம்! மூணு கலரிலே எடுத்துக்கொடு! இந்தா! மூன்றணா!"

கடைக்காரர் கண்ணாடிகளைக் கொடுத்தது தான் தாமதம், ஒரு வினாடிகூட அங்கே நிற்காமல் கிளம்பி விட்டேன்.

சிறிது தூரம் சென்றதும் குழந்தை பத்மினி வாய் திறந்தாள்.

"யாருக்குப்பா கண்ணாடி வாங்கினே?"

"உனக்குத்தாம்மா!"

"எனக்கா?"

"பின்னே, நேத்து ஏன் அவ்வளவு கோவிச்சுகிண்டே?"

"சும்மா விளையாட்டுக்குத்தான் அப்படிக் கோவிச்சுகிண்டேன்! நீ அதைப் போய் நிஜம்னு நம்பிட்டியா?"

என் உள்ளத்தை நானே ஏமாற்றிக் கொண்டுதான் பேசினேன். குழந்தை என் கையிலிருந்த கண்ணாடியைப் பெற்றுக் கொள்ளவில்லை.

"இந்தாம்மா! இதை போட்டுண்டு வாயேன்!" என்று குழந்தையின் கண்களில் ஒரு பச்சைநிறக் கண்ணாடியை மாட்டப் போனேன். ஒதுங்கிக் கொண்டாள் அவள்.

"போப்பா! நான் மாட்டேன்!"

"ஏம்மா?" என்றேன் கெஞ்சிய குரலில்.

"என்னைப் போய்க் கண்ணாடி போட்டுக்கச் சொல்றியே! அப்போன்னா, எனக்குக் கண்ணு கெட்டுப்போச்சா? இல்லாட்டா..."

சட்டென்று குழந்தையின் வாயைப் பொத்திக் கொண்டேன். என் கரங்கள் நடுங்கின.

"அப்படியெல்லாம் சொல்லாதேம்மா! உனக்குக் கண் நன்னாத்தானே இருக்கு! நான் நேத்து ஏதோ விளையாட்டுக்குச் சொன்னால், அதையே நினைச்சுண்டிருக்கியே!"

பயம் தெளிந்த குழந்தை, என் கையிலிருந்த கண்ணாடியைப் பிடுங்கித் தன் கைகளாலேயே மாட்டிக் கொண்டாள்.

கைக்குட்டையால் கண்களை ஒற்றி எடுத்த படியே மறுபுறம் என் முகத்தைத் திருப்பிக் கொண்டேன். ஆற்று வெள்ளத்துக்கு அணை போடக் கற்றுக் கொண்ட மனிதன், அகத்திலெழும் உணர்ச்சி அலைகளின் ஓசையை அடக்க ஏன் கற்றுக் கொள்ளவில்லை?

இன்னும் பத்துப் பதினைந்து நாட்களுக்குள் அரங்கேற்றமாகப் போகும் ஒரு நாடகத்தைப் பலவந்தமாக நான் பார்க்க வேண்டியதற்கான மனவலிமையைப் பெறுவதற்குத்தான், இப்போதிருந்தே ஒத்திகை தொடங்கியிருக்கிறேன் என்ற கசப்பான உண்மையை யறியாத குழந்தை, விளையாட்டுக் கண்ணாடி முகத்தை அலங்கரிக்க, கம்பீர நடை போட்டுக்கொண்டு என்னோடு தொடர்ந்து வந்தாள்.



## Whatever the pleasure
## Player's complete it

Player's Navy Cut is a famous brand, well known and appreciated by people the world over who like a good cigarette. There is no doubt that

*Player's Please*




PL/519

*Issued by The Imperial Tobacco Company of India Limited*







# அன்புப் பரிசு

## லக்ஷ்மி சுப்பிரமணியம்

ரயில் தாமதமாக வந்ததால் நான் வந்து சேரும் போது மாப்பிள்ளை அழைப்பு ஊர்வலம் தொடங்கி விட்டது. அவசரமாக உடைகளை மாற்றிக் கொண்டு நானும் ஊர்வலத்தைத் தொடர்ந்தேன்.

சங்கரனுக்குக் கலியாணம் என்று அழைப்பு வந்ததுமே, என் மனம் மணப் பெண் யாராக இருக்கக்கூடும் என்று ஊகிக்க ஆரம்பித்து விட்டது. பார்வதி என்ற பெயரும் என் மனத்தில் தோன்றியதையே திடப் படுத்தியது. ஆனாலும் கடைசியாகச் சிறிது சந்தேகம் இருக்கத்தான் செய்தது. அதையும் தீர்த்துக்கொள்ளத்தான் இப்போது ஊர்வலத்தின்பின்னால்போகிறேன்.

ஆயிற்று. பெண் வீட்டாரின் வாசல் இன்னும் முப்பது அடி தூரம்தான் இருக்கும். கண்ணைக் கூசும் காஸ் விளக்குகளின் வெளிச்சம். அலை அலையாக எழுந்த நாகஸ்வர இசை. குழந்தைகளின் கோலாகலம். பூவின் மணமும் சந்தன மணமுமாக எங்கும் பரவியது. அந்த வாசனைக்குப் போட்டியாக, பூமழையாகப் பொழிந்து கருகும் வாணப் புகை நாற்றம். மனம் விதிர்த்து நின்றது. கண்கள் மேலே நோக்கின.

மாடியில் கோடைப் பந்தலின் காலைப் பிடித்துக் கொண்டு புத்தாடையும் அலங்காரமுமாய், நாணமும் பெருமிதமுமாய், மணவாளன் ஊர்வலம் வரும் விமரிசையை ஆவல் ததும்பப் பார்த்து நின்ற மணப் பெண்ணின் மேல் என் பார்வை விழுந்தது. அதே கண்கள். பார்வையில் அந்தத் துடி துடிப்பு இல்லை. குழைவும் கனிவும் நிழலிடும் அதே முக பாவம். அவளை நான் அதற்கு முன்பு பார்த்திருக்கிறேன். பெயரைப் பார்த்தும் என் மனம் சொல்லியது உண்மைதான். சிறிதளவு என் மனத்தில் தங்கியிருந்த கொஞ்சநஞ்ச சந்தேகமும் மறைந்துவிட்டது.

கெட்டி மேளம் முழங்கியது. மின்னலைப் போல் அவள் வேகமாக உள்ளே மறைந்து விட்டாள். சங்கரனுக்கு ஆரத்தி எடுத்துக் கொண்டிருந்தார்கள்.

என் பார்வை சூனியமாகி விட்ட மேல்மாடியை மறுபடியும் நோக்கியது. மனத்தில் இனம் தெரியாத ஓர் ஏக்கம். அதை விவரிக்க முடியாது. அதற்கு ஓர் உருவமே இல்லை. கூட்டம் உள்ளே நுழைந்து கொண்டிருந்தது. நான் போகவில்லை. என் மனத்தில் மறுபடியும் அந்தப் பார்வையை அப்பொழுதே கலியாணக் கூடத்தின் நடுவில் அவள் பதுமையாய் வந்து நிற்கும் போது, சந்திக்கக் கூடிய அளவுக்குத் திடம் இருக்கிறதா, என்ன?

பிள்ளை வீட்டாரின் விடுதிக்குத் திரும்பிவிட்டேன். என் மனம் பழைய நினைவுகளில் சுருண்டது.

நானும் சங்கரனும் பி. ஏ. வகுப்பு இறுதிப் பரீட்சை எழுதி விட்டுக் கோடை விடுமுறைக்கு அவரவர்கள் ஊருக்குப் போய் விட்டோம். தென்காசியில் இருந்த அவனிடமிருந்து எனக்குக் கொஞ்சம் நாட்கள் அங்கே வரச் சொல்லிக் கடிதம் வந்திருந்தது. குற்றாலத்தின் நீர் நிறைந்து விழும் காலம் அந்த மாதம். கிராமத்தில் கட்டுப் பொசுக்கும் கோடை வெப்பத்திலிருந்து தப்பித்துக் கொள்ள அப்படி ஒரு வாய்ப்புக் கிடைக்கும் போது, போவதற்குக் கசக்கிறதா என்ன? போனேன்.

தென்காசியிலிருந்து குற்றாலம் நான்கு மைல் தூரம். வழி நெடுகச் சாலையில் நிழல் தரும் மரங்கள். போகும்போதே அருவியின் தண்மை காற்றில் நிறைந்து நம்மை வரவேற்கும்.

காலை ஆகாரத்தை முடித்துக் கொண்டு புறப்பட்டால், அருவிக்கரைக்கு ஒன்பதுமணிக் குள்ளாகப் போய்ச் சேர்ந்து விடுவோம். கடல் பொங்கி விழுவது போல் முழங்கிக் கொண்டு இரை இரையாக விழும் புனல். அந்தப்புறம் முழுவதும் பனிப் படலம் போர்த்தது போல் காற்றில் துகள் துகளாக மிதந்த நீர்த் துளி. கைப்பிடிக்கும் நடைபாலத்துக்கும் கீழே கண்ணாடி போன்ற தெளிவோடு பாறைகளைத் தழுவிக் கொண்டு சுழித்தோடும் நீர். அருவியின் அழகைப் பார்த்தபடியே பொழுது போக்கலாம். உடல் புல்லரிக்கக் குளிர்ச்சியில் மெய்ம்மறந்து அருவியின் அடியில் சிதறி விழும் நீர் மழையில் நேரம் போவது தெரியாமல் நிற்பது எனக்கும் சங்கரனுக்கும் பொழுதுபோக்கு.

குளிர்ந்து போன உடலில் துணியை முறுக்கித் தேய்த்துத் துடைக்கும் போது மென்மையாகச் சூடேறி உணர்வு திரும்பும். தலையை ஆற்றிக் கொண்டு, உடையை மாற்றிக்கொண்டு குற்றாலநாதர் சன்னதிக்குப்போவோம். கப்பும் கிளையுமாக நிழல் பரப்பிக் கொண்டு நிற்கும் பெரியதோர் ஆலமரம். அதன் அடியில் மணலில் உட்கார்ந்தபடி கதை பேசுவோம். அங்கேயே உணவையும் முடித்துக் கொண்டு, நிழல் நீண்டு வரும் மாலை வேளையில் காலாற நடந்தே, தென்காசிக்குத் திரும்புவதும் உண்டு.

அங்கேதான் நான் பார்வதியை முதன்முதலில் சந்தித்தேன். நானும் சங்கரனுமாகக் குற்றாலநாதரின் சன்னிதியை வலம் வந்து கொண்டிருந்தோம். திருநீறு அணிந்த பெரியவர் ஒருவரைக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு அவள் வலம் வந்து கொண்டிருந்தாள். என்னோடு பேசிக் கொண்டே வந்த அவன் சட்டென்று அவள் புறம் திரும்பிப் பார்த்து விட்டு, ''கொஞ்சம் இரு! இதோ வந்து விடுகிறேன்'' என்று போனான்.

நான் சிறிது நேரம் அங்கேயேநின்றேன். அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். அந்தப் பெண் சங்கரனும் பெரியவரும் பேசுவதை விழிகொட்டாமல் பார்த்தபடி நின்று கொண்டிருந்தாள். அதைப் போன்ற கண்களை அது வரையில் நான் பார்த்ததில்லை. அதில் அழகு இருந்ததைச் சொல்லவில்லை. பார்வையில் சுழலும்போது ஒளிர்ந்த மென்மையையும் குறிப்பிடவில்லை. அவள் பார்வை பேசாமல் பேசியது போலப்பட்டது எனக்கு. கண்களில் தோன்றிய விளக்க முடியாத அனுதாபம், பார்வையில் கலந்து நின்ற பரிவு, ஏதோ சிந்தனையில் ஆழ்ந்து விட்டது போன்ற ஆழ்ந்த நோக்கு — இவைதான் என்னைக் கவர்ந்தன.

சங்கரன் என்னைக் கூப்பிட்டான். என்னை அவர்களுக்கு அறிமுகம் செய்து வைத்தான்.

''இங்கேயே தான் தங்கியிருக்கிறோம். நாளைக்கு இருவருமாக வாருங்களேன்!'' என்று அவர் அழைத்தார். நாங்களும் வருவதாக ஒப்புக் கொண்டோம்.

திரும்பும் வழியில் ''அவர்தான் எங்கள் மாமா. தாயாருக்கு ஒரு முறையில் அண்ணனாக வேண்டும். கொஞ்சம் நாட்களாக எங்களுக்கு அதிகத் தொடர்பு இல்லை'' என்றான் சங்கரன்.



சட்டென்று எனக்கு ஞாபகம் வந்தது. அடிக்கடி தன் மாமா ஒருவரைப் பற்றி அவன் பேசுவதுண்டு. அவர் பெண் ஒருத்தியைக் குறிப்பிடுவதும் உண்டு. அந்தப் பெண் தானா இவள்?

பார்வதிக்கும் எனக்கும் மணம் செய்து வைக்க வேண்டுமென்று அவருக்கு ஆவல்'' என்று என்னைப் பார்த்தான் அவன். நான் பதில் சொல்லவில்லை. அவன் கொடுத்து வைத்தவன்தான். என் மனத்தில் பொறாமையின் நிழல் படர்ந்து விடுமோ என்று எனக்கே ஒரு சந்தேகம். கோவிலில் சந்தித்த பெண்ணை மறக்க எண்ணினேன்.

அன்று இரவு சாப்பிட்டபிறகு இருவரும் உட்கார்ந்து பேசும்போது வாய் தவறி என்னையறியாமல் அந்தப் பேச்சு வந்து விட்டது. என் மனத்தில் பதிந்து நின்ற அந்தப் பார்வை கனிவு பிறந்த கண்களில் நிறைந்து நின்ற அனுதாபம் -அதைக் குறிப்பிட்டேன். என் குரலில் இருந்த துடிதுடிப்பை உணர எனக்கே அதிசயமாகத்தான் இருந்தது. அதை அவனும் புரிந்து கொண்டிருக்க வேண்டும்.

அதற்குப் பிறகு அருவிக்கரைக்குப் போகும் போதெல்லாம் அவர்களைச் சந்திப்பதும், அவர்கள் வீட்டுக்குப் போவதும் எங்களுக்கு வழக்கமாகி விட்டது.

இதில் எங்கள் இருவரில், அதிக ஆர்வமும் மகிழ்ச்சியும் கொண்டவன் சங்கரன்தான். அவர்கள் விடுதிக்கு முன்னால் தோட்டத்தில் உள்ள பசுமையான புல்வெளியில் உட்கார்ந்து மூவரும் பொழுதுபோவது தெரியாமல் பேசுவோம்.

கலகலவென்று பேசி மகிழும் விளையாட்டுச் சுபாவம் அவளுக்கு. பேச்சின் நடுவே கலீரென்று சிரிப்பாள். குழந்தையைப் போலப் பரிகாசத்தில் ஈடுபடுவதும் உண்டு. நல்ல வெய்யிலை மேகம் மறைப்பது போல், நடு நடுவில் அவள் முகத்தில் கவலை வந்து சூழ்ந்து கொள்ளும். சந்தேகத்தில் ஆழ்ந்தது போன்ற உணர்ச்சி கவிந்து கொள்ளும். சிறிது நேரம் பேசவே மாட்டாள். எதையோ நினைத்து உருகுவது போன்ற அவள் தோற்றம் என்னை நெகிழ வைக்கும். அதன் மர்மம் எனக்கு விளங்கவில்லை.

எங்கள் இருவரில் என்னிடம் பேசுவதில் அவளுக்குப் பிரியம் அதிகம். பலவிதமான விஷயங்களை ஆர்வத்தோடு விவாதிப்பாள். எனக்கும் பேச்சில் அவளுடன் போட்டி போடுவதில் ஒரு திருப்தி. இதை எவ்வளவு தூரம் சங்கரனால் ரசித்திருக்க முடியும்? அவன் சில சமயம் பேசாமலே கூட இருந்து விடுவான். கலங்கிய அவன் மனம் பார்வையில் தெரியும். அவன் புழுங்குவதை எண்ணி என்னையே அடக்கிக் கொள்வேன்.

அந்த நினைவு மட்டும் என்னை ஆட்டி வைத்தது. அருவி போலக் குதூகலமாகக் கொட்டிய அவள் பேச்சின் நடுநடுவே புகுந்து கொண்ட அந்தச் சோகத்தின் காரணம் என்ன? விளக்க முடியாமல் அவள் மனத்தில் சிறைப்பட்டிருக்கும் அந்தத் துயரம்தான் என்ன? ஒவ்வொரு தடவை அவள் பார்வையை நேருக்கு நேர் சந்திக்கும்போது எனக்குப் புரியாமல் அதில் பொதிந்து கிடந்த இரகசியம் என்ன? அது என் உள்ளத்தைத் தொடுவானேன்? அதற்கு உருவம் கொடுக்க இயலாமல் நான் இப்படித் தடுமாறுவானேன்?

கடைசியாக ஒரு நாள், அது கடைசி நாள் என்று அப்போது எனக்குத் தெரியாது. நாங்கள் பேசிக் கொண்டிருந்த போது சங்கரன் எழுந்து வெளியே போய் விட்டான். அதை நாங்களும் கவனிக்கவில்லை. வாசலில் யாரோ வரும் சத்தம் கேட்டது. இரண்டொரு ஆட்கள் உள்ளே போனார்கள்.

சட்டென்று அவள் முகத்தில் இருந்த குதூகலம் மங்கியது. நெற்றியில் வியர்வை துளித்தது. கலவரத்தில் தடுமாறுபவளைப் போல அவள் குழம்பிப் போனாள்.

''யாரது?'' என்று கேட்டேன்.

''வைத்தியம் செய்பவர்கள்!'' என்றாள்.

''வைத்தியமா? யாருக்கு?'' என்று என் மனம் தடுமாறியது. அவள் எழுந்து உள்ளே போனாள். நானும் பின்தொடர்ந்தேன்.

அரைமணி நேரத்துக்குப் பிறகு சங்கரனை நான் தோட்டத்தில் சந்தித்தேன்.

''எங்கே போயிருந்தாய்?'' என்று கேட்டேன். அவன் சரியாகப் பதில் சொல்லவில்லை. தென்காசிக்குத் திரும்பினோம்.

மழை தூறிக் கொண்டிருந்தது. வானம் இருண்டு கிடந்தது; மரங்களிலிருந்து இருபுறமும் தண்ணீர் கொட்டிக் கொண்டிருந்தது. சாலையில் பள்ளங்களில் தேங்கிக் கிடந்த நீரைப்

பஸ் கடந்து சென்ற போது வாரி இறைத்த நால் திவலைகள் மின்னின.

தென்காசியில் எனக்காக ஒரு தந்தி காத்துக் கொண்டிருந்தது. உடனே ஊருக்குப் புறப் பட்டு வரச்சொல்லி என் தந்தைதான் அழைத் திருந்தார். மறுநாள் காலை மெயிலில் புறப் பட வேண்டும்.

அன்று இரவு சங்கரனும் நானும் மாடி யில் உட்கார்ந்து கொண்டிருந்தோம். ஏதோ பேச்சு வந்தது. அவனே கேட்டு விட்டான்.

"பார்வதி என்ன பேசிக் கொண்டிருந்தாள் உன்னிடம்?"

"ஒன்றுமில்லையே?" என்று மழுப்பினேன்.

"நீ அவளிடம் ஜாக்கிரதையாகப் பழக வேண்டும்."

நான் பதில் சொல்லவில்லை.

"அவளுக்கு அந்த வியாதி உண்டு, ஆரம் பத்திலேயே உன்னிடம் நான் எல்லாவற்றை யும் சொல்லியிருக்கலாம். சொல்லாதது என் பிசகு. நீ அங்கே அடிக்கடி போகவேண்டு மென்று சொன்னதினால்தான் நானும் அங்கே போக வேண்டியதாயிற்று."

"என்ன சொல்லுகிறாய்?"

"ஆமாம்! அவர்கள் குற்றாலத்துக்கு வந்து தங்குவதே அதற்குத்தான். இந்த இடமும், குளிர்ந்த அருவியும், வைத்தியமும், அந்த வியாதியைச் சரிப்படுத்தி விடுமென்று அவர்கள் நினைக்கிறார்கள். மூளைக் கோளாறு உள்ளவர்கள் கோடைக்காலத்தில் இது போன்ற இடத்தில் வந்து தங்குவதுதான் நல்லது. அவளுக்குச் சித்தப்பிரமை. நடுநடுவில் அவள் கலங்கி நிற்பதுகூட அதனால்தான்."

நான் அவனை வெறித்துப் பார்த்தேன். அவன் தன் பார்வையை வேறுபுறம் திருப்பிக் கொண்டு விட்டான்.

"அவர்களிடம் அடுத்த தடவை பார்க்கும் போது நான் ஊருக்குப் போய் விட்டதாகச் சொல், சங்கர்! நான் சொல்லிக் கொள்ளாமலே வந்து விட்டேன்!" என்றேன். மனத்தின் சுமை என் குரலையும் அழுத்தியது.

அப்புறம் நான் பார்வதியைச்சந்திக்கவில்லை. சங்கரனுக்கு மாத்திரம் அவ்வப்போது கடிதம் எழுதுவேன். தமிழ் நாட்டையே விட்டு வேலைக்காக ஹைதராபாத் போகும் அவசியம் எனக்கு ஏற்பட்டது. ஆயிரம் மைல்களுக்கு அப்பாலிருந்து நான் பிறந்த திருநெல்வேலி மாவட்டத்தை எண்ணிவெதும்புவேன். தாமிர பரணி ஆற்று மணலில் விளையாடிய பிள்ளைப் பருவம், அம்பாசமுத்திரம் கோவில் தடாகத் தில் கயல் மீன்களுடன் பொரியை இறைத்து விளையாடி மகிழ்ந்த நாட்கள், பெரிய பையனாக வளர்ந்தபிறகு பாபநாசத்துக்கும் கல்யாணி தீர்த்தத்துக்கும் போய் மெய்யார மூழ்கிக் குளித்த நாட்கள்—இவைகளின் நினைவில் திளைத்துப் போவேன். நான் குடியிருந்த அப்ஸல்கஞ்சிலிருந்து வேலைக்காக ஜுபிலி கார்டன்ஸ் வரை நடந்து போகும்போது வழி யில் நந்தவனத்துச் செயற்கை அருவியையும், புல்வெளியில் குதித்து ஓடும் சிற்றாறுகளையும் பார்க்கும் போது குற்றாலத்தின் நினைவு என்

ஒற்றுமை — புதிய ரகம்



"உலகத்தில் சகோதரர்களின் ஒற்று மைக்கு உதாரணம் காட்ட வேண்டு மானால், அதோ போகிறார்களே அவர் களைத்தான் சொல்ல வேண்டும். எவ் வளவு அன்னியோன்யம்! எவ்வளவு ஒற்றுமை! பாருங்களேன். நேற்று பாகம் பிரித்துக் கொண்ட போதுகூடச் சகோதரர்களுக்குள் ஒரு சண்டை சச் சரவு, ஏதாவது வரவேண்டுமே; ஊஹூம் பேசப்படாது!"

மனத்தில் படரும். அப்போது ஓர் உருவம் என் மனத்தில் அகிற் புகையின் மணம் போல் சுழன்று வரும். என் வசமிழந்து நிற்பேன்.

ஒரு மாதம் முன்புதான் எனக்கு லீவு கிடைத்தது. ஊருக்கு வந்திருந்தேன். அப் போதுதான் சங்கரனின் கலியாண அழைப்புக் கடிதம் எனக்குக் கிடைத்தது. கடிதத்தைப் பார்த்ததுமே எனக்கு மணமகள் யார் என்று புரிந்து விட்டது. அது வேறு எந்தப் பார்வதி யாக இருக்க முடியும்?

பழைய நினைவுகள் மனத்தில் புரைவோடின. உடைந்து போன கண்ணாடித்துண்டுகளை ஒட்ட வைத்து முகம் பார்ப்பது போலக் கடந்து போன நிகழ்ச்சிகளை மனத்திரையில் சீர்ப் படுத்தி வைத்துப் பொழுது போக்கினேன்.

ஹைதராபாத்திலிருந்த போது இந்தக் கடிதம் வந்திருந்தால் கலியாணத்துக்கு வந் திருக்க மாட்டேன். இப்போது அருகிலேயே இருக்கிறேன். நான் வராமல் இருந்தால் அவன் தப்பாக எடுத்துக் கொள்வான். தவிர, சங்கரன் மணக்கப் போகும் அந்தப் பெண், எனக்கு ஏற்கனவே அறிமுகமாயிருந்த பெண் தானா என்று நிச்சயம் செய்து கொள்ள வேண்டுமென்ற ஆவலும் என்னை ஆட்கொண் டது. அதனால்தான் புறப்பட்டு வந்தேன். இப்போது பார்த்தும் ஆயிற்று. என் மனம் தெளிந்து விட்டது. இனிமேல் எனக்கு என்ன வேலை இங்கே?

# வெல்லவனுக்கு !



அம்மா : எப்பவும் சுறுசுறுப்பாக எறும்பைப் போல் இருக்கணும் !

சிறுவன் : ஆனால் வெல்ல டப்பா கிட்டே மட்டும் போகக் கூடாதுன்னு சொல்றியே !

நல்ல [illegible]. நாதசுரக்காரன் பொழிந்து தள்ளிக் கொண்டிருந்தான். தென்றலில் மிதந்து வந்த இசை மனத்தின் எதிரொலியாய் எண்ணங்களை மீட்டிச் சூழ வைத்தது.

சங்கரன் அதிருஷ்டசாலி. உண்மைதான். ஆனால் நான்தான் விட்டுக் கொடுத்தேன். நான் மட்டும் விரும்பியிருந்தால் பார்வதியை மணந்து கொண்டிருக்க முடியும். நான் அப்படிச் செய்யவில்லை. அவளுக்கு என் மீது ஒரு பிரமை விழுந்திருந்ததை நான் உணராமல் இல்லை. கனிவும் குழைவும் நிறைந்த அந்தக் குரல் என் இதய அந்தரங்கத்தில் நான்கு ஆண்டுகளாக ஒலித்து என்னைக் கூறாக வைத்திருக்கிறது. அன்பும் பரிவும் கலந்து, அவள் என்னை நோக்கிய பார்வையின் நினைவு என் மனத்தில் தேனாக இனித்து என் வேதனையைத் தூண்டி விட்டிருக்கிறது. தாய்மையான அவள் உருவம் என் மனக் கண்ணாடியில் நின்று என்னைத் தூக்கமில்லாமல் அடித்ததுண்டு. இருந்தும் பார்வதியை, நான்தான், சங்கரனுக்காக, என் ஆருயிர் நண்பனுக்காக, இழக்கத் துணிந்தேன். அவளை மணந்துகொண்டால் தான் அவன் சந்தோஷமாக இருப்பான் என்று என்னைத் திடமாக நம்ப வைத்தது அந்தச் சம்பவம். அதனால் நான்தான் விட்டுக் கொடுத்தேன்.

பின்னால் ஆள் அரவம் கேட்டது. திரும்பிப் பார்த்தேன். ஜரிகை உடைகளைக்கூடக் களைந்து விடாமல் சங்கரன் நின்று கொண்டிருந்தான்.

"கன்கிராஜுலேஷன்ஸ் !" என்றேன். என் குரல் கம்மியது.

அவன் என்னை நிமிர்ந்து பார்த்தான். விழிகள் நீரில் பனித்திட்டன.

"பார்வதியைப் பார்த்தாயா மணி ?"

தலையை ஆட்டினேன்.

"என்னை......என்னை......நீ மன்னித்துக் கொள்ள வேண்டும், மணி !"

"எதற்காக ?"

"உன்னிடம் ஒரு பெரிய பொய்யைச் சொன்னதற்காக !"

நான் பதில் பேசவில்லை.

"என்னை மன்னித்துக் கொள், மணி. மனமறிந்து உன்னிடம் உண்மையை மறைத்தேன். குற்றாலத்துக்கு வைத்தியத்துக்காக வந்தது பார்வதியின் தகப்பனார். அந்தச் சூழ்நிலைக்காகவும் குளிர்ந்த அருவிக்காகவும், வந்தவருக்குத் துணை வந்தவள்தான் பார்வதி. அவரைப் பற்றிய கவலைதான் பார்வதியை வருத்திக் கொண்டிருந்தது.

"உண்மையை ஒப்புக் கொள்கிறேன். பார்வதி உன்னோடு பழகுவதை நான் கவனித்தேன். அவளுக்கு உன் மேல் ஒரு பிரமை விழுந்திருந்தால் அதில் ஆச்சரியமில்லை. எல்லா விதங்களிலும் நீ என்னைக் காட்டிலும் உயர்ந்தவன். அதற்காக உன்னிடம் அவளுக்குச் சித்தம் சரியில்லை என்று சொன்னேன். அப்படிச் சொன்னால் நீ அவளை மறந்து விடுவாய் என்று எண்ணினேன். நீயும் நம்பி விட்டாய் !"

"நான் நம்பவில்லை !"

"என்ன ?"

"ஆமாம். நான் ஊருக்கு வருவதற்கு முதல் நாள்தான் அவருக்கு வைத்தியம் நடப்பதை நானே கண்ணால் பார்த்தேன். பார்வதியும் என்னிடம் சொன்னாள். அப்போது நீ இல்லை. அன்று இரவு நீயாக என்னிடம் அப்படி மாற்றிச் சொன்னாய். நீயும் நானும் மனம் விட்டு எத்தனையோ விஷயங்களைப் பேசியதுண்டு; ஒன்றிப் பழகியதுண்டு. என்னிடமே நீ உண்மையை மறைக்கிறாய் என்றால் நீ எவ்வளவு தூரம் அவள் மேல் காதல் கொண்டிருந்தாய் என்று தெரிந்து கொண்டேன். நீ எனக்குச் செய்த உதவிகள் எவ்வளவோ ? அவைகளுக்கெல்லாம் பதிலுதவி செய்யும் சக்தி இல்லை. இந்த விஷயத்தில் நான் ஒதுங்கி, அதனால் நீ சந்தோஷமாக இருக்க முடியுமானால், அதுவே என் கடமை என்று எண்ணினேன். பார்வதியை மணந்து கொள்ளும் பாக்கியத்தை உனக்கு மனமுவந்து என் அன்புப் பரிசாக நானேதான் அளித்தேன், சங்கர் !"

அவன் பதில் பேசவில்லை. அந்த நேரத்தில் என் மனம் அது வரையில் காணாத அமைதியைக் கண்டது.

மறு நாள் காலையில் கல்யாணம். வீடு ஒரே அமளியாக இருந்தது. சங்கரனின் தம்பியிடம் திருமணப் பரிசாக வாங்கிக் கொண்டு வந்திருந்த புத்தகங்களைக் கொடுத்து விட்டு ரயிலில் ஊருக்குக் கிளம்பி விட்டேன்.

ஆமாம்! பார்வதியின் கல்யாண வைபவத்தை நான் பார்க்கவில்லைதான். சங்கரனுக்கும் அவளுக்கும் என் மனம் கனிந்த வாழ்த்துக்களை நேரில் அளிக்க வேண்டுமென்றுதான் ஆசை. ஆனால் அவ்வளவு மனோதிடம் எனக்கு இல்லையே என்ன செய்வது ·

Printed and Published by R. Ananthanarayanan for the Proprietors Messrs. Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras 10
Managing Editor: T. Sadasivam

